உ

சிவமயம்

# சனாதன சைவ விளக்கம்

இலக்கிய கலாநிதி பண்டிதர்

**மு. கந்தையா**



கொழும்பு - சிவத்திருமன்ற வெளியீடு

உ

சிவமயம்

# சனாதன சைவ விளக்கம்

அறிவியற் பண்பாட்டியக்கப் பிரசாரங்கள் பத்தின் தொகுப்பு



இலக்கிய கலாநிதி.
பண்டிதர். மு. கந்தையா

| | | |
|---|---|---|
| நூல் | : | சனாதன சைவ விளக்கம் |
| நூலாசிரியர் | : | கலாநிதி. பண்டிதர். மு. கந்தையா |
| வெளியீடு | : | கொழும்பு - சிவத்திருமன்றம் |
| நூல் உரிமை | : | கொழும்பு - **சிவத்திருமன்றம்**<br>தொலைபேசி : **737533** |
| பக்கங்கள் | : | 132 |
| அச்சுப்பதிப்பு | : | டெக்னோ பிறின்டர்ஸ்<br>581 - 2/1, காலி வீதி<br>கொழும்பு - 06 |
| நூல் பெறும் இடம் | : | திரு. மா. வாமதேவன்<br>13 A, 40ம் ஒழுங்கை<br>வெள்ளவத்தை<br>தொலைபேசி : 508188 |
| விலை | : | ரூபா 100.00 |

உ
*சிவமயம்*



*சைவ மெய்யியல் மாதுமெய் பொடிப்பத்*
*தரிழுந் தெய்வீகத் திருநிலைக் குயரத்*
*தெய்வ நீறுகண் டிகையுமஞ் செழுத்துந்*
*திசைய டங்கலுந் தேசுறிக் கொளிர*
*உய்வ தோர்நெறி நால்வர்நன் னெறியென்*
*றோகை மீக்கிளர்ந் துலகெலாம் மலர*
*வைய முய்ந்திட வாழ்வருள் நால்வர்*
*மலர்ச்செ ழும்பதம் வாழ்த்தியுய் வுறுவாம்*

— *பண்டிதர் மு. கந்தையா*

## பொருளடக்கம்



# அணிந்துரை

ஏழாலையூர் இலக்கிய கலாநிதி பண்டிதர் மு.கந்தையா அவர்கள் தமிழ், சமஸ்கிருதம், ஆங்கிலம் ஆகிய மும்மொழிகளிலும் பாண்டித்தியமுடைய மும்மொழி அறிஞர். "சிவதருமோத்திரம்" சுப்பிரமணியக் கடவுளால் அகத்திய முனிவருக்கு உபதேசிக்கப்பட்டதாகும். அச் சிவதருமோத்திரத்தில் கூறப்பட்ட ஒன்றற்கொன்று ஏற்றமாகிய கன்மவேள்வி, தவவேள்வி, செபவேள்வி, தியான வேள்வி, ஞானவேள்வி என்னும் ஐவகை வேள்விகளுள் முன்னைய நான்கும் போகத்தையூட்டுவனவாகும். ஐந்தாவதாகிய ஞானவேள்வி ஒன்றே வீடுபேற்றைத் தருவதாகும் என்பது இதை அநுவதித்து அகச் சந்தானாசாரியர்களுள் ஒருவராகிய அருணந்திசிவாசாரியர் தாமருளிய சித்தாந்த சாத்திரத்துள் ஒன்றாகிய சிவஞானசித்தியாரில்,

"ஞானநூல் தனையோதல் ஓதுவித்தல்
நற்பொருளைக் கேட்பித்தல் தான்கேட்டல் நன்றா,
ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும்
இறைவனடி யடைவிக்கும் எழில் ஞானபூசை
ஊனமிலாக் கன்மங்கள் தபம்செபங்கள் தியானம்
ஒன்றுக்கொன் றுயருமிவை ஊட்டுவது போகம்
ஆனவகையான் மேலான ஞானத்தால் அரனை
அருச்சிப்பர் வீடெய்த அறிந்தோர் எல்லாம்"

இந்நிலையைப் பண்டிதர் ஐயா உணர்ந்திருந்தார். அதனால் ஞானநூலை ஓதுதல், ஓதுவித்தல், பொருளைக் கேட்பித்தல், தான் கேட்டல், பொருளைச் சிந்தித்தல் என்ற ஐவகைப்பட்ட ஞான வேள்வியைத் தன் வாழ்க்கையில் மேற்கொண்டார்.

சிவஞானசித்தியாருக்கு விளக்கவுரை எழுதி சிவஞானசித்தித் திறவுகோல் என்ற நூலை வெளியிட்டார். சித்தாந்தச் செழும்புதையல், சித்தாந்த விளக்கிற் சைவக் கிரிகைகள். பெரியபுராணச் சிந்தனைகள், திருக்கேதீஸ்வர மான்மியம் முதலிய பல சைவசித்தாந்த நூல்களை வெளியிட்ட சைவ சித்தாந்த தத்துவஞானி ஆவர். இவரிடங்கற்றுத் தேறிய சைவ அறிஞர்கள் பலர்.

"தெய்வம் சிவமே; சிவனருள் சமயம்
சைவம் சிவத்தோடு சம்பந்தம்"

என்பது சனாதன சைவசமயம். இக்குறிக்கோளைக் கடைப்பிடிப்பவர் பண்டிதர் ஐயா அவர்கள். தமிழையும் சைவத்தையும் இரு கண்களாகக் கொண்டவர். ஆலயம் ஆன்மாக்கள் இலயப்படுவதற்கும், தமிழ் சைவ கலை, கலாசாரங்கள் துலங்கவைக்கும் இடமென்றும் உணர்ந்தார். கல்விக்கூடங்களிற் கல்வி கற்பிக்கும் ஆசிரியர்களதும் கற்கும் மாணவர்களினதும் ஒழுக்கம் திறம்பட இருக்க வேண்டும் என்பதும் அவர் உணர்வு.

இவ்வுணர்வுகளால் உந்தப்பட்ட பண்டிதர் ஐயா அவர்கள், இவற்றில் ஏற்படும் தவறுகளைச் சுட்டிக்காட்டித் திருத்திச் சீர் செய்யும் நோக்கமாக, "சைவத் தமிழ்ப்பண்பாட்டு இயக்கம்" அமைத்து அதன் மூலம் அவ்வப்போது கண்டித்தும் திருத்தியும் பிரசுரங்களை வெளியிட்டு வந்தார். இப்பிரசுரங்களுக்கு அறிவியற் சங்கங்களினதும், அறிஞர்களினதும் அநுசரணைகள் கிடைத்தன.

அவர் மறையும் வரை வெளியிட்ட பிரசுரங்கள் பத்து எமது பார்வைக்கு வந்தன. நல்லை நாவலர் ஐயா வழிநின்று கண்டிக்கும் கண்டனங்களும், கண்டனத் திருத்தங்களும், கண்டன ஆன்மவீறும் அவற்றின் மிளிர்ந்தன.

சைவத்தமிழ்க் கலைகலாச்சார மேன்மை கொள் சைவநீதி விளக்க திருத்தக் கண்டனங்கள் தொகுப்பு நூலாக கொழும்பு சிவத்திருமன்றம் வெளியிடுகின்றமை சைவத்தமிழ் மக்கள் யாவரதும் வரவேற்பிற்குரியது.

ஏகான்மவாத சங்கராச்சாரியர் வகுத்த இந்துசமய சண்மதத்துளொன்றான சைவம், சனாதன சைவசமயமன்று. இந்து சமயமுமன்று. இருந்தும் மாணவர்கள் கற்கும் சைவ சமயப் பாடபுத்தகமான "சைவநெறி" என்ற நூலிலும் இந்துசமயம் சண்மதத்தில் ஒன்றெனக் கூறப்பட்டுள்ளது. சைவம் இந்து சமயம் எனக் கருதும் நிலை வேரூன்றிவிட்டது. இதன் கண்டனத்திருத்தம் முதலாம் இரண்டாம் பிரசுரங்களில் அடங்கியுள்ளது.

சைவத்தமிழ் கலைகலாச்சாரம் வளர்க்குமிடம் ஆலயம். அங்கு பணிபுரிபவர்களில் முதன்மையானவர்கள் சிவாசாரியர்கள். அடுத்து நிர்வாகிகள்.

சைவக் குருபீடங்களின் ஒழுங்கற்ற நிலை, கோயிற்கிரியைத் தவறுகள், தெய்வ இலட்சணமற்றவர்க்குக் கோயில் அமைத்து



சைவாகமக்கிரியை செய்தல் இவ்வாறான செயல்கள் சைவாகம நெறிக்குப் புறம்பானவை.

கோயில் அமைப்பு, பிரதிட்டை, கும்பாபிஷேகம், நித்திய நைமித்தியக் கிரிகைகளின் தத்துவார்த்தமான விளக்கங்கள், கோயில் நிர்வாகிகள், பூசகர்கள் செய்யும் நெறிமுறைத் தவறுகள் ஆகியனபற்றிய கண்டனத்திருத்தங்கள் பிரசுரங்கள் நான்கிலும் ஐந்திலும் அடங்கியுள்ளன. இவை பண்டிதர் ஐயாவின் ஆகம அறிவின் விளக்கத்தை எடுத்துக் காட்டுகின்றன.

இலங்கையில் குருபீடங்களின் ஒழுங்கீனநிலை பற்றிய திருக்கேதீஸ்வர அறங்காவலர் உயர்திரு இ.நமசிவாயம் அவர்களின் வெளியீடு பண்டிதர் ஐயாவின் அநுவாதக் குறிப்புடன் ஏழாவது பிரசுரத்தில் வெளியிடப்பட்டுள்ளது. ஆசிரியர்கள், மாணவர்களின் கற்பித்தல் கற்றல் திருத்த வெளியீடு மூன்றாவது பிரசுரமாகும். ஆஞ்சநேயர் சைவவழிபாட்டுத் தெய்வமன்று என்ற பிரசுரம் பத்தாவதாகும். பிரதான சில வெளியீட்டின் இலக்கங்கள் குறிப்பிடப்பட்டன.

அகில இலங்கைத் திருமுறை மன்றம் திருமுறைப்பெருவிழா (29.05.99) பண்டிதர் ஐயாவின் தலைமையுரை சைவ நன்மக்கள் யாவரையும் சிந்திக்க வைத்துள்ளது. அதில் சைவ வளர்ச்சி குறைவடைதற்குரிய காரணங்களையும், திருத்தங்களையும் வெளியிட்டு உள்ளார்.

" முன்னவனார் கோயில் பூசைகள் முட்டின்
மன்னர்க்குத் தீங்குள மாரி வளங்குன்றும்
கன்னங் களவு மிகுந்திடுங் காசினி
என்னரு நந்தி எடுத்துரைத் தானே"

என்பது திருமந்திரம். கோயில் பரிபாலனத்தில் முட்டு ஏற்படக் கூடாதென்பதும் பண்டிதர் ஐயாவின் உள்நோக்கு. அம்முயற்சியில் ஈடுபாடுடையராய் விளங்கினார். நிகழும் குறைகளைக் கூறி நிறைவாக்கும் நோக்குடனேயே பிரசுரங்களை வெளியிட்டுள்ளார். பிராமண சமூகத்தினரிடமோ, கோயிற்பரிபாலனரிடமோ, ஆசிரிய சமூகத்தினரிடமோ மற்ற வேறு எவரிடமோ அவர் எவ்வித துவேசமும் கொண்டவரல்லர். குறை அவரவரிடமிருப்பின் திருத்தந் தேடுவது சைவநீதி.

**வி. சங்கரப்பிள்ளை**
போஷகர், சிவத்திருமன்றம்
சைவசித்தாந்த ஆசிரியர், பன்னாலை.

# பதிப்புரை

சிவனுக்கும் சீவனுக்கும் உள்ள சம்பந்தத்தை விளக்குவது சைவம். அதாவது, சிவன் சீவனுக்கு உபகரிக்கும் வகைகளையும், அவற்றை அடைய சீவன் மேற்கொள்ள வேண்டிய நடைமுறைகளையும் விரிவாகவும் தெளிவாகவும் விளக்குவது சைவம் எனவே, என்று சிவனும் சீவனும் உண்டோ, அன்றே சைவமும் உண்டு என்பது புலனாகும். இதனால் இது சனாதன சமயம் ஆம். விட்டு விட்டு ஒளிவீசும். விண்மீன்கள் போலச் சைவமும் அன்னியர் ஆதிக்கத்தால் ஒருகால் மழுங்கியும், அருளாளர்களினது சேவைகளால் பின் ஒருகால் துலங்கியும் வந்து கொண்டிருந்தது.

தற்காலத்தில் சமய உயர்ச்சி பல வகைகளிலும் நிலை குலைந்திருப்பதோடு, சைவ சமய நெறிமுறைகளும், கோவில் நடைமுறைகளும் பெரிதும் பாதிப்படைந்து வருகின்றன. இதற்கு, பிறசமயத்தவர் சிலரின் தலையீடும், தாம் சைவசயத்தவர் என்று வெளிக்காட்டிக் கொண்டு உள்ளீடாக சைவத்தை மாசுபடுத்தும் செயல்களில் ஈடுபடுபவர்களின் செயல்களும் முக்கிய காரணிகளாகும். இவற்றை இனங்கண்டு விலக்கி, சைவ நன்னெறியைத் துலங்கச் செய்வது சைவ நன்மக்கள் ஒவ்வொருவரினதும் கடமையாகும்.

அண்மையில் மறைந்த இலக்கியக்கலாநிதி பண்டிதர் மு.கந்தையா B.A அவர்கள் இதனைச் சிரமேற் கொண்டு ஆற்றிவந்துள்ள பணிகள் பலப்பல. சைவசித்தாந்த சாத்திர நூல்களில் பொதிந்துள்ள கருத்துக்களையும் புராணங்களிலுள்ள கருத்துக்களையும் வசன நடையில் எழுதிப் பல புத்தகங்கள் வெளியிட்டுள்ளார். சைவ ஆலயங்களில் பூசைகள், வழிபாடுகள் முதலியவற்றில் நிகழும் குறைகளையும், அதற்கான காரணங்களையும் அவற்றைத் திருத்தும் வழிவகைகளையும் விளக்கிப் பல பிரசுரங்கள் வெளியிட்டும், கூட்டங்களில் பேசியும் வந்துள்ளார். இவை அவர் ஆற்றிய அளப்பருஞ் சேசைகள் பலவற்றுள் சில. இவர் வெளியிட்ட பிரசுரங்கள் பத்தும் "அகில இலங்கைத் திருமுறை மன்றம்" 29.05.99ல் நடாத்திய "திருமுறைப் பெருவிழாவில்" இவர் நிகழ்த்திய தலைமைப் பேருரையும்



சிவத்திரு மன்றத்திற்குக் கிடைத்தன. இவற்றை வாசித்தறிந்த மன்றத்தினர், பூவில் நறுமணம் எங்கும் பொருந்திருப்பது போல, சைவத்திற்கு இழைக்கப்பட்டுவரும் அநீதிகளும், நிகழும் குறைபாடுகளும், அவற்றை நிவிர்த்தி செய்யும் வழிவகைகளும் எல்லாப் பிரசுரங்களிலும் செறிந்திருப்பதைக் கண்டனர். எனவே இவை சைவ அபிமானிகள் அனைவரும் அறிய வேண்டிய விடயங்கள் என்பதனை உணர்ந்தும், சைவ நலன் கருதியும் இவை அனைத்தையும் ஒரு புத்தகமாக வெளியிடத் தீர்மானித்தனர்.

இக்கட்டுரைகள் ஒவ்வொன்றின் முடிவிலும் பண்டிதர் ஐயா அவர்கள் தனது முகவரியைப் பிரசுரித்து அவ்வக்கட்டுரைகளை பற்றி மக்களின் அபிப்பிராயத்தைக் கோரியிருந்தார். அவர் மறைந்து விட்டதால் அவரின் முகவரி நூலில் பிரசுரிக்கப்படவில்லை. மேலும் இக் கோரிக்கைக்கு அமைய மக்கள் எழுதிய அபிப்பிராயங்களும் அவற்றிற்கு பண்டிதர் ஐயா கொடுத்த விளக்கங்களும், ஏதாவது இருப்பின், அவை எதுவும் இற்றைவரையில் மன்றத்திற்குக் கிடைக்காததால் அவற்றை இங்கு பிரசுரிக்க இயலவில்லை என்பதை மிகுந்த மனவருத்தத்துடன் தெரிவிக்கின்றோம். 29.05.99ல் நடந்த திருமுறைப் பெருவிழாவில் பண்டிதர் ஐயா நிகழ்த்திய தலைமைப் பேருரையின் அருமை பெருமைகளை உணர்ந்து, அதனை முகவுரையாக இந்நூலில் வெளியிட்டுள்ளோம்.

சைவ அபிமானிகள், அன்பர்கள் அனைவரும் இந்நூலைப் பெற்று, பல முறை வாசித்து, சைவ சமயத்தின் தற்போதய நிலையை அறிந்து, அதனை நிவிர்த்தி செய்ய முன்வரத் திருவருள் துணைபுரிவதாக.

இந்நூலைத் திறம்பட வெளியிட உதவிய அனைவர்க்கும், அழகுற அச்சிட்டுதவிய டெக்னோ பிறின்றேஸ் அச்சகத்தாருக்கும் எங்கள் மன்றம் சார்பாக எமது மனமார்ந்த நன்றியைத் தெரிவிக்கின்றோம்.

வாழ்க சிவத்திருமன்றம் வளர்க சைவம்

சிவ சிவ.

**திரு. க. தனபாலசிங்கம்**
உபதலைவர்
கொழும்பு - சிவத்திருமன்றம்

# முகவுரை

(அகில இலங்கை திருமுறை மன்றம் நிகழ்த்திய திருமுறைப் பெருவிழாவில் இந்நூலாசிரியர் ஆற்றிய தலைமைப்பேருரை.)

***சைவப் பேரன்பர்காள்,***

சிவனுஞ் சீவனும் என்றுண்டோ அன்று தொட்டிருந்து வருவது சைவம். ஆதலால் இது சனாதன சைவம். கிறீஸ்த சகாப்த உதயத்துக்குச் சற்று முன்வரை அகில உலக சமயமாக இருந்ததும் இச் சனாதன சைவமே. அகில உலகிலும் வெளி வந்திருக்கும் அகழ்வாராய்ச்சிச் சான்றுகள் இதற்குப் புறச் சான்றுகள். இவற்றை விட அந்தரங்கமான அகச் சான்றும் உண்டு.

அகில உயிர்களின் சரித்திரத்திலும் ஒவ்வொன்றினதும் உருத் தெரியாக் காலத்திலேயே (அநாதிகேவல நிலை) ஒவ்வொரு உயிரிடத்தும் சிவன் தனதிருப்பைப் பதித்துக்கொண்டிருந்த செய்தி ஒரு கட்டம். அப்படி இருந்துகொண்டே அவ்வுயிரின் பந்த நிலைக் காலம் முழுதும் அதற்குத் தோன்றாததோர் பாங்கில் (திரோதான நிலை) அதற்கு வினைக்கீடான பிறப்பு, வாழ்வு, இறப்புகளை வழங்கி இம் மூவகையாலும் அதற்கு அதன் வினைப்பயன்களை கிரமப்பிரகாரமூட்டி, அதன் நிரந்தரத் தொல்லையாகிய ஆணவமயக்கத்திலிருந்து அதனை விடுவிக்க அச்சிவன் காலாதிகாலமாக முயன்றுகொண்டு வந்தது இரண்டாம் கட்டம். இனி வேண்டுமளவுக்கு அவ்விடுவிப்புப் பலிதமானதும் சிவன் தான் உயிருள் மறைந்திருந்த நிலை மாறி வெளிப்பட்டு தனது இருப்புப் பிரகாசமாகும்படி உயிரின் கருத்தில் தன்னை இருத்துதல் மூன்றாம் கட்டம். இவ்வாற்றால் உயிரின் ஆளுமை முழுவதையும் தன் ஆளுமைக்கு உள்ளாக்கிய (அடிமை கொளல்) வண்ணம் தன் பண்பான பேரானந்தத்தை உயிர் சுவாரசியமாக உணர்ந்து இன்புற வைத்துக்கொண்டு அதனை மேலும் விட்டு நீங்காதிருக்கும் நிலை நாலாங்கட்டம்.

> "உருத்தெரியாக் காலத்தே உள் புகுந்து / என்னுளம் மன்னிக்
> கருத்திருத்தி / ஊன்புக்குக் கருணையினால் ஆண்டு கொண்ட
> திருத்துருத்திமேயானைத் / தித்திக்கும் சிவபதத்தை /
> அருத்தியினால் நாயடியேன் அணிகொள்தில்லை கண்டேனே"



என்ற திருவாசகத்தில் குறித்த நான்கு நிலையும் குத்துக்கோடுகளால் பிரிந்து தோன்ற நிற்கும் விதம் காண்க. இங்ஙனம் சிவனுக்கும் சீவனுக்கும் இடையிலானதாக அன்றும் இன்றும் என்றும் உள்ள சம்பந்தமே சைவம்.

"சைவம் சிவனுடன் சம்பந்தம் ஆனது" என்று திருமூலர் அடக்கச் செறிவாக உணர்த்தியதும் இதையேதான்.

இந்த நிலையை மக்கள் தமது அறிவொழுக்க வழிபாட்டு நிலைகளால் தெளிவுறுமாறு வகுக்கப்பட்ட வாழ்க்கை முறைக்கும் பெயர் அதே சைவம் தான் வேறில்லை. இப்பெயரிலே தான் குறித்த சிவசீவ இணைப்பு விளக்கம் அதாவது தமிழராய எமது சமய உட்பொருள் விளக்கம் கொலுவிருக்கின்றது. இது வேறெப்பெயரிலும் இருப்பதுமில்லை இருக்க முடிவதுமில்லை.

ஆகக் குறைந்த பட்சம் கடைசி ஐயாயிரம் ஆண்டுகளுக்காவது நமது சமயப் பெயராக ஆன்றோர் ஆட்சியில் நூல் வழக்கில், பேச்சுவழக்கில் இத்தியாதி சகலவழக்கிலும் எமது பாரம்பரியம் இப்பெயர் வழக்கல்லா மற்றொரு பெயர் வழக்கையும் அறிந்ததில்லை. இப்பெயரிலட்சணத்துக்கேற்கச் சிவனே வாழ்முதல், அவனே முழுமுதல்வன் அவனை அடைதலே மோட்சம் ஆதலால், அவன் ஒருவனே. அவன் சத்தியாகிய அம்மன், அதன் சமயாசமயத் தோற்றமான விஷ்ணு, சிவன் அம்மன் ஒன்றிணைந்த தோற்றங்களான பிள்ளையார், முருகன் சிவனது கோர மூர்த்தங்களான வைரவர், வீரபத்திரர் என்பவை அவன் வளாகத்துள் அடங்க - வழிபடு கடவுளாகக் கொள்ளும் நிலையில் இரண்டுபடாது இருத்தலே அன்றி மற்றெதனையும் தொழத்தகும் தெய்வங்களாகக் கொள்ளும் நிலை சைவத்தில் இருந்ததில்லை. ஆரேனும் அறிவறியார் தமது குலதெய்வம், குடும்ப தெய்வம் இஷ்ட தேவதை என்ற பெயரில் சிலவற்றை தம் போக்கில் தம்பாட்டுக்கு வழிபட்டுவந்தமை கணியத்துக்கு உரிய தாக்கப்பட்டதில்லை.

ஆனால், இன்றெனிலோ இத்தலைமுறையில் மட்டும் இச்சைவநிலையில் தான் தோன்றித் தனமான மாறுதல்கள் இரவோடு இரவாகத் தலையெடுத்து வருதல் இன்றைய சைவம் எதிர்கொள்ளும் பேரின்னல் ஆகிறது. அம்மாறுதல்கள் பட்டவர்த்தனமானவை, பலரும் காண்பவை, தினசரிகள் மூலமும் தினசரி சந்திக்கு வந்துகொண்டிருப்பவை. ஆதலின், அவை இனம் சுட்டிக்கூறப்பட்டாக வேண்டியன ஆகாவிடினும் இவற்றுக்குக் காரணிகளாகவுள்ள பின்னணி நிலைகள்

அவசியம் அறியப்பட வேண்டியவை. அலசப்பட வேண்டியவை, பரிகார முயற்சிகள் மேற்கொள்ளப்பட வேண்டியவை.

அவை வருமாறு

1. சைவ சமயம் - இந்துசமயம் இருமையில் ஒருமை என்ற விளக்கம்.
2. ஷண்மதத்தில் ஒன்றென நாட்டப்பட்ட சைவம் சனாதன சைவம் தான் என்ற தவறான மேற்கோள்.
3. மாறும் உலகியலுக்குத் தக மாற்றங்களை ஏற்காவிடின் சைவத்துக்கு எதிர்காலம் இல்லை என்ற எடுகோள்.
4. நவீன ஆய்வியல் முடிவுகளை அனுபவஞான முடிவுகளாக மயங்கும் மயக்கம்.
5. சைவ சித்தாந்த ஞான விளக்கப்பிரசாரத்துக்கு ஏற்ற ஊடகங்கள், செய்தித் தொடர்பு சாதனங்கள் சமூகத்தில் இன்மை.
6. சைவத்தில் சுமார்த்த இடையீடு சைவசித்தாந்த மகிமைக்கு இழப்பீடாகும் என்ற பிரக்ஞை இன்மை.
7. சைவ ஸ்தாபனங்களின் பொறுப்புணர்ச்சி அற்ற போக்கு.
8. கல்வி அறிவாசார நெறியில் பண்பட்டு வாராதார் தலைமைத்துவ வேட்கையால் தகுதி உள்ளாரை ஓரம் கட்டிச் சைவ விஷயங்களைத் தாமே கையாள முனைந்து நிற்கும் விபரீதம்.
9. சைவ மேன்மைக்கு உண்மை நெறியில் உதவக்கூடியவர் என எதிர்பார்க்கப்படுவோரின் வேண்டா வெறுப்பு மனநிலை.
10. சைவ ஞான நிலை தழம்பாது இருக்குமாறு நிர்வகிக்க உத்தரவாதமுள்ள தலமைப்பீடம் இன்மை.
11. அர்த்தமற்ற கோழைமையே சைவ ஆளுமை ஆய்விட்ட அவலம்.

இவற்றில் சிலவற்றுக்குச் சுருங்கிய அளவிலான விளக்கம் அவசியமாகிறது.

சைவ சமயமும் இந்து சமயமும் ஒன்றல்ல. சைவம்தான் தமிழரின் சமயம். அது அனாதியான இயல்புச்சமயம்.

அதற்கெதிர் சமீபகாலத்தவரால் புதுப்படையலாகப் புனையப் பெற்ற சாரமற்ற சப்பைக்கட்டுச் சமயம் இந்து சமயம். இது தாங்கும்



இந்து என்ற சொல்லே தமிழுக்கும் சமஸ்கிருதத்துக்கும் அந்நியம். அச்சொல்லுக்குச் சமயச் சார்பான அர்த்தமோ அதைவிட அந்நியம். பாரசீகமொழி அகராதி அத்தாட்சி ஆக உள்ள உண்மை இது. "ஏகோஹி ருத்ர" என்பது போன்ற உபநிடத வசனங்கள் "சிவ ஏவ கோவல சிவைரகோத்யேய சிவம் கர என்பன போன்ற ஆகமவசனங்கள் "வணக்குறீர் சிவனை". "சித்தாந்தத்தே சிவம்தன் திருக்கடைக்கண் சேர்த்திச் செனன மொன்றிலே சீவன் முத்தராக - வைத்தாண்டு மலங்கழுவி ஞானவாய்மை மடுத்து ·ஆனந்தம் பொழிந்து மலங்கள் போக்கி - முத்தாந்தப் பாதமலர்க்கீழ்வைப்பான்" என்பன போன்ற சாஸ்திர வசனங்கள் "ஏக பெருந்தகையாகிய பெம்மான் "சிவனே-யானுந் தேறினன் காண்க", "சிவனோடொக்குந் தெய்வம் தேடினு-மில்லை" என்ற தோத்திர வசனங்கள் அனைத்தினாலும் உத்தர-வாதஞ் செய்யப்பட்டது சைவசமயம். இந்த உத்தரவாதத் தன்மையை உதாசீனப்படுத்தி அறிவாராய்ச்சிக்கு நின்று பிடிக்காத மாயாவாதம் என்ற தமது நவீனக் கொள்கையை மேம்படுத்தத்திட்டமிட்டு எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த சங்கரர் குழுவினர் நடைமுறையில் இருந்த சைவக்கட்டுக் கோப்பையே பிரித்துச் சிதைத்து அந்த சந்தங்கெட்ட ஆறு வேறு சமயமாக்கிப் புனைந்தபொதி இந்துசமயம். இதற்கு மேற்கண்ட உண்மை நூல்களில் பெயராட்சியே கிடையாது.

சைவர்களுக்குச் சிவன் மாத்திரமே அவனின் வேறலாத அம்மன் ஆதிகள் சகிதம் வழிபாட்டுப் பொருள். சுமார்த்தருக்கோ எனில் சைவத்தில் இருந்து பிரித்து முழுமுதல் தெய்வங்கள் ஆக்கப்பட்டவற்-றுடன் அவதார வடிவங்கள் அவற்றின் தொண்டர் தொழும்பர்கள் வடி-வங்கள் எல்லாங்கூடச்சிவனுக்கு ஒத்த வழிபாடு மூர்த்திகள். சைவர்-களுக்குச் சிவாகமமே வேதத்திலும் முக்கியமான ஆதார மூலம். சுமார்த்தருக்கோ எனில் வேதத்துடன் சிவாகமம் அல்லாத ஸ்மிருதி-களோடு நப்புச்சப்பற்ற வடமொழிப் புராணங்களும் ஆதார மூலம்.

சைவ சமயத்துக்குச் சிவன் என்ற ஒரே முழுமுதற் கடவுள். இந்து சமயத்துக்குச் சிவனோடு சமவலுவுள்ள மற்றும் ஐந்து முழுமுதற் கடவுள். சைவத்தில் பெத்தத்துக்கும் முத்திக்கும் சிவன் ஒருவனே பொறுப்புள்ள கடவுள் . இந்து சமயத்தில் பெத்தம் ஆறு கடவுளர் பொறுப்பு முத்தி பிரமத்தின் பொறுப்பு.

இனி ஷண்மதத்திலும் சைவம் உண்டு என்பது வெறும் மாசாலம். உண்மைச் சைவத்தைச் சித்திரவதைக்குள்ளாக்கிச் சிறைக்கைதி ஆக்கின நிலையே ஷண்மதச் சைவம். சுளை எடுத்து எஞ்சிய

வெறுந்தோல் அது. அச்சைவத்தில் சிவ சாதனப் போற்றுதல் இல்லை விபூதியே பூச்சளவுக்கு. பஞ்சாட்சர உண்மை விளக்கத்தில் ஒப்புதல் இல்லை. சிவாகம அனுசரணை இல்லை. அச்சைவம் ஸ்மிருதி வழிச்சைவம். அதற்குப் பெயர் சுமார்த்தம். சுமார்த்த சைவத்துக்குக் காலைத் தெய்வம் விஷ்ணு. மாலைத் தெய்வம் சிவன் இராத்திரித் தெய்வம் அம்மன். உண்மைச் சைவத்துக்கு 24 மணிநேரம் சிந்தனையுஞ் சிவனுக்கே. சுமார்த்த சைவத்துக்குச் காயத்திரி செபம், காயத்திரி ஹோமம் முக்கியம். உண்மைச் சைவத்துக்குப் பஞ்சாட்சர செபம் சிவாக்கினி ஹோமம் முக்கியம். உண்மைச் சைவத்துக்குச் சைவசாஸ்திரங்கள் உள் அகத்தில். சுமார்த்தசைவத்துக்கு அவை புறத்தில். சுமார்த்தசைவம் முதலாம் வர்ணத்துக்கு மட்டும். உண்மைச் சைவம் நால் வருணத்துக்கும். சுமார்த்த சைவத்தில் முத்தியில் வேறு ஊர்ஜிதப்படுத்தப்படாத ஒன்று. உண்மைச் சைவத்தில் அது சித்தாந்த சாஸ்திரரீதியாக விளக்கப்பட்டுத் திருமுறைகளால் அத்தாட்சிப் படுத்தப்பட்டுப் பிரசித்தமாக ஊர்ஜிதப்படுத்தப்பட்ட ஒன்று. எனவே, ஷண்மதசைவம் உண்மையான சனாதன சைவம் தான் என்பது சும்மா வெறும் மாசாலம்.

மாறும் உலகியலுக்கேற்பச் சைவமும் மாறவேண்டும் என்பது சைவஞான ரீதியாக மறுக்கப்படும் ஒரு மேற்கொள். ஒருகருத்தாவால் உரியகாரணத்திலிருந்து காரியநிலைக்குக் கொண்டு வரப்பட்ட ஒன்று மட்டுமே மாற்றத்துக்கு உள்ளாகும். ஒருவராலும் செய்யப்படாது தன்னிற்தானாக உள்ள ஒரு பொருள் ஒரு பொழுதும் மாற்றத்துக்கு உள்ளாகாது. அதாவது காரியப் பொருளுக்கு மட்டுமே மாற்றம் பொருந்தும் என்பது அனாதியான சைவஞானத்துணிபு. சமீபத்தில் பௌதீக ஞானத்துணிவிலும் இது வெளிப்பட்டிருப்பதாக அறியப்படுகிறது. முன் முதலாம் இராண்டாம் மூன்றாம் பந்திகளிற் கண்டவற்றுக்கிணங்கச் சைவம் காரியப்பொருள் ஆகாது தன்னில் தானாகவே உள்ள ஒன்று. எனவே, அது மாற்றத்தை ஒரு போதும் ஏற்காது. அது அவ்வாறாயினும் அதை அடையும் வழிமுறைகளில் காலத்துக்கு ஏற்ற மாற்றம் வரலாமே எனில் அதுவும் ஏலாது. ஏனெனில் அது நிருபணத்துக்கு ஒவ்வாது. எவ்வாறெனில் தன்னிலே தானாயிருக்கும் சைவ உண்மை அடையப்படும் நிலைக்கு உபகாரமாக உயிர் அதன் வண்ணமாய் நிற்றற்கு இன்றியமையாத அதி உயர் நடைமுறைகளே சைவத்தில் ஒழுக்கங்களாகவும் வழிபாட்டு நெறிகளாகவும் உள்ளவை மாற்றப்படும் நடவடிக்கைகளால் அது கைகூடும் என்பதை நிரூபிக்க ஏதுமில்லை. உதாரணத்துக்குப் பார்த்தால் பஞ்சாட்சர சாதனையால்



அதன்வழி நிற்கும் நெறியைக் காயத்திரி உபாசனையாற் பெறலாகும் என்பதை நிரூபிக்க இயலாது. ஏனெனில், உயிர் பாசம் நீங்கிப் பதியை அடையும் என்பதை நம்பகமாக விளங்கிக் கொள்ளுதற்கு உரிய பண்பு பஞ்சாட்சர அமைவில் உள்ளது போல் காயத்திரியில் இல்லை. சிவப்பேற்றுக்குச் சிறந்த சாதனங்கள் என்ற சாட்டில் சிலகாலமாக நம் மத்தியில் வந்திறங்கியுள்ள அகண்ட நாம பஜனை, அந்தர்யோகம், ஆழ்நிலைத்தியானம் முதலாயினவும் ஆன்றோர் அனுசரணை பெறாமைக்குக் காரணமும் அதுவே. எதுவெனினும் பாசநீக்கமும் சிவப்பேறும் என்ற இரண்டுக்கும் நம்பகமாகாத ஒன்று சைவத்துக்கு ஒரு போதும் உடன்பாடாதல் இல்லை.

மெய்யியல் சம்பந்தமான நவீன ஆய்வியல் முடிவுகள் மனித புத்திவளாகத்துக்குட்பட்டவை சைவஞானமெனப் பிரசித்தி பெற்றது அநுபவஞானம். அநுபவஞானம் புத்திவளாகத்தைப் புறங்கண்டு எழுவது. அதை வாக்குமன அதீதம் என்றே உண்மை நூல்கள் கூறும். அன்றியும் அதற்கெதிர் நவீன ஆய்வியல் முடிபுகள் இன்றைய மனோதத்துவ தரவுகளுடன் சோஷலிச ஹியூமானிச செல்வாக்குகளிலும் பற்றாதிருக்க முடியாதலைவர். அனுபவஞானம் எவ்வாற்றாலும் அவைகளிற் தட்டாத ஒன்று.

சமூக நலனுக்கு நேரடியாக உதவுவது தான் சமயத்தின் சேவை என்ற இன்றைய கோஷம் சென்ற தலை முறை இறுதிவரை இல்லை. இது பசுபுண்ணியம் என்ற பெயரிலான மனிததர்மம் அதிலும் கணிசமான ஒரு பகுதி. சைவாலயக்கிரியை என்ற சிவ புண்ணியத்தில் எப்பவோ தொடக்கம் உள்வாங்கப்பட்டேயிருக்கிறது. அதற்கு அதிகமானவை சமூக தர்மமாக அமைதற்பாலவை என்பதே சைவநோக்கு. அவற்றையும் ஒரேயடியாக உள்வாங்குமிடத்துச் சைவாலய இலட்சணமான ஆத்மீக விளக்கம் மிகுதற்கு குந்தகமாகும். அதாவது ஆலயங்கள் ஆத்மீக விளக்க நிலையங்கள் என்ற நிலை மறைபட்டு அவை சமூக சேவை மன்றங்கள் என்ற மட்டத்துக்கு இறங்கிவிடாதிருக்க முடியாமல் வரும். யதார்த்தமான ஆலயக்கிரியைகளின் கொள்ளளவுக்கு மேலதிகமாகச் சமூகநலப் பெருக்கத்தை உள்வாங்கியிருக்கும் ஆலயங்கள் இதற்குக் கண்கண்ட அத்தாட்சியாகும்.

சைவாலய சேவையின் சார்பாக முதன்மை பெற்று மிளிர வேண்டியது ஆத்மீக ஞான விளக்கமுன்னேற்றம் மட்டுமே. இது தான் ஆலயத்துக்கு அழகு. ஆத்ம ஞானிகளைக் கவருவதே ஆலயப் பண்பாய் இருக்க வேண்டும் என்றால் அதற்குப் போதுமான ஆத்மீக ஞான-

விளக்கத்தை மிகுவிப்பதே ஆலயச்சேவையின் தேவை என்பதை அல்லத்தட்ட முடியாது. இதற்கிணங்க ஆலயம் விளைக்கும் ஆத்மீக விளக்கம் எப்படியும் சமூகதர்ம விருத்தி விளக்கத்தைக் கூர்ப்பிக்குமளவு வலுவுள்ளதாய் அமையும். உண்மையான ஆத்மீக விளக்கம் கூர்ப்பிக்கப்படுகையில் அதற்கு உட்பட்டவர்களால் சமூகத்தில் உலோபமின்றி ஓஞ்சிப்பின்றி உதவுவோர் இல்லாதிருக்க முடியாது. நால்வர் வாழ்க்கை வரலாறு பிரதிபலிக்கும் உண்மையும் இது. அவர்கள் எங்கேனும் சமூகதர்மங் குறித்த பொருள்விருத்திக்கு அறைகூவல் விடுத்ததில்லை. ஆத்ம விளக்கக் கூர்ப்படைதற்குமட்டுமே அறைகூவல் விட்டுத் திரிந்திருக்கிறார்கள். திருவீழிமிழலையில் கடும் பஞசம் நிலவிய போதும் அப்பரும், சம்பந்தரும் அடியார் பொருட்டாயினும் சிவனிடம் பஞ்ச நிவாரணங் கோரியதாக வரலாறில்லை. திருவீழிமிழலைச் சிவன் தானாகவே முன் வந்து நீவிர் இதனால் வாட்டமுறீர் எனினும் அடியார்க்குதவ அளிக்கிறோம், எனப் பரிந்துரைத்துப் படிக்காசு வழங்கியதாகவே வரலாறுண்டு. என்றென்றைக்கும் சைவத்தின் நிலை இதுவே. இதன் பின்னணிவிளக்கம் வருமாறு.

சமூகம் குறைபாடு தீர்த்தற்குப் பூரண பொறுப்பாளி சிவனே. அவரே பிரதம கொடையாளியுமாவர். அவரது அருள் ஆத்ம விளக்கத்தினால் கூர்ப்பிக்கப்படும் போதில் திரவிய கொடையாளி (செல்வன்) கை தானாகவே நீளும். இதுவே இயல்பு முறை. இருந்தும் இதற்கு வேறான முறையில் சமூகநலம் பேணும் முயற்சி நம்மத்தியில் வந்து சேர்ந்த மறுசமயங்களின் முன்மாதிரியைப் பிரதிபண்ணும், முயற்சியாக அமைந்துவிட்டமை துர்ப்பாக்கிய விளைவாயிற்று.

இவ்வகையில் மேற்குறித்த பின்னணிநிலைகளில் தாரதம்மியங்களையுணர்ந்து கொண்டு அவற்றின் பொருந்தாப் போக்குகளைத் தவிர்த்து யதார்த்தமான சைவப் போக்குகள் தலையெடுக்க வைக்க முயலும் பொறுப்பு இன்று நம்மவருக்கு அத்தியாவசியப் பொறுப்பாக உள்ளது. இதற்குக்கைந்நூலும் மெய்நூலுமாக நின்று உபசரிக்க வல்லவை சைவத் திருமுறைகள். அத்தொடர்பில் திருமுறை மன்றத்துக்கு இதிற் பெரும் பங்கு இருத்தல் தானாகவே அமையும்.

அகில இலங்கையிலும் திருமுறைப்பிரபாவம் நிகழ வைக்க முயலும் இம் மன்றமே அதனை ஏற்றுப் பிரதிபலிக்கவல்ல உண்மைச் சைவப் பிரபாவ நிலையையும் ஆக்கி வைக்க வேண்டியதாகிறது. நிலத்தை

---

அல்லத்தட்ட - இல்லையென விலக்க



உழுது, எரு விட்டு விதைத்து விளைவு காட்டும் உழவனே பயிருக்கு இடையூறு நேராமற் காக்கும் வேலிகளையும் பாதுகாக்க வேண்டியவன். வேலி எப்படியாவது இருக்கட்டும், எந்தப்பட்டி மாடும் மேயும் அளவுக்கு மேய்ந்து விட்டுப் போகட்டும், உழுது பயிர் விளைவிக்கும் கடமை மட்டும் என் பொறுப்பு என்றிருந்தால் அவன் உண்மையில் பயன்படுபவன் ஆகான். அதுபோல்வதே இதுவும். எனவே எப்பாடு பட்டாயினும் இம்மன்றம் இப் பொறுப்பை மனப்பூர்வமாக ஏற்க வேண்டும். அதற்குத் துணையாவார் தொகையை வற்புறுத்தியும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

இந்நிலையில் திருவள்ளுவர் ஒழிபியலில் தந்திருக்கும் மனிதவுயர் நலப்பண்புகள் பற்றிய விளக்கம் இதில் முயல்வார்க்குப் பெரிதும் கை கொடுக்கும். அப்பகுதியிலுள்ள குடிசெயல் வகை என்ற அதிகாரம் பொருள் நிலைக்கிணங்க சைவமும், தமிழும் நமது குடி. நாம் பிறந்தகுடி, அக்குடியின் பண்டைய மகிமையாலேயே நாம் வாழ்கிறோம். அதனால் அக் குடியை மென்மேலும் உயர்த்துதல் நமக்கு தர்மக் கடமையாக எப்பவோ முடிந்திருக்கிறது. எனவே இதை உதாசீனம் பண்ணுதல் எவ்வாற்றாலும் பொருந்தாது. காலமின்மை நேரமின்மை போன்ற ஏதுக்கள் இதற்கு சாட்டாதல் பொருந்தாது.

"குடிசெய் பவர்க்கில்லைப் பருவம் மடிசெய்து
மானங் கருதக் கெடும்"

இதில் மடி செய்தல் மானங்கருதுதல் என்ற இரு தொடர்க்குப் பரிமேல் அழகர் தந்திருக்கும் விரிவுரை இன்றைய நம்மிற் பெரும்பாலோர் கொண்டிருக்கும் நொதுமல் மனப்பான்மை நிலையை அச்சொட்டாக பிரதிபலிக்கின்றது. அதை அறிதல் மூலம் நம்மத்தியில் புத்துணர்ச்சியும் புதிய ஊக்கமும் விளைதற்குப் போதிய இடமுண்டு என்று கூறி இத் தலைமை உரையை நிறைவு செய்து கொள்ளும் முன் ஒன்று சொல்ல வேண்டியாகிறது. இப்படி எவ்வளவுதான் சொன்னாலும் சொகுசுப் பிரியனான எமது மனம் உது கஷ்டம் உனக்கேன் உந்தப் பராக்கு, என்று சொல்லித் தடுக்கவே பார்க்கும். அது பொருந்தாது. நாம் கஷ்டத்தையும் உவந்து ஏற்கவே வேண்டும் என்பதற்கு இங்குள்ள பிள்ளையார் அத்தாட்சி. எங்ஙனம்? அரசநிழற் குளுமையிலும், குளக்கரைக் குளுமையிலும் ரம்மிக்கும் பிள்ளையார் இங்கு வெயில் உகந்தவர் ஆகவும் இருக்கிறார் அல்லவோ?

29.05.1999

மறைவாக நமக்குள்ளே குசுகுசுத்து ரமிப்பதிலோர் மகிமை இல்லை
அறவாதி நாவலனார்க் கன்புடையீ ராந்தனையும்ஜயன் மார்நீர்
உறவாகி உள்ளறுக்கும் சுமார்த்தச்சண் மதத்தொண்டர்உலகை
(ஏய்க்குந்
திறமான சூழ்ச்சியெலாம் தெரிந்தகற்ற முயல்வதற்கோர்துணிவு
(வேண்டும்.

**செந்தமிழ்ச் சைவச் சிந்தனைச் செல்வர்களுக்கு.**

எங்கள் சமயம் சனாதன (என்றுமுள்ள) சைவம், எங்கள் நாடு சைவ நாடு. அந்நியர் ஆட்சிப் பலாத்காரத்தினால் நமது சனாதன சைவ நிலைக்கு அச்சுறுத்தல் தோன்றிய மிகச்சமீப காலத்திலும் தெய்வா-தீனமாகச் ஸ்ரீலஸ்ரீஆறுமுநாவலர் பெருமான் தோன்றி இது சைவ நாடென்றே மீள் பிரதிட்டை பண்ணி வைத்த விசேட சிறப்போடு கூடிய சைவநாடு எம்நாடு. 1906ல் சேர், பொன் இராமநாதன் அவர்கள் அமெரிக்கா சென்ற கப்பலில் அவரைச் சந்தித்து உரையாடிய அமெரிக்கர் ஒருவர் சேர் நீங்கள் இந்து சமயத்தவரா? என்று கேட்டாராம். அதற்கு நேரிற் பதிலளித்த இராமநாதன் நாங்கள் சிவனை வழிபடுபவர்கள், எங்கள் சமயம் சைவம். ஆனால் பிறநாட்டார் எங்களை இந்துக்கள் என்று சொல்லிக் கொள்கிறார்கள். அதற்காக நாங்கள் இந்து சமயத்தவர் என்ற பேர்க்குரியவர் ஆகமாட்டோம், என்றாராம். திருமதி லீலாவதி இராமநாதன் Western Pictures to the Eastern Students என்ற பெயரில் எழுதிய நூலில் இன்றுங்காண உள்ள செய்தி இது.

இத்தொடர்பில் இந்து என்ற பெயர் புறநாட்டாரால் தோன்றி இந்து சமயமாகப் பரிணமித்த வரலாறுங் காணத்தகும். பழைய காலத்தில் இந்திய தேசத்தோடு தொடர்பு பெற்றிருந்த பாரசிக நாட்டினர்

இந்தியமக்கள், சமயம், கலாசாரம் என்பவற்றைக் குறிப்பதற்கு இந்தியாவின் மேற்குக் கரையோரத்திலிருந்து அப்பாலுள்ள நாட்டினர் எல்லாராலும் நன்கறியப்பட்டிருந்த சிந்து (நதிப்பெயர்) என்ற சொல்லைக் கையாண்டனர். அவர்கள் மொழியியல்பு 'சி' ஒலிக்கு இடங்கொடாமையால் ஹிந்து என வழங்குவாராயினர். பாரசீக மொழியிலேயே இந்து என்ற சொல் வழக்கில் இருத்தல் சார்பான ஊகம் இது. அது நெடுங்காலம் அவர்கள் அளவிலேயே இருந்துள்ளது. இந்திய நாட்டவர் அவ்வழக்கைக் கையாண்டமைக்கு இந்திய மொழி அகராதிகளில் அத்தாட்சியில்லை என்பர். சுமார் ஆயிரவருடங்களுக்கு முன்பாக இந்தியாவில் வேதாந்த ஞான உத்தாபகராகத் தோன்றிய பிரமுகர் ஒருவர் "ஷண்மதம்" என்ற பெயரில் ஒரு நூதன சமயவகுப்பாக்கம் செய்து வைத்தார். அவர் மரபினர் அவரைச் "ஷண்மத ஸ்தாபகர்" எனக் கொண்டாடுவதே அதற்கத்தாட்சியாம். அவர் தமது வேதாந்த ஞான மேன்மையை நிலை நிறுத்த அதற்கிடைஞ்சலாயிருந்த சனாதன சைவ மேன்மையை அதாவது அதன் முதன்மைப் பிரபலத்தை மட்டந்தட்ட வேண்டும் என்ற உள்நோக்கில் அது செய்துள்ளமை பகிரங்க இரகசியம். ஸ்ரீமான் காசிவாசி செந்திநாதையர் அவர்களின் பத்தாண்டு கால ஆராய்ச்சி முடிவுகளாக வெளிவந்து இன்னமும் எவராலும் மறுக்கப்படாதிருக்கும் நூற்கருத்துக்கள் இவ்வாறு கருத வைக்கின்றன. சைவத்துக்கெனத் தனி முதன்மை என ஒன்றில்லை. அம் முதன்மை உள்ளன வேறும் ஐந்துள, என்ற ரீதியில் அவர் வகுத்தியற்றிய சாக்தம், கௌமாரம், காணபத்தியம், வைஷ்ணவம், சௌரம் என்ற ஐந்துடன் ஆறாவதாகச் சைவமும் அடங்க வைக்கபட்டாயிற்று. அவ்வாறினையும் ஒரு பொதுக்குறியீட்டுட் புகுத்த வாய்ப்பாகப் பாரசீகச் சொல்லான ஷிந்துவைச் சமயம் என்ற பெயருக்கு அடைமொழியாக்கி ஷிந்து சமயம் என்ற பெயரை அவரோ அவர் வழிமரபினரோ உருவாக்கியுள்ளனர். சென்ற நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் அமெரிக்கப் பிரசங்கத்துக்குச் சென்ற சுவாமி விவேகானந்தர் இந்திய வைதீக சமயங்களைக் குறிக்க அப்பெயரையே மீளமீள ஒலித்ததினால் அது அகிலமறிந்த பெயருமாயிற்று.

இவ்வெல்லாமாகியும் சனாதன சைவத்துக்குரியார் சைவம் என்ற புராதனமான தம் வழக்கில் தளர்ந்திலர். "அவர்கள் வகுத்த பெயர் அவர்களோடு" என்ற அளவில் அதைத் தாம் தீண்டாமலே எட்டங்கட்டி வைத்திருந்தனர். குறித்த காலப் பகுதிக்கும் பின் எழுந்த சைவநூல்களிலோ, சைவப்பிரமுகர் வாக்கினிலோகூட அப்பெயர் தழுவப்பட்ட-

எட்டங்கட்டி - தூரவிலக்கி



தற்கு எந்தவோர் சான்றுங்கிடையாது. பிறசொல் எதனாலும் அட்டியுணரப்படுவதற்கரிய பொருள்வளமும் அனுபவப்பயனும் சிவம், சைவம், என்ற சொற்களுக்கு உளவாயிருந்தமையே அதற்கு ஏகப்பட்ட காரணமென்பதற்கு அத்தாட்சிகளும் பல. சிவனெனும் ஓசையல்லாது அறையோ உலகில் திருநின்ற செம்மையுளதே - திருநாவுக்கரசு சுவாமிகள். சிவன் என்ற ஓசைக்கல்லது மற்றெவ்வோசைக்காயினும், திருநின்ற செம்மையுள்ளதா? சபதம் பிடிக்கவா? (அறையோ) என்கின்றது இவ்வருளிச் செயல். சண்டாளனாயினும் சிவ என்று உச்சரிக்கக் காணில் அவனோடு பேசுக. அவனோடுண்க, அவனோடுறைக என்பது உபநிடத வாக்கியம். அது பின்னால் உபநிடதப் பத்தியிலிருந்து விரட்டப்பட்டுவிட்டமை செந்திநாதையர் ஆராய்ச்சித் துணிபுகளில் ஒன்று. இவ்வகையிற் பல விரிக்கிற் பெருகும். இவ்வருமையுணர்ந்த ஆன்றோர் வாயிலோ எழுத்திலோ சமீபத்தில் மறைந்த பண்டிதமணி வரை இந்து சமயப் பெயர் எழுந்தொலித்திருக்காமை கண்கூடு. இருந்தும் இப்போது சில வருடங்களாக சான்றோரல்லாதோர் வாயிலாக அப்பெயர் வழக்கு Illicit Immigrant மாதிரி, சைவ சமூகத்திற் பிரவேசித்தும் வகைஅறியார் வரிசை அறியாராம். சைவர் சிலர் தங்கள் சைவ ஸ்தாபனங்களுக்கு அப்பெயரைச்சூட்டிக் கொள்ளவுந் தவறிற்றிலர்.

இம் மடமையைக் கண்ணுற்று அயல் மதத்தார் நம்மை நோக்கிக் கிண்டல் பண்ணும் படியாகிறது நிலைமை. இரண்டு மூன்று மாதங்களுக்கு முன் நம் நாட்டுப் பத்திரிகையொன்றில் அதன் சுயசுரூபம் தலை காட்டிற்று. இந்து சமயம் என்றால் என்ன? அதற்குச் சாஸ்திரம் என்ன? ......... இத்தியாதி. அதன்வடிவம் விடுவேனோ பார், என்ற மாதிரி இந்துப் பேரிலான நம்நாட்டு அவை ஒன்று தன் வெளியீடாகிய அப்பெயர்த் தர்மம். 15 பக். 373 இல் பேட்டி ஒன்று பிரசுரிப்பதாயிற்று, ஷண்மதத்தில் உள்ள சைவம் எதுவோ அதுவே நமது சைவம். ஷண்மத்தில் உள்ள மற்ற ஐந்தும் சைவத்தின் பலப்பேற்றுக்கு உபகரிப்பன. ஆதலால், சைவர் முழுவதாக வாழும் பகுதியில் இந்துப் பேரவை இருப்பதில் எந்த ஆட்சேபத்துக்குமிடமில்லை என்பது விடைகாரர் மழுப்பல். சனாதன சைவர் இதை விசாரிப்பதில் விந்தை ஏதுமில்லை.

மற்றைய ஐந்தில் ஏனைய மூன்றும் ஏதோ நாம மாத்திரையாக, சாக்தமும் வைணவமும் தான் பிரசித்தமான சமயங்களாயுள்ளவை. அவையிரண்டும் முறையே சக்தியையும் விஷ்ணுவையும் பரம்பொருளாகப்போற்றுபவை. தத்தமக்கென ஆகமங்களையும் தீக்ஷை

முறைகளையும் வேறு வேறாகக் கொண்டுள்ளவை. தத்தமக்கான முத்தி பற்றிய வேறு வேறிலக்கணங்களையும் உட்கொண்டவை. சிவாகம அநுசரணையிலுள்ள சநாதன சைவத்தின் கிரியை வழிபாட்டுக்கும் தத்துவ ஆய்வுக்கும் ஓரே இலட்சியமாயுள்ள மெய்ஞ்ஞானப் பேறு அவற்றின் இலட்சியமாகாது. (அது தான் எனச் சும்மா சொல்லுவார்கள். நிரூபிக்கநில்லாது) பொதுவில் இம்மையிலுஞ் சரி அம்மையிலுஞ்சரி சுக போக அதிகாரப் பேறுகளே அவற்றின் விருப்பப்படியான இலக்குகள். அவற்றுள் பலப்பேற்று அவா மிகுதி கொண்ட சாக்தம் இயல்புமுறைக்கு மாறான வன்முறைச் சாதனைகளைக் கூடப் பயில்வான் வித்தைப் பாங்கில் உண்கொண்டிருப்பது. எனவே வலிந்து கட்டிச் சுவாமியைக் கறக்கும் வழக்கமற்ற சனாதன சைவத்துக்கு இவற்றால் ஆவதொன்றில்லை எனக் கண்ட சைவஞானிகள் வைஷ்ணவத்தைப் புறச்சமய நிரலிலும் சாக்தத்தை அகப்புறச் சமய நிரலிலும் ஒதுக்கிக் காலங்கள் பலவாய்விட்டன. உள்ள உண்மை இங்ஙனமாக, இவ்விடைகாரர் புரட்டும் புரட்டுப் பாரம்பரியமான சைவ ஞான மேன்மைக்கு மாசு பூசுவதாய் முடிகின்றது.

இப்படி வெளிப்படை மழுப்பலிற் பொழுதை வீணாக்காது சொன்னவர் எவராயிருந்தாலும் நம்மவர் அவசியம் உற்றுணர வேண்டிய ஒரு உண்மையை நமக்குணர்த்துகிறார் என்ற கௌரவ கண்ணியத்துடன் அதற்கு உரிய பரிகாரம் மேற் கொள்ளப்படுமாயின் அது பண்புடைமையாகும். மானம் பேணும் மார்க்கமுமாகும். பகையுள்ளும் பண்புள பாடறிவார் மாட்டு (பாடறிவார் மானமறிவார்) என்ற திருக்குறளிலக்கணத்தில் இதுவுமடங்கும்.

மேலும் ஷண்மதக்காரர் கூறுவது போன்று இவ் வைஷ்ணவமும் சாக்தமும் தான்தோன்றிகளான தனி முதன்மைச் சமயங்களுமாகா. சனாதன சைவம் வேத காலத்திற்கும் முற்பட்டதென்ற பிரசித்தமான அபிப்பிராயம் அதற்குச் சான்று. சனாதன சைவத்துக்கு அவ்வைந்தும் உள்ளடக்கமாதல் அதன் தத்துவ ஞான அமைதி காட்டும். மொஹஞ்சாதாரோ போன்ற இடங்களில் கிடைத்துள்ள, புதைபொருளாராய்ச்சிச் சின்னங்கள் அவ்வபிப்பிராயத்துக்குச் சான்று. எனவே, ஆதிச் சமயமாயிருந்துள்ள சனாதன சைவத்தின் லௌகிக வேட்கைக்கு முகமன்மை கொடுக்காத ஞான நோக்குப் பிடிக்கு நின்று பிடிக்கும் ஸ்திரத்தன்மையும் பொறுமையும் வாய்க்கப் பெறாதோர் சனாதன சைவத்திலிருந்து இஷ்டப் பிரகாரம் பிரிந்து நின்றமைத்தவை அவை எனல் துணிபாம்.



இத்தகைய சனாதன சைவத்தைச் ஷண்மதங்களில் ஒன்றான சைவமாக நாட்ட முயலும் இவ்விடைகாரர் இந்து சமயப் போர்வையில் நின்று கொண்டு சைவ மகிமைக்கு விளைக்குங் கேட்டை விட, அதே போர்வையில் நின்று பெருங்கேடு விளைக்கும் மற்றும் ஒரு பகுதியார் சிலரையும் உடையது நம் சமூகம். அவர்கள் கோலத்திற் சைவராயிருப்பர். தொழிலிற் சிவாசாரிய அந்தஸ்துள்ளவராயுமிருப்பர். அதே வேளை நாராயண, முகுந்த, அச்சுத, கிருஷ்ண மந்திர பாராயணராயுமிருப்பார். அத்துடன் சாக்த சக்தி உபாசனையாளராயுமிருப்பர். எல்லாவற்றுக்குந் தாசர் இவர்கள். இந்து சமயப் பெயர் இவர்களுக்குத் தான் வேண்டிக் கிடக்கிறது போலும். தமது சுய அபிலாஷைகளைத் சனாதன சைவப் பொதுசன அபிலாஷைகளாகத் தோற்றுவித்துச் சைவாலயங்களில் இராம ஜயந்தி, உறியடி விழா, சக்கர பூஜை சாக்த மூர்த்திப் பிரதிஷ்டைகள் செய்விப்பவர்களாயுமிருப்பர் இவர்கள். இதுவரை ஆங்காங்கு சில சைவாலயங்களில் இவர்கள் கைவண்ணங்கள் இடம் பெற்றிருப்பதும் விஷயமறிந்த வட்டாரங்களில் அது பற்றிய சர்ச்சைகள் கிளம்பியிருப்பதும் அகில உலகச் சைவப் பெருமன்றம் (W.S.C) வரை போய் அகில சைவ உலகப் பிரச்சனையாக அது உருவெடுத்திருப்பதும் சனாதன சைவ வரலாற்றரங்கில் இன்றைய பரபரப் பூட்டுஞ் செய்தியாகிறது. இத்தந்திரத்தில் வீழ்ந்து விட்ட ஒரு சைவக் கோயில் முகாமையாளருக்கு, குறித்த W.S.C தலைவர் சீலத்திரு சிவநந்தி அடிகள் (இலண்டன் மெய்கண்டார் ஆதீனம்) விடுத்திருக்கும் ஆணையுரை இங்குக் கருதத்தகும்.

More importantly we appeal to you, NOT TO PLAY INTO THE HANDS OF SMARTHA BRAHMINS TO USE THIS AS A SUBTLE AND CALCULATED TACTICS FROM WITHIN.

ஸ்மார்த்தர்கள் தோற்றந் தெரியா வகையில் உள்ளுக்குள்ளாக நின்றியற்றும் இத் திட்டமிட்ட தந்திரம் பலித்தற்குபகாரமாம் வண்ணம் அவர்கள் கையில் நின்று விளையாடாதீர்கள் என்பது அடிகள் ஆணை. மரபு வழிச் சைவாதீனங்கள் இத் தகராறுகளில் மரியாதைக் கொதுங்கினர்போல் வாய் வாளாதிருக்கும் இக்கால கட்டத்தில் அடிகள் தனி யாதீனமாக நின்று துணிச்சலாக வெளியிட்டிருக்கும் இவ்வாணை அக்ஷரலக்ஷம் பெறும்.

சக்கரபூசை வழக்கம் சைவாலயங்களில் அதிகரிக்கப்பார்க்கிறது. அது சாக்த வழக்கம் என்பது சைவப் பொது மக்களுக்கு மறைக்கப்பட்-

அக்ஷர லக்ஷம் - எழுத்துக்கு நூறாயிரம் பொன்.

டாலுங்கூட, இது நிகழ்த்துஞ் சிவாசாரியர்கள் சிலர் இதற்கு உரிய தகைமை பெற வேண்டித் தூரம்போய் சாக்த தீக்ஷை பெற்று மீண்டு தம் கோயிலோடு அயற் கோயில்களிலும் இது நடத்திவருதல் மூலம் குட்டு வெளியாகியும் விடுகின்றது. சைவ விசேட தீக்ஷையில் வைத்தே சிவ பூசை எழுந்தருளிச் செய்து கொடுக்கப்பட்டு மேல் சிவாசாரிய தீக்ஷையும் பெற்றுச் சிவபூசையை முன்னோடி நியமமாகக் கொண்ட பரார்த்த பூஜைக்கு நியமனம் பெற்ற இவர்கள், அந் நியமந் தவறித் தேடிப் போய்ச், சாக்த தீக்ஷைத் தகுதி பெற்று வந்து, சிவபூசைச் செழிப்பை இன்றியமையாத சைவக் கோயிகளில் சாக்த சக்கர பூசையாற்ற வேண்டுமளவுக்கு என்னதான் கெடுமதி நேர்ந்ததோ இச் சைவ சமூகத்துக்கு.

சிவனே நமது முதல்; நமது வாழ் முதல்; உயிரில்லாமல் நமக்கியக்கமில்லாமை போல அவரில்லாமல் உயிர்க்கியக்கமில்லாமையால் அவர் நமக்கு உயிர்க்குயிர். அவரலால் நாம் ஏற்றம் பெறுவதும் அவர் நம்மை ஈடேற்றுவதும் அநாதிமுறையான பழைமையொடுபட்டவை. அதனால், எந்தவொரு நிபந்தனையுமின்றியே உள்ளார்ந்த உணர்வு உருக்கத்துடன் அவரை நினைவதுந் தொழுவதும் சிவாகம விதிப்படி அதற்கடுத்தன செய்தலும் நம் தர்மக் கடமை என்ற இயல்பான அன்புறவினால் சிவனைத் தொழுவதே சனாதன சைவ வழிபாட்டு நெறி. சிவபூசையை விடச் சிறந்த பூசை வேறில்லை என்பதும் அநுபவ உண்மை. எண்ணிக்கையிற் பதினெண்ணாயிரத்துக்கும் மேற்பட்ட சைவத் திருமுறைப் பாடல்கள், பதினான்காய் மலர்ந்துள்ள சைவ சாஸ்திரங்கள் அனைத்தும் ஒரே முகமாய் வற்புறுத்துவது இதனையே. சிவாகமங்களிற் கிரியா காண்டம், ஞான காண்டம் இரண்டும் நெறிப்படுத்துவதும் இதனையே ஆதலின், சிவாகமங்கள் விதித்த வழிபாட்டு மரபுக்கு வேறாக உள்ள எதுவும் நமக்கு வேண்டாதன என்பது மட்டுமல்ல, நமக்குப் பழுது விளைப்பனவுமாம் என்பது நியாய பூர்வமான சைவத் துணிபு. குறித்த ஸ்மார்த்த வல்லபங்களாற் பல வகை எதிர்பார்ப்புக்களை முன்னிட்டுப் பகட்டுக் கிரியை முறைகளால் நடைமுறைப்படுத்தப்படும் வழிபாட்டு முறைகள், குறித்த சைவத் துணிபை நிராகரிக்கும் விஷமத்தனமான யத்தனங்கள். ஆதலால் சைவக் கோயில்களில் அவற்றை அடுத்தலாகாது. எனவே இப்பழுதுகளுக்கு வாய்ப்பளிக்கும் இந்து சமயப் பெயர்ப் போர்வை விலக்கப்பட்டேயாக வேண்டும் என்பது சனாதன சைவ மகாஜன நிலையாகும்.

---

யத்தனம் - எத்தனம்



எனில், ஒரு எதிர்பார்ப்புமேயில்லாமற் சிவனிடத்து உயிர்க்கு அன்பு நிகழ்தல் அசம்பாவிதம் என்பீரேற் சொல்லுதும். இயல்பிலே தொடர்புள்ளனவாயிருக்கும் இரண்டிலே ஒன்று மற்றதில் அன்பு கொள்வதற்கு ஒருவித எதிர்பார்ப்பும் இருப்பது இல்லை. தாய் தன் சிசுவில் அன்பு கொள்ளுதற்கும் சிசு தாயில் அன்பு கொள்ளுதற்கும் எதிர்பார்ப்பு என ஒன்றின்மை பற்றி அறிவீர்கள் தானே. அது போல்வதே இதுவும். உயிர்க்கு உயிர் சிவன் என்பது எப்பவோ முடிந்த உண்மையாயிருக்கையில் சிவனிடத்து உயிர்க்கு இயல்பாகவே அன்பிருக்கும் என்பதற்கு ஆட்சேபம் யாதோ?

"ஈசனவன் எவ்வுயிர்க்கும் இயல்பானான் சாழலோ"

இனி, நிபந்தனையின்றியே சிவன் உயிர்க்கு அருளுகின்றாரெனில் வழிபாடு அவசியமாவதில்லையே என்பீராயின் கேளும். அதன் தேவை உயிரின் நிலையைப் பொறுத்து ஏற்படுகிறதாக அறிமின். சைவ சித்தாந்த ஞானத்தின்படி உயிர் இயல்பாகவே மலப் பிடிப்பும் உள்ளதாய் இருத்தலாலும், அம்மல மயக்கம் அதன் ஞானப் பேற்றுக்கு நிரந்தரத் தடையாய் இருப்பதாலும், அத்தடை நீக்கம் சிவனருளை முன்னிட்டு நிற்கும் உயிரின் முயற்சியின் பேறாக அதன் உள்முகத்தில் உணர்வுபூர்வமாக நேரும் திருத்தங்களின் வாயிலாகவே நீக்கப்பட வேண்டியிருத்தலாலும், அம்முயற்சி சிவனிடத்துள்ள இயல்பான தன் அன்பைப் பெருக்குவதொழிய வேறின்மையாலும் உயிர் வழிபட்டேயாதல் வேண்டும் தேவை இருக்கவே இருக்கிறதென்க.

எனில் சக்கரபூஜை, நாராயணபூஜை முதலியவற்றாலும் அப்பேறுகள் வருமென்றால் என்ன? என்பீராயின் அதையுங்கேளும். இவற்றை ஏற்கும் கடவுளரான சக்தி நாராயணன் என்போர் முழுமுதற் கடவுளர் அல்லர். "ஏகோஹிருத்ர" உருத்திரன் ஒருவனே முதல்வன் எனக் கர்ச்சிக்கிறது வேதம். ஒருவன் என்னும் ஒருவன் காண்க, என்கிறது தமிழ் வேதம். அதனால் முடிவான பலனான ஞானப் பேற்றை வழங்கும் நிலையில் அவை இல்லை. மேலுத்தியோகஸ்தர் ஒருவரின் கட்டுப்பாட்டில் உள்ளாருக்கு அவருடைய தகைமை (Power) இல்லை என்பது தெரியுந்தானே. இவற்றைச் செய்பவர் நோக்கமும் சுகபோக அதிர்ஷ்டப் பேறு. சிவனது அதிகாரத்துக் குட்பட்டிருக்கும் சக்தி, நாராணயர் ஆன இலைகள் வழங்கக் கூடியனவும் அப்பேறுகளே. இயல்பிலேயே சுகபோக அதிர்ஷ்டப் பிரியராயிருக்கும் நம்மவர்க்கு அவற்றையே மேலும் வழங்குவதனால் அவர்களுக்கு நீங்க வேண்டிய மலபந்தம் மேலும் வீங்கும். அதனால் தான் சைவாலய வழிபாட்டாளர்க்கு

அவற்றினால் பழுது நேரும் என முன் சொல்லப்பட்டதென்பதையும் இதில் வைத்துக் கண்டு கொள்க. இங்ஙனம் சைவாலயங்களுக்குப் பழுதானவற்றை விளைக்கும் போர்வையாய் நின்றுதவும் இந்து சமயப் பெயர் வழக்கினால் நேரும் விரும்பத்தகாதவைகள் மேலும் பலவுள.

சனாதன சைவர்க்கு, சைவம் என்ற வழக்கு எவ்வளவுக்கு இன்றியமையாதது என நம் சாஸ்திரங்களும் அனுபவமும் சொல்கின்றனவோ அவ்வளவுக்கு அதைப் புறந்தள்ளி விடுகிறது இவ்வழக்கு.

சைவப்பிள்ளைகள் படிக்கும் சைவசமய பாடப் புத்தகங்களின் பெயரே இந்து சமயப் பாடப்புத்தகமாக மாற்றப்பட வேண்டும் என்ற அருட்சி ஒரு பக்கம்.

எங்கள் சிவாசாரியார்கள் தங்கள் சங்கத்துக்கு இந்துக்குருமார் ஒன்றியம் என்று பெயர் வழங்கவேண்டுமாம். சிவாசாரியார் சங்கம் என்ற பெயரை விட இந்துக்குருமார் சங்கம் என்ற பெயர் வெகு எடுப்பாம். இதற்குள்ளே கள்ளமொன்றிருப்பதாகவும் பேசிக் கொள்கிறது பொதுசனம். வேதாந்த மேல் பீடத்துக்குச் சைவம் பிடிக்காதாம். இந்து தான் பிடிக்குமாம். சிவன் தயவை விட அதன் தயவையே சிவாசாரியார்கள் வேண்டி நிற்கிறார்கள் போலும் என்று செய்தி அடிபடுகிறது.

இந்தப் பெயர் வழக்கிருக்குமட்டும் இதன் போர்வையில் தந்தொழிலாற்றும் மேற்கண்ட பேர்வழிகளின் செயற்பாடுகள் இருந்து கொண்டேயிருக்கும். இந்து சமயத்துக்குரிய ஆறில், ஒன்றில் ஒரு அம்சத்துக்குரியது மற்றதிலும் தராத அம்சத்துக்குச் சமம் என்ற நிரூபணமும் நடந்து கொண்டேயிருக்கும். சைவத்தில் துர்க்கை என்பது சக்தியின் ஒரு பெயர். சாக்தத்தில் சக்தியின் ஒரு பெயர் இராஜராஜேஸ்வரி. ஆதலால் இரண்டும் ஒன்று தானே என்ற நிரூபணம் கட்டாயம் நடக்கும். (மலேசியாவில் இப்படி நடந்துமிருக்கிறது) வேதாகம ஆதாரமுள்ளது துர்க்கை. சைவ நூல்கள், திருமுறைகளில் மட்டுமல்ல தமிழிலக்கியங்களிலேயே ஆட்சியுள்ளது துர்க்கை. சைவ சித்தாந்தத்தில் பராசக்திக்கு ஓதப்பட்ட இலக்கணமெல்லாம் வேதத்தில் வைத்தே தன் பேரில் விரித்தோதப்பட்டிருப்பது துர்க்கை. இராஜராஜேஸ்வரிக்கு இம்மூன்றில் ஒன்றுமில்லை. அது சர்வ சாதாரணமாக ஒரு புராண வார்ப்பு. அது பௌராணிகம். பௌராணிகம் சைவத்துக்கு விதியல்ல என்ற பாகுபாடறியாப் பொதுசனம் அவர்கள் நிரூபணத்தில் எடுபடும் நிலை என்றும் நிலவும். இது உதாரணத்துக் கொன்று.

அருட்சி - அச்சுறுத்தல்



சுருங்கச் சொன்னால் சனாதன சைவத்துக்குள்ள தனித்துவமான உயர் பண்பிலட்சணங்கள், மானம், மகிமைகள் எல்லாம் மட்டந்தட்டப்பட்டுச் சைவ சித்தாந்த ஞான உண்மை விளக்கத்துக்குச் சரியான சமயப் பின்னணி விளக்கம் ஒன்றில்லாத வெறுமை நிலை விளைந்தே ஆகும். மலேசியா போன்ற வெளிநாடுகளிற் சிவாசாரியத்துவம் பண்ணும் மேற் கண்ட குழுவினர் சிலர் (சிவ நந்தி அடிகள் வாக்கில் ஸ்மார்த்தர்) தமது தவறான செயற்பாடுகளை யதார்த்தப் படுத்தும் நோக்கில் இங்குள்ள சனாதன சைவ நிலை பற்றித் தவறான செய்திகளை அங்கு பரப்பி வருகிறார்கள். Now a days it is a common sight to see the instalation of Rajarajeswary in Murugan temples in Sri Lanka. There are nine Rajarajeswary temples in Jaffna.

இலங்கை முருகன் கோயில் எல்லாம் இராஜ ராஜேஸ்வரி பிரதிஷ்டை. யாழ்ப்பாணத்தில் ராஜராஜேஸ்வரி கோயில்கள் ஒன்பது என்பதாகச் செய்தி. நாமும் இலங்கையர், யாழ்ப்பாணத்தார் என்ற கோதர்வில் இவற்றின் உண்மை நிலையை ஒருக்கால் உசாவிப் பார்க்கலாந்தானே.

இந்து சமயப் பெயர் வழக்கம் சைவ சமூகத்திற் பகிஷ்கரிக்கப்பட்டேயாக வேண்டும் அவசியத்தைத் துடியாக எடுத்துக் காட்டுவது இது.

இன்னுமொன்று அவசியமாகின்றது.

ஏலவே தமிழர் உறைபதிகளாயிருந்த டேர்பன், மொறிஷியஸ், மலேசியா, சிங்கப்பூர் போன்ற நாடுகள் தற்போது தமிழர் புலம் பெயர்ந்தமர்ந்த அமெரிக்கா, கனடா, சுவிஸ், இங்கிலண்ட், நோர்வே, பிரான்ஸ், ஜேர்மனி, முதலாம் நாடுகள், சமீப காலத்தில் சைவர்களாய் மாறிய அமெரிக்கர் வாழும் கலிபோர்ணியா, நியூயோர்க், சன்பிரான்சிஸ்கோ, ஹவாய் முதலிய நகரங்கள் அனைத்திலும் சைவர்களுடைய சமய ஸ்தாபனங்கள் எல்லாம் சைவம் என்ற பெயரிலல்லா தில்லாதிருக்கையில், அனைத்துக்கும் மத்திய ஸ்தாபனமாக அகில உலக சைவப் பெருமன்றம் (WSC) இருக்கையில், அவ்விஸ்தாபனப் பத்திரிகை தமிழிலும் ஆங்கிலத்திலும் சைவ உலகம் என்றே உலகெங்கும் உலாவி வருகையில் நாம் மட்டும் இந்துப் பெயர் தாங்கி நிற்றல் தகுதியாகாதே. அதுவும் சிவாகமங்களாற் பிரதிபாதிக்கப் பெற்றுச் சமயாசாரியார்களால் நற்சான்றளிக்கப் பெற்று நாவலர் பெருமானால்

பிரதிபாதித்தல் - எடுத்து விளக்குதல்

மீள் பிரதிட்டை செய்யப் பெற்ற சனாதன சைவத்தாய் நாட்டவராய நாம், நூற்றுக்கு நூறு சனாதன சைவரையே கொண்ட நாட்டவராகிய நாம், திருநெல்வேலி ஞானப் பிரகாசர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர், காசிவாசி செந்திநாதையர் என்போரைத் தமிழகத்துக்கே முன்மாதிரியான ஞானிகளாகப் படைத்துக் கொடுத்த ஒரு சைவ நாட்டவராகிய நாம், மாற்றுப் பெயர் வழக்கால் நேர்ந்த பழுதுகளை நன்கறிந்து கொண்டிருக்கும் நாம், நம் ஸ்தாபனங்கள் அனைத்தும் சைவம் என்ற பெயரால் இயங்க வைக்க வேண்டியதன் இன்றியமையாமையைச் சிந்தியுங்கள். சிந்தனை வழிச் செயற்படுங்கள்.

"பாஷாபிமானம் சமயாபிமானம் இல்லாதவர் வாழ்வும் ஒரு வாழ்வா"

-ராவ் பகதூர் சி.வை.தாமோதரம்பிள்ளை.

இதை இப்போதைக்கு ஒரு விளையாட்டாக எடுத்துக் கொள்வோமேல் பிற்பயக்கும் பீழை பெரிது ஆதல் நிஜம்.

---

பீழை - துன்பம்



## பிரசுரம் — இரண்டு

அன்றுமின்றும் என்றுமுயிர்க் காக்கம் ஆகும்
ஆன்மசிவ சம்பந்தத் தடக்கம் முற்றும்
நன்றுசெறிந் தொளிர்சைவம் வழக்கு நிற்க
நாதியற்ற இந்துவெனும் நாமஞ் சூடித்
துன்றிவரு சுமார்த்தர்புரி சூழ்ச்சிக் கெல்லாந்
துணைபோக வேண்டாம்நீர் தூய சைவம்
நின்றுவழக் கினிற்செழிக்க நீங்கள் போற்றும்
நிலையமெலாம் அதுவொன்றே நிலவச் செய்ம்மின்.

செந்தமிழ்ச் சைவச் சிந்தனைச் செல்வர்களுக்கு.

"சைவ சமயமே சமயம்" என்றார் தாயுமான சுவாமிகள். "மேன்மை கொள் சைவநீதி" என்றார் கச்சியப்ப சிவாச்சாரிய சுவாமிகள். "சைவமாம் சமயஞ் சாரும் ஊழ்பெறல் அரிது" என்றார் அருணந்தி சிவாச்சாரியர். "சைவத்தின் மேற் சமயம் வேறில்லை" என்றார் சைவ எல்லப்ப நாவலர். துறை தோய்ந்த மெய்ஞ்ஞான பாரம்பரியத்தினரான இவர்கள் நால்வரும் இப்படி இசைத்ததற்குக் காரணமாக அதன் யதார்த்தம் அறியத்தருவது. சைவ நன்மக்களால் அறிந்தே ஆக வேண்டுவது.

சைவம் என்ற பெயர் சிவனுடன் சம்பந்தம் என்ற பொருளில் நிற்பதாகத் திருமூலர் திருமந்திர மூலம்தெரிவித்த பிரகடனம் பிரசித்தமான ஒன்று. சம்பந்தம் என்றால் எதன் சம்பந்தம் என்ற வினாவெக்கு இடமுண்டு. ஒரு பொருளுடன் இனத்தால் ஒத்த மற்றொரு பொருளுக்கே சம்பந்தம் இருக்க முடியும். உள்பொருள்களில் சிவனும் ஆத்மாவுமே சித்துப்பொருட்கள் என இனத்தால் ஒத்தவை. இதனால் ஆத்மாசிவத்துடன் சம்பந்தமாதலே இங்குக் குறித்த சம்பந்தமாம்.

இவ்விரண்டும் புலக்காட்சிக்கு அகப்படவாராத பொருள்கள் ஆதலின் இவற்றின் சம்பந்தம் சாதாரண அறிவு விளக்கில் தரிசன-

மாதல் இல்லை. ஆனால் அருவப் பொருளியல்புகளையும் துலாம்பரமாகக் காட்டும் சைவ சித்தாந்த ஞான விளக்கில் அது தரிசனமாதல் தப்பாது. அவ்விளக்கில் அதனைத் தரிசித்து உலக உபகாரமாகத் தெரிவித்தவர்களே மேற்குறித்த நால்வருமாம்.

சைவ சித்தாந்த நோக்கின்படியான ஆத்மாவின் முழுமை வரலாற்றில் மூன்று நிலைகள் உள. மூன்றனுள்ளும் முதலானதாக உள்ளது கேவலநிலை. அது. ஆன்மா சிவனால் தநு. கரண. புவன. போகம் என்பன கொடுக்கப் பெற்று மீள் பிறப்புப் (புனருற்பவம்) பெறுதற்கு முந்திய நிலை. கேவலம் - தனிமை. கேவலநிலை தனிமை நிலை. தனக்கியல்பான ஆணவமுந்தானுமாய் ஆன்மா இருக்குந் தனிமை நிலை கேவலநிலை. காட்சி அடிப்படையிலும் அது கேவலமான தனிமை நிலை. உணர்ச்சி அடிப்படையிலும் அது கேவலமான தனிமை நிலை. இவ்விரண்டு அடிப்படைகளையும் ஒரு சேரப் புலப்படுத்தும் தாயுமான சுவாமிகள்.

"காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற
கண்ணிலாக் குழவியைப் போல் கட்டுண்டிருந்த நிலை"

என வர்ணித்துள்ளார்.

குழவி - குழந்தை. அதுவும் கண்ணிலாக் குழந்தை. அம்மட்டிலுமல்லாமல் ஆணவக் கருவறையில் விடப்பட்ட குழந்தை. அதாவது இருட்டறையிற் குருட்டுக் குழந்தை. போதாக் குறைக்குக் கட்டுண்டிருந்த குழந்தை என்றால் பேரப் பிரிய ஆட அசைய லாயக்கற்றிருந்த குழந்தை. என்னே குறித்த காலக் கேவலத்தின் கேவலம் இருந்தவாறு.

இக்கேவல நிலையிலும் அதன் கேவலத்தைப் பார்த்திரங்கி ஏற்குமளவில் அதற்கு விமோசனமளிக்க அதனுடனாய் இருந்தவர் சிவன். இச்சம்பந்தம் ஆத்மாவுக்குச் சிவனுடன் ஆன அநாதிசம்பந்தம் ஆகும்.

இக் கட்டத்திற் சிவன் ஆத்மாவுக்குச் செய்யும் விமோசன உபகாரம் இரு கட்டங்களில் அமைகிறது. கண்ணிலாமல் கஷ்டமுறும் ஆத்மாவின் குருட்டுத்தனத்தைச் சற்றே விலக்க உதவுவது முதற் கட்டம். ஆன்மாவில் ஓரோரளவு இயல்பாகவே இருக்கும் அறிவு. இச்சை. செயல் என்பவை ஆணவத்தின் அதிக்கிரமத்தால் மூடமாக்கப்பட்டிருக்கும் மறைப்பு நிலையே இங்கு குருட்டுத் தன்மை ஆவது. சிவனே ஆனாலும் அறிவியல் ரீதிக்கும் ஒத்த விதத்தில் உரிய சாதனங்கள் அல்லது கருவிகள் மூலமே காரியங்களைச் சாதிப்பவர் என்பர். அதற்கிணங்க ஆத்மாவின் அறிவு மூடத்தை விலக்க வித்தை என்ற ஒரு கருவியும்,



இச்சை மூடத்தை விலக்க அராகம் என்ற ஒரு கருவியும். செயல் மூடத்தை விலக்கக் கலை என்ற ஒரு கருவியும் தத்துவக் கருவிகளாக மாயையிலிருந்து படைத்து இறைவனாற் சேர்க்கப்படுகின்றன. இது இக் கேவல நிலையில் முதற்கட்ட உபகாரம் ஆகிறது.

சைவாலயங்களிற் பிரதிஷ்டை தினத்திற்கு முன் பிரதிஷ்டைக்குரிய விக்கிரகத்திற்கு "நயன உன் மீலனம்" என்ற பெயரில் கண்திறத்தல் கிரியை நடைபெறுதல் பிரசித்தம். அது ஆன்மாவுக்குச் சிவன் அறிவிச்சை செயல்களாகிய கண்களைத் திறக்கும் கேவலநிலை உபகாரத்தை அறிகுறி மாத்திரையாகக் கண்டு வழிபடவைக்கும் உபாயமாம். சைவாலயம் சம்பந்தப்பட்ட சகல கிரியை வழிபாட்டம்சங்களும் சைவஞான உண்மைகளை மக்கள் பொருத்தமான அறிகுறி வடிவில் கண்டு வணங்கி உபாசித்து வருதல் மூலம் அவைகுறிக்கும் பொருள் விளக்கத்தை உணர்ந்து கொள்ளவைக்கும் உயர் சாதனங்கள் என்பதும் இத் தொடர்பில் நினைக்கத்தகும். வழிபாட்டு முறையால் உண்மைகளை உணரவைக்கும் தந்திரம் சைவத்திற்குத் தனிச்சிறப்பாகும். அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் எனக் காட்டி. தெய்வம் என்ற பொருளுணர்வு. மக்கள் பெற்றோரை வழிபட்டு வருதல் மூலம் வந்தாக வேண்டும் என்பது சைவநிலை. இது அதற்குதாரணமாதல் அமையும்.

மேற்காட்டிய சிவன் உபகாரத்தினால் தனது அறிவிச்சை செயல்கள் சற்றே வெளிக்கப் பெற்ற ஆத்மா மேல். அறிதல். இரசித்தல். செயல்புரிதல் என்பவற்றில் ஈடுபடுவதற்கு ஆதார சாதனங்களும் வேறு வேண்டப்படுகின்றன. ஆத்மா தான் தங்கியிருந்து அவற்றைச் செய்தற்கிடமான உடம்பு. செயற்கருவிகளான கரணங்கள் இவற்றோடு கூடி ஆத்மா வசித்தற்குரிய உலகம் இவற்றோடு ஆத்மா உலகத்தில் வசித்திருந்து இயற்றும் செயல்களுக்கான அநுபவங்கள் என்ற நான்கையும் மாயையின் ஒரு பகுதியிலிருந்து படைத்துக் கேவல நிலையிலிருக்கும் ஆன்மாவுக்குச் சேர்த்து வைத்தலுஞ் சிவன் செயலாம். இவை நான்கும் முறையே தநு. கரண. புவனம். போகம் எனச் சைவ சித்தாந்த பரிபாஷையிற் கூறப்படும். இங்ஙனம் இவற்றை ஆன்மாவுக்குச் சேர்த்து அதை வாழவைத்தல் கேவலநிலையில் சிவன் ஆன்மாவுக்கு உபகரிக்கும் இரண்டாங்கட்ட உபகாரமாகும். இந்நிலையில் ஆத்மாவுக்குச் சிவனுடன் சம்பந்தம் இருத்தல் பற்றிய விளக்கம் இவ்வாற்றான் அமையும்.

இனி இருட்டறையிற் குருட்டுக் குழந்தையாய்க் கேவலநிலையிலிருந்த ஆன்மாவுக்கு அதன் அறிவிச்சை, செயல்களாகிய கண்களைச் சற்றே திறந்து மேலும் தநு, கரண புவன, போகங்களைச் சிவன் உதவும் வாய்ப்பினால், அது பல பல உலகங்களிலும், பலபல யோனிகளிலும் மாறி மாறிப் பிறந்து வாழ்ந்து இறந்து மீளவும் அப்படியே பிறந்து வாழ்ந்து இறந்து எண்ணற்ற தடவைகளாக உழன்று வருகின்றது. "எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்" என்ற திருவாசகம் ஆத்மா எடுக்கும் பிறப்பின் அளவின்மையையும், அப்பிறப்புகளிற் சம்பந்த முற்று ஆன்மாவானது பட்டுக் கெட்டலுக்கும் அலுப்பின் கனதியையும் பிரகடனப் படுத்தியிருத்தல் பகிரங்கம். இந்த நிலை சகலநிலை. சகலநிலை என்றால் கலை முதலிய தத்துவங்களோடு கூடி அவற்றின் உபகாரத்தால் ஆன்மா வாழும் நிலை. ஆன்ம முழுமை வரலாற்றில் இது இரண்டாவது நிலையாம். இந்நிலையில் அறிவுசற்றே வெளித்திருத்தலால் ஆத்மா தானே அறிவதாக உணரும். இச்சை சற்றே வெளித்திருப்பதால் தானே இச்சிப்பதாக எண்ணும். செயற் கண் சற்றே வெளித்திருப்பதால் தானே செயலாற்றுவதாக நினைக்கும். ஆனால், உண்மை நோக்கில் அது எல்லாவற்றையும் அறிவதுமில்லை. அறியும் ஒரு விஷயத்திலும் அதை முழுமையாக அறிவதுமில்லை. தான் இச்சிப்பவற்றில் திருப்தி காண்பதுமில்லை. நினைக்கும் எல்லாவற்றையும் அது செய்ய முடிவதுமில்லை; செய்து முடிப்பதுமில்லை; செய்யுஞ்சிலவற்றைத் தானும் கடைபோகச் செய்வதுமில்லை. பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்தது என்ற பழமொழிக்கிணங்க நடந்தொழிவனவும் ஏராளம். இத்தன்மைகளால், நமதென்று நாம் எண்ணும் அறிவிச்சை செயல்கள் நமதளவில் உள்ளன அன்று என்ற இரகசியம் வெளியாகி விடுகின்றது. எனவே ஒவ்வொருவர் அறிவிச்சை செயல்களின் பின்னணியிலும் அவரவர் அறியாதவிதத்தில் முழுமையுற்ற அறிவிச்சை செயல்கள் உள்ளவராகிய சிவன் இருந்து இயக்கிக் கொண்டிருத்தல் சைவஞானிகள் எல்லோராலும் ஒத்துக் கொள்ளப்பட்டதாயிற்று. காணப்படாத பொருளாதலால் இவற்றின் பின்னணியிற் கடவுளிருப்பை ஒத்துக் கொள்ளோம் எனச் சொல்லி வந்த பௌதிக விஞ்ஞானிகளும் இன்று இவ்வுண்மையைச் சூசகமாக வெளியிடுகின்றனர். பௌதிக விஞ்ஞானம் இனஞ் சுட்டாமல் பொதுவில் ஏதோ (Something) என்கின்றது. சைவம் தெட்டத் தெளிவாக அது சிவன் எனத் தெரிவித்துக் கூறுகின்றது. தெய்வ நம்பிக்கை உள்ள பிற சமயங்களும் தத்தமக்-

சூசகமாக - மறைமுகமாக, பக்குவமாக



கேற்ற வகையில், அவற்றுக்குரிய தலைவர் பெயரிற் சார்த்தி இவ்வுண்மையை ஏற்கின்றன. ஆனால் அச்சமயங்கள் கொள்கை அளவில் இதனை ஏற்பனவாயிருக்கச் சைவஞானம் முன் பின்னான ஆன்ம வரலாற்றியைபுக்கேற்கும் வகையில் இவ்வுண்மையின் இரகசியத்தை வெளிப்படுத்தும்.

அதாவது கேவல நிலையில் உடனாயிருந்து அந்நிலைக்கேற்ப உயிருக்கு உபகரித்து வந்த சிவமே இச்சகல நிலையிலும் உடனாக உள்ளிருந்து உபகரிக்கிறது. (காண்பார் ஆர் கண்ணுதலாய் காட்டாக் காலே என்ற அப்பர் தேவாரமும், அறிவிக்க அன்றி அறியா உளங்கள் (ஆத்மாக்கள்) என்ற சிவஞான போதமும் இதனையே தெரிவிக்கின்றன.) அதுவும் தன் இருப்பு உயிருக்குத் தோன்றாவண்ணம் இருந்து கொண்டே எல்லாஞ் செய்விக்கிறது. எனக் காட்டுதலாம். (தோன்றாத் துணை என்ற வழக்கு இதைச் சுட்டியே எழுந்ததாகும்.) அது தன்னைத் தோற்றா நிலையிலிருந்து கொண்டே உபகரிப்பதேன்? என்பதற்கும் இருக்கவே இருக்கிறது பொருத்தமான விளக்கம் ஒன்று.

இயல்பாகவே ஆணவ முனைப்போடு கூடியது ஆத்மா. அது சிவப்பேறாகிய உய்தி கூடுதற்கு ஏகப்பட்ட தடையாயுள்ளது அந்த முனைப்பொன்றே. அதனைத் தேய்த்தற் குபாயமும் தன்னிட்டமான அதன் செயற்பாடொன்றே. அதாவது தன் முனைப்பான வினையீட்டங்களாற் பிறவிகளைப் பெருக்கும் செயற்பாடொன்றே. அச்செயற்பாட்டினால் அது மாறி மாறிப் பிறப்புகளை எடுத்து உழன்று தன்னில் தானாகப் பட்டுப் படிக்கும் அநுபவம் வந்தாகும். அந்த அனுபவமான அலுப்பும், உவர்ப்பும் மாத்திரமே அம்முனைப்பைத் தேய்த்தழிக்க முடியும். அது அவ்வாறாதல், வண்டிச் சில்லுகள் உருள உருள அவற்றுக்காதாரமாயிருந்த அச்சுத் தேய்தலிலிருந்து அநுமானிக்கப்படும். இப்பேறு விளைந்தாக வேண்டிய கட்டத்தில் சிவன் தன்னியல்பு ஆத்மாவுக்குத் தோன்ற முன்னிற்பாராகில், அதிகரித்த பிரபாவமுள்ள ஒளியில் கண் தொழிற்படாமை போல, ஆத்மாவின் தொழிற்பாடு நிகழாதொழியவும், அதன் ஆணவமுனைப்புத் தேயாமல் இருந்து விடவும் நேரும். இது ஆத்ம நலனுக்கேற்றதல்ல. அது பற்றியே இக்கட்டமான சகல நிலையில் சிவம் முன்னெச்சரிக்கையாக ஆத்மாவின் பின்னணியில் மறைந்து நிற்கிறது. இதுவே அவ்விளக்கமாம்.

உபகரித்தல் - ஆதரித்தல்
பிரபாவம் - வலிமை

சகல நிலையில் சிவன் இப்படி நின்றியற்றும் உபகாரம் மறைநிலை உபகாரம் எனப்படும். இவ்வுபகாரத்தின் சார்பில் மற்றோரிகசியமும் அறிய உள்ளதாகும். தன் ஆற்றலற்றதாகிய ஆத்மாவைச் சிவன் பின்னின்று இயக்குவது பற்றிய விளக்கம் அதிலடங்கும். மேற்கண்ட விதமான ஆத்மாவின் ஆணவ முனைப்புத் தொழிற்பாடு இருந்தவற்றைத் தடவைக்குத் தடவை கண்டுகண்டு அவ்வப்போதைய அதன் நிலைக்குத் தக்கவாறு அதன் வினைப்பயன்களைச் சிவன் ஊட்டுதல் அவ்விரகசியமாகும். காவடி ஆடுபவனுடைய ஆட்டச் சுதியின் உத்வேகம் இருக்குந் தரத்தை அவனது கால் மிதியசைவுகளாற் கண்டுகண்டு அவ்வப்போதைய நிலைக்குத் தக்கவாறு செடிற்கயிற்றை இளக்கிக் கொடுக்க அவன் பின் மறைந்து நிற்கும் செடிற்காரன் நிலை போல்வது இது எனலாம்.

இந்நிலைமை இருபா இருபஃது என்ற சித்தாந்த நூலில் அருணந்தி சிவாசாரியாரால் கொடுக்கப்பட்டிருக்கும் ஒரு வர்ணனையை அறிதல் மூலம் நன்கு விளங்கிக் கொள்ளப்படும்.

"என்னுட் கரந்து என்பின் வந்தருளி
என்னையுந் தன்னையும் அறிவின்றியற்றும்
என்னது யானெனும் அகந்தையும் கண்டு
யாவையின் யாவையும் யாங்கணுஞ் சென்று
புக்குழிப் புக்குப் பெயர்ந்துழிப் பெயர்ந்து
மிக்க போகம் விதியால் விளைந்திட்டு
ஏற்பணி யாளாய் எனை நீங்காதே
ஓடி மீள்கென ஆடல் பார்த்திட்டு
என்வழி நின்றனன் எந்தை".

எனக்குள்ளே தான் மறைந்து, என்னை முன் விட்டுத் தான் எனக்குப் பின் வந்து, தன்னையும் என்னையும் நான் அறியாதபடி நடத்தி எனது அகங்காரமமகாரங்களின் நிலையையுங் கண்டுகண்டு அவ்வந்நிலைக்குத் தக்கவாறு எனக்கு அநுபவங்களையும் ஊட்டி ஊட்டி எனது வேலையாளாய் என்னை விட்டுப் பிரியாமல் நின்று, ஓடு மட்டும் ஓடித்திரும்பு, என்ற பாணியில் என்வழி நின்றான். எனது அப்பனாகிய சிவன் - என்பது அப்பாடலும் பொழிப்புமாம்.

இவ்வகையிற் காணும் போது இச்சகல நிலையில் ஆத்மாவுக்கு அமையும் சிவனுடனான சம்பந்தம் முன்னைய நிலையில் அமைந்ததிலும் பார்க்க அதிக வீறும் விறலும் மிக்கிருந்தல் காணலாம்.

---

விறல் - விசேடம்



இவ்வாறான சிவனது பின்னிலை உபகாரம், இதன் பேறாக ஆத்மாவின் ஆணவ முனைப்புத் தேய்ந்தழியும் இறுதிக் கட்டம் வரை உளதாகும். இதன் மேல் ஆத்மாவின் நிலை மூன்றாவது நிலையாகிய சுத்த நிலை எனப்படும். ஆன்மாவுக்குச் சிவனுடனான சம்பந்தம் இந்நிலையில், முன்னைய சகலநிலையில் இருந்ததற்கு நேரெதிராம். சகல நிலையில் ஆத்மாவை முன் நிற்கவிட்டுச் சிவன் பின் நின்றார். இந்நிலையிற் சிவன் முன் நிற்க ஆன்மா பின் நிற்கிறது.

"நும்பின் எம்மை நுழையப் பணியே என்பாரும்.
அன்பன் ஆரூர் ஆதிரை நாளா லதுவண்ணம்."

என்ற அப்பர் தேவாரம் சிவனது முன் நிலை உபகாரத்தை நன்கு காட்டுகிறது. திருவாதிரைத் திருவிழாச் சேவிக்கும் அடியார்கள், அப்பனே நாங்கள் உன்பின்னாக நிற்கும் நிலையை எமக்கு அருள்வாயாக. என்று வேண்டுகிறார்கள். ஆலய விழாக்களில் சுவாமி எழுந்தருளும் போது வழிபடுவோர் சுவாமிக்குப் பின்னாற் சேவித்துச் செல்ல வேண்டும் என்ற விதியினாலும் நடைமுறை வாழ்வில் இளையார், முதியோர் பின்னும், அறிவிற் சிறியார் அதிற் பெரியோர் பின்னும் செல்ல வேண்டும் என்ற விதியினாலும் சைவப் பண்பாடு இம்மெய்ஞ்ஞான உண்மையை அறிகுறி மாத்திரையாற் பேணிவருதல் உணரத்தரும்.

அக்கேவல நிலையிற் சிவன் புரிந்த உபகாரம் மறை நிலை உபகாரம் என்றால் இச் சுத்தநிலை உபகாரம் வெளிப்படை நிலை உபகாரம் எனப்படலாம். முன்னைய நிலை சிவன் ஆன்மாவை முன் நின்று செயற்பட விட்டுத்தான் பின் நின்று உபகரிப்பதாயிருக்க, இச் சுத்தநிலை சிவன் ஆன்மாவைப் பின் நிற்க விட்டுத் தானே முன்நிற்று உபகரிப்பதாகின்றது. இன்னுந் தெளிவாகச் சொல்வதானால் ஆத்மாவின் செயற் பொறுப்பு முழுவதையும் தன் பொறுப்பாக ஏற்றுக் கொண்டு சிவம் முன் நிற்கின்றமை எனலாம். எனவே முன்னைய நிலை ஆணவ முனைப்பின் விளைவான ஆன்மாவின் விருப்புக்குத்தக்கதாகச் சிவன் அருளும் நிலையாக, இந்த நிலை அருள் நோக்காகிய சிவன் விருப்புக்குத்தக ஆன்மா அடங்கி நிற்கும் நிலையாய் விடுகிறது. இந்தநிலையை.

"என் செயலாவது யாதொன்றுமில்லை இனித் தெய்வமே
உன்செய லேயேன் றுணரப் பெற்றேன்"

என்று பட்டினத்தடிகள் குறிப்பிட்டுள்ளார்.

---

சேவித்தல் - வணங்கல்
மாத்திரை - அளவை

சுத்தநிலை பெற்றுச் சிவன் செயலே தன் செயலாக உணர்வுபூர்வமாக அமைந்து நிற்கும் ஆத்மாக்களுடைய பொறுப்பு முழுவதையும் சிவன் தன் செயலாக ஏற்று நிற்கும் கருணை விசேடம் தேவாரப் புகழ் பெற்ற ஒன்றாகும். மார்க்கண்டேயர்க்கு ஆயுள் பதினாறு என்ற முறையிற் பதினாறாம் ஆண்டு முடிவில் அவருயிரைக் கொள்ள வருகிறான் யமன். அவ்வெல்லைக்கிடையில் அவர் தன் முயல்வால் சிவன் பின் தான் நிற்கும் சுத்தநிலை அடைந்துவிட்டமையை யமன் அறியான். அதனால் அந்நிலையில் அவர் பொறுப்பைத் தன் பொறுப்பாக ஏற்றுக் கொண்ட சிவனது காலுதைக்கு ஆளாகி இறக்கின்றான் யமன். இவ்வுபகாரத்தைப் போற்றிப் பரவும் திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள் தேவாரம் அந்த உதையின்தொனி. "என்னடியான் உயிரை வௌவேல்" என்றிரந்ததாகத் தெரிவிக்கின்றது.

"நின்னடியே வழிபடுவான் நிமலா நினைக்கருத
என்னடியான் உயிரை வௌவேல் என்றடற் கூற்றுதைத்த
பொன்னடியே பரவிநாளும் பூவொடு நீர்சுமக்கும்
நின்னடியார் இடர்களையாய் நெடுங்களம் மேயவனே".

என்பது தேவாரம்.

சைவ சமயாசாரியர் வரலாற்றில் அவர்களின் கருமத்தைச் சிவன் தன் கருமமாகவே கொண்டியற்றிய சம்பவங்கள் மிகப்பல. ஏனைய நாயன்மார் வரலாறுகளிலும் அங்ஙனமே. பிள்ளைகளின் பட்டினி வருத்தங் காணச் சகிக்காமையால் கடைசி மூச்சுவரை கழுத்தைவிட்டு விலக்கலாகாத தன் தாலியையே கழற்றி அதை விற்று அரிசி வாங்கி வருமாறு மனைவியார் கொடுத்துவிட அது செய்யுமளவுக்கு வேண்டுந் தன்முனைப் பற்று நின்ற குங்கிலியக் கலய நாயனார் தம் போக்கில் குங்குலியம் வாங்கிக் கொண்டு நேரே கோயிலுக்குப் போய் மனைவி - மக்கள் நினைவோடு தம் நினைவுங் கெட்ட நிலையில் கோயிலில் குங்குலியமிடும் நினைவே நினைவாக அங்கேயே தங்கியும் விடுகிறார். இது அவர் சிவனைப் பின் நிற்கும் நிலையாய் விடுகிறது. நிலைமை இதுவாக அவர் பொறுப்பைத் தன் பொறுப்பாக மேற் கொண்ட சிவன் திடுதிப்பென அவர் வீட்டில் வேண்டுந் திரவியமெலாம் நிரப்பி மனைவியார் சமையல் பண்ணத் தொடக்கிவிட்டு. "ஏன் இனி வீடு போய்ப் பசியாறி வரலாமே" என நாயனார்க்கும் உணர்த்தியதாக உள்ள வரலாறு இங்கு கருதக் தகும்.

---

வௌவேல் - எடுக்க வேண்டாம்



இனி இச் சுத்த நிலையின் முடிபாக ஆத்மா இனியும் பிறப்புக்கு வாராத நிலை அடைந்து சிவனைச் சார்ந்து தான் பேரின்பம் நுகர்வானாகவும். சிவன் அதனை வழங்குபவனாகவும் கண்டு பேரானந்தம் பெற்றிருக்கும் நிலையை விளக்க மற்றெல்லா நூல்களுக்கும் முன்னணியில் நிற்கும் திருவாசகம் இருக்கவே இருக்கிறது.

இது வரை நாம் கண்ட இவ்விபரமெல்லாஞ் சொல்வதென்ன? ஆன்மாவுக்கு முன்னுஞ் சிவசம்பந்தம். இடையிலுஞ் சிவசம்பந்தம். பின்னுஞ் சிவசம்பந்தம். என்றுஞ் சிவசம்பந்தம். எங்கும் சிவசம்பந்தம். தொடக்கங் காணாத் தொடக்கத்திலிருந்து முடிவு காணா முடிவுறுதி சிவசம்பந்தம் என்பதே தான் நாம் காண்பது.

இச் சிவ சம்பந்தத்தையே தன் உருவுந் திருவுமாகக் கொண்டமைந்த பெயர் சைவம்.

மருந்துக் குளிகையில் என்னென்ன பதார்த்தங்கள் சேர்ந்திருக்கின்றன. ஒவ்வோர் பதார்த்தமும் உள்ளுடலில் என்னென்ன பழுதுகளுக்கு. என்னென்ன வகையில் பரிகாரமாகின்றது. என அறியாமலே மருந்துக் குளிகையை விழுங்கி விடுவதும் அதனால் சுகங்காண்பதும் நமக்குப் பழக்கமாய் விட்ட வழக்கம். அதே போல் நமச்சிவாய மந்திரத்தில் எந்த அக்ஷரம் என்னென்ன பொருளின் நிற்கிறது. ஆத்ம நலப் பேற்றுக்கு அது என்னென்ன விதத்தில் உதவுகிறது என அறியா நிலையிற் கூட அதை உச்சரித்தால் நிச்சயம் ஆன்மலாபப் பேறு கிட்டுதற்கான சிவப் பிரீதி அதுவே உண்டாக்கும் என்பது திருமுறை உபதேசம்.

"ஏதும் ஒன்றும் அறிகிலர் ஆயினும்
ஓதி அஞ்செழுத்தும் உணர்வார் கட்குப்
பேதம் இன்றி அவரவர் உள்ளத்தே
மாதும் தாமும் மகிழ்வர்மாற் பேறரே"

- அப்பர் சுவாமிகள் தேவாரம்.

(மாற்பேறர் - திருமாற் பேறு என்ற சிவ தலத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபொருமான் )

இந்நோக்கில். மேற்கண்ட விபரப் பிரகாரம் சைவ மெய்ஞானக் கருவூலமாயிருக்கும் சைவம் என்ற பெயர் வழக்கும். வழங்குவோரிடத்தில் தன் பொருளான ஞான உணர்வைத் தானாகவே உணர்த்தி அவரவர் உள்ளத்தே மாதுந்தானுமாகச் சிவன் மகிழ்வைக்குஞ் சாதனமாதலில் ஆட்சேபம் நிகழ்தற் கிடமில்லையாகும். நமது

சிவாகமங்கள், சைவ சித்தாந்த சாஸ்திரங்கள், சைவ புராணங்கள், சைவத் திருமுறைகள் அனைத்தும் நமது முன்னாட் சைவ முது குரவர்கள் பின்னாட் சைவப் புனருத்தாரண சீலர்கள் அனைவரும் "சைவம்" என்ற பெயர் வழக்கையே மேற் கொண்டு வந்திருப்பதும் அப்பெயரின் அத்தகைய அருமை பெருமைகளைப் பேணும் நோக்கிலேயே என்பதில் அபிப்பிராய பேதம் இருக்க முடியாதென்பதும் அங்ஙனமே.

நேற்றுவரை, அதவாது மிகச் சமீப காலம் வரை, சைவ சமூக வழக்கில் பயின்று நிலைபெற்று வந்துள்ள சைவ சமயம், சைவாலயம், சைவாகமம், சைவக் குருமார், சைவ இளைஞர், சைவ மன்றம் என்ற அர்த்த பூர்வமான வழக்குகளே நமக்கழகானவை. அதற்கெதிர், சைவம் என்றதன் இடத்தை ஆக்கிரமிக்கும் அர்த்தமற்ற இந்துப் பெயரோடு கூடிய இந்து சமயம். இந்துக் கோவில், இந்து ஆகமம், இந்துக் குருமார், இந்து வாலிபர், இந்து மன்றம், இந்துப் பேரவை, இந்து தருமம் முதலிய வழக்குகள் சைவத்திற்கும், நமக்கும் அபகீர்த்தி விளைவிப்பவை. அகௌரவமானவை. இந்து என்ற பதத்தின் அசுபத் தன்மை, அர்த்தமின்மை, அந்நியத் தன்மைகளுக்கும் மேலாக, அதன் கர்த்தாக்களின் கொள்கை விகற்பச் சார்பில் அது கொண்டு காவும் சைவ விரோதத் தன்மையும் இயல்பான சைவத்தின் மேற் கால் போடும் அதன் ஆக்கிரமிப்புத் தன்மையும். நயவஞ்சகமான அதன் ஊடறுப்புத் தன்மையும் பிரசுரம் 1, இல் எடுத்துக்காட்டப்பட்டிருத்தல் கொண்டு இது நிச்சயிக்கப்படும்.

எனவே சைவ சமூகத்தில் ஒதுக்கிடம் பெற முயலும் "இந்து" எனும் இவ் வழக்கம் முற்றாக நிராகரிக்கப்பட்டுச் சைவ வழக்கே தனி வழக்கான நிலவ வைக்கப்பட வேண்டுமென்பதில் தவறேதும் இல்லையல்லவா? சிந்தியுங்கள்.

---

விகற்பம் - வேறுபாடு, தவறு



## பிரசுரம் — மூன்று

உற்றிருக்கும் உயிர்நலனுக் குறுதி நல்கும்
உண்மையுணர் வெய்துவிக்கும் தகுதி முற்றும்
பெற்றமொழி யெனுநோக்கில் ஆதரித்துப்
பேருலகங் காதலிக்குந் தமிழைச் சும்மா
மற்றுமுள மொழிகளிலொன் றாகக் கொண்டு
வாழ்வுதவுந் தொழிற்கருவி யாந்த னைக்கே
கற்றளவில் திருப்தியுறல் அடாது ஞானக்
காட்சிகைவந் திடுந்தனையுங் கற்றல் வேண்டும்.

*செந்தமிழ்ச் சைவச் சிந்தனைச் செல்வர்களுக்கு,*

தமிழர் என்றிருப்பவர்கள் தமிழைத் தமிழாக அறிய வேண்டும். அதாவது அன்பு, அறம், ஒழுக்கம், ஞானம்,தெய்வீகம் எனும் உயர் நலங்கள் வாய்ந்த மொழியாக அறிய வேண்டும். தமிழைத் தமிழாகப் படிக்க வேண்டும், என்றால், தமிழைப் படிப்பதற்கென்று பரம்பரையாகப் பழக்கப்பட்டு வந்த தனித்துவமான முறையிற் படிக்க வேண்டும். தமிழ்ப் பயனை உள்ளது உள்ளபடி உணர்ந்து அநுபவிக்க வேண்டும். அது என்னெனில் மெய்யறிவுணர்ச்சி பெறுதல் மூலம் சாமானியமான மனிதக் குறைபாடுகள் தீர்ந்து தமக்கும் பிறர்க்கும் எவ்விதத்திலும் தீங்கு விளைக்காத சான்றாண்மை நிலையைப் பெற்று அதனால் விளையும் சாந்த சமரச இன்பத்தை அநுபவிக்கலாம். நாளிதுவரை நம்தேசத்தில் வாழ்ந்து போன ஞானிகள், தமிழ்ப் புலவர்கள், தமிழ் மூதறிஞர்கள், ஆராய்ச்சி வல்லுநர்கள் ஒரேமுகமாக உரைத்துரைத்துணர்த்தி வைத்த உண்மை இதுவாகும்.

"யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவதெங்கும் காணோம்" என மிகச் சமீப காலத்தில் எழுந்தொலித்த மகாகவி பாரதியின் வாக்கின் யதார்த்தத்தையும் 'மெல்லத் தமிழ் இனிச் சாகும்' என அவர் பிறன் கூற்றாக வைத்துரைத்த வாக்கின் உணர்ச்சிப்

பின்னணியையுமாவது அவசியம் விளங்கி அரவணைத்துக் கொண்டு செயற்பட்டாக வேண்டும்.

அத்துடன் தரமான தமிழ்க் கல்வி தரும் உள்ளுருக்கப் பாங்கான உயர் பேறுகளை உணர்ச்சி கொப்பளிக்க எடுத்தோதும், 'தெளி-வுறவே அறிந்திடுதல் தெளிவு தர மொழிந்திடுதல் சிந்திப்பார்க்கே - களி வளர உள்ளத்தில் ஆனந்தக் கனவு பல காட்டல் கண்ணீர்த் - துளிவர உள்ளுருக்குதல் இங்கிவையெல்லாம் நீ அருளுந் தொழில்-களன்றோ ஒளி வளருந் தமிழ் வாணி அடியனேற்கிவையனைத்தும் அருளுவாயே.' என்ற பாரதி பாடற் பண்பையும், பரிவையும் ஒருக்கால் உளங் கொண்டு தமிழுக்குச் சுமாரான ஒரு பாஷை அந்தஸ்து மட்டும் வழங்குவதில் திருப்தியுறும் இக்காலக் கொடுமைக்குப் பரிந்து இரங்கியாக வேண்டும்.

அன்றியும் 'பேரானந்தப் பெரும் பொழிவாகிய இத்திருவாசகம் தமிழில் விளைந்தது என்னை எனில், முத்தர்களாகிய ஆன்மாக்-களுக்கு எல்லை கடந்து பெருகும் நிரதிசய ஆனந்த வெளிப்பாடு. தமிழாலன்றி விளையாமையினாலாம்' என்ற தாண்டவராய சுவாமி என்னும் சைவ மெய்ஞானியின் போற்றுதலையும் நோக்கித் தமிழின் தன்னிகரில்லா உயர்வை ஒருக்கால் உளங் கொண்டு இறும்பூது எய்துதல் வேண்டும்.

இனி, இன்றைய உயர்கல்வி மட்டத்திற் கூடத் தமிழ்ப் புலமையும், தரமும் பூச்சியத்தை நோக்கி வேகமாக வீழ்ச்சியடைந்து வருகின்றன, என்பது போல வெளிவரும் பகிரங்க செய்திகளைப் பார்க்கும் போதா-வது, 'உலகமெல்லாம் இகழ்ச்சி சொலப் பான்மை கெட்டு நாமமது தமி-ழரெனக் கொண்டிங்கு வாழ்ந்திடுதல் நன்றோ சொல்லீர்' என்றவாறான உரோசக் கிளுகிளுப்பும் தலையெடுக்குமேல் மகாவிசேடமாகும்.

இப்படியெல்லாம் இடித்துரைத்தாக வேண்டுமளவுக்கு என்ன பூராயந்தான் இத் தமிழிற் கிடந்து தொலைகிறதோ? என்ற விசாரம் எழுமேல் அது பெரிதும் வரவேற்கத்தக்கதாகும். அதன் உண்மை விளக்கத்தை உளப்பூர்வமாக ஏற்கும் போது இந்நாளில் தமிழ் சார்பிலாம் நமது செயற்பாட்டநுசரணைகளின் நலிவு மெலிவுகளும் நன்கு புலப்படவந்தாகும்.

நடைமுறை வாழ்க்கை விகொரங்களுக்குரிய பேச்சு, எழுத்துக்-கருவி என்றதன் மேல் நான்குமடி விசேடங் கொண்டுள்ளது தமிழ்

நான்குமடி - நான்குமடங்கு



மகிமை. செந்தமிழ், சங்கத்தமிழ், ஞானத்தமிழ், திருநெறியதமிழ் என்பவை தமிழின் பிரசித்தமான தர வேறுபாடுகள். சாதாரண பேச்சில் நிலவும் எழுத்துச் சோர்வு, சொற்சோர்வு, இலக்கணச் சோர்வு வசனநடைச் சோர்வுகளில்லாமல், ஓசையும் பொருளும் நேர்பட அமையுந் தமிழ் செந்தமிழ். வாழ்வியல் அநுபவத்தில் அறக்கனிந்து உலக நிலை, நிலையாமைகளை நிலை கண்டுணர்ந்து கொண்டோரிடம் விளங்கும் மானம், மரியாதை, நாணம், வீரம், கொடை, ஒப்புரவு முதலாம் மனித மேம் பண்புகளைப் போற்றிப் புனையும் தமிழ் சங்கத்தமிழ். செந்தமிழ் சாதாரணர் தமிழ் என்றால், சங்கத் தமிழ் சான்றோர் தமிழ். இனி நிலை பேறில்லாத வாழ்க்கை மயலின் பொய்மையைத் தெரிவித்து நிலைபேறான ஆன்மநல அனுபவங்-களை உள்ளடக்கும் பதி, பாச, பசு உண்மைகளை விளக்கும் தமிழ் ஞானத் தமிழ். ஞான முதிர்ச்சியால் சிவனைச் சார்ந்து அவனருளாற் பெறுங் குறைவிலாத நிறைவான பேரின்ப அநுபவத்தைப் பேசுந்தமிழ், திருநெறிய தமிழ். இந்நால்வகையுந் தமிழுக்கே சிறப்பாக உள்ளவை. தமிழருக்கென்றே உள்ளவை. தமிழராயுள்ளோர் தலையாய தம் வாழ்விலட்சியத்தை எய்தித் தீர்தற்கு உதவுதற்கென்றேயுள்ளவை.

'உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்' இது தமிழர் மேற்கோள். மொழியாகிய தமிழ்விசயத்திலும் அதன் உச்ச நிலையான திருநெறிய தமிழே தமிழராவாரின் முடிவான இலக்காகும். சமீபத்தில் மறைந்த பண்டிதமணி வரை இத்தலைமுறையறிந்த தமிழறிஞர்கள் கூட அதே நோக்கும் அதே பராக்கும் உள்ளோராய் இருந்தமை பிரசித்தம். எனவே, அரிவரியில் ஆரம்பித்து ஆன்மஞான அனுபூதிநூல்கள் வரை படிமுறைக் கிரமமாகச் சென்றேறி நிறைவுறுதல் தமிழ் மொழிக் கல்வியின் யதார்த்த நிலை என்பதற்கு ஆய்வு வேறு வேண்டியதில்லை.

இந்நோக்குச் செவ்வனே நிறைவுறுதற்கு உபகாரமான தமிழ்க் கல்வி படிமுறையேற்றத் திட்டமொன்று நெடுங்காலம் எழுதப்படாத திட்டமாய் இருந்து நல்லை நாவலரால் எழுதப்பட்ட திட்டமாக்கப்-பட்டதுண்டு. தமிழ்ப் புலமை என்றதலைப்பில் நாவலர் பிரபந்தத் திரட்டில் இடம்பெற்றிருக்கும் அத்திட்டத்தின் சுருக்க வடிவம் படிமுறைக் கிரமத்தில் பின்வருமாறு.

எழுத்தறிவு, வாசிப்புப் பயிற்சி, மனனப்பயிற்சி, அடிப்படை இலக்கண அறிவு, உரையுடனான சிற்றிலக்கியப் பயிற்சி, சிற்றிலக்கணத் தேர்ச்சி, புராணபடன தேர்ச்சி, உரையுடனான உயர் இலக்கணத் தேர்ச்சி, பரிமேலழகர் உரை, நச்சினார்க்கினியர் உரை, சேனாவரையர் உரை

போன்றவற்றின் தேர்ச்சி, சித்தாந்த நூற்கல்வி, அநுபூதி விளக்கத்தோடு கூடிய தேவார திருவாசகம் முதலிய அருள் நூற்கல்வி என்ற ஒழுங்கில் அமைகின்றது திட்டம். இத் திட்டம் முன் குறித்த தமிழ் வகைகள் நான்கையும் உள்ளடக்கி நிற்றல் காணலாம்.

யதார்த்தமான தமிழ்ப் புலமைத் தரத்தை எட்டுதற்கு இத்திட்டம் முழுமையாக அநுசரித்தற் பாலதாகும். இதன் ஒவ்வோர் அம்சமும் அதற்குபகரிக்கும் ஆற்றல் உள்ளதாதல் சற்றே விசாரித்துக் கொள்ளத்தகும். நாம் நன்கறியத் தக்கவாறு பாலர் வகுப்புத் தரத்திலிருந்து பல்கலைக்கழகக் கல்வித் தரம் வரை தமிழ் மாணவரை அலைச்சலுக்குள்ளாக்குவது பாட விசயங்களை முழுமையாக ஏற்கும் கிரகித்தல் என்ற ஆற்றலும், எழுதுவதை முன்பின் முரணறச் சிந்தித்து முறைபட எழுதும் ஆற்றலும் போதாக்குறையாய் இருப்பதே. க. பொ. த (சா . த). க. பொ. த (உ. த) மாணவர்கள் கல்லூரிகளில் முழுமையான பாட போதனை பெறுகிறார்கள். அதேகையோடு தனியார் கல்வி நிலையங்களிலும் அதேபாடங்களில் முழுமையான போதனை பெறுகிறார்கள். மேலும் பரீட்சைக்கு வருமென எதிர்பார்கப்படும் வினாக்களுக்குச் சரியான விடை கேட்டுப் பெற அவர்களிற் பெரும்பாலோர் பிறரிடமும் அலைகிறார்கள். இவர்கள் படிப்பு முயற்சி நிலை நாளொன்றில் 24 மணித்தியாலம் எம்மாத்திரமென்னும் அளவிற்கு இருக்கிறது. ஒன்று போல் இரு கல்விக் கூடங்களில் ஒருதடவைக்கு இருதடவையாகக் கற்றதன் மேலும் கற்ற அதே பாடங்களில் வரும் வினாக்களுக்குச் சரியான விடையைச் சுயமாகக் கண்டு கொள்ளவும் திருத்தமாக எழுதவும் முடியாதிருப்பதேன். அவற்றுக்குப் போதுமளவான கிரகிப்பாற்றலும், சிந்தனையாற்றலும், வசன ஆக்கத்திறனும் அவர்களிடத்திற் பூரணப்பட்டிராமையே காரணம் என்பதில் தவறில்லை. இக்குறைபாடு இவ் விடைநிலை மாணவர் மட்டிலல்ல, உயர்நிலை மாணவர் மட்டத்திலும் இல்லாமல் இல்லை என்பதைக் கவனிக்க வேண்டும்.

மேற்கண்ட நாவலர் திட்டத்தில் முதல் மூன்றம்சங்களான எழுதும் பயிற்சி, வாசிப்புப் பயிற்சி, மனனப் பயிற்சிகளைச் சார்ந்த கற்பித்தல் முறைகளால் இக்குறைபாடுகள் பெருமளவில் நீங்குதற்கு போதிய இடமுண்டு. எழுதும் பயிற்சி சார்பில் முன்பெல்லாம் நடைமுறையிலிருந்த முக்கிய அம்சம் சொல்வதெழுதல். வாசிப்புப் பயிற்சியில் முக்கியம் பெற்றிருந்த அம்சம் உரத்து வாசித்தல். நாமறிய இந்நூற்றாண்டில் 1930 களில் இவ்விரண்டும் அரசாங்கப் பரீட்சைப் பாடங்களாகவே இருந்து வந்ததுமுண்டு. அக்காலத்தில் இவற்றுக்கிருந்த முக்கியத்துவத்துக்கு இது ஆதாரம். இவற்றுள் சொல்வ-



தெழுதல் என்பது வசனப் பந்தியொன்றை ஆசிரியர் பகுதி பகுதியாகச் சொல்ல, மாணவர்கள் சொன்ன பகுதியை உற்றுக் கேட்டு மனத்தமைத்து அதே கையோடு எழுத்துக்கிரமம், சொற்கிரமம் பிழைக்காமல் எழுதி முடிப்பதாகும். இதன்கண், காது, மனம்,கை என்ற முக்கருவிகளும் ஒருங்கொத்த சீரான தயார் நிலையில் ஒன்றுபட்டிருந்து காரியத்தை முடித்தலாம். கிரகித்தல் ஆற்றல் வலுவுற்றாகும். வாசிப்புப் பயிற்சியில் இடம் பெறும் உரத்து வாசித்தல் என்பது குறித்த ஒரு பாடப் பகுதியை மாணவர்கள் உச்சரிப்புச் சோர்வு எழுத்துச் சோர்வுகளின்றி, வசன நிறுத்தக் குறிகளையும் அவதானித்துத் தம் செவிக்கும் பிறர் செவிக்கும் கேட்கும்படி வாசித்தலாம். இதன் மூலம் பார்க்கும் கண் கூர்மையாக பார்க்க, வாயுறுப்புக்கள் திருத்தமாக உச்சரிக்க, வாசித்த அம்சம் மனதிற் பதிய, வாசித்த ஓசை வாசிப்பவர் செவி வழியாக உட்புகுந்து மனம் பற்றியதற்கு அழுத்தங் கொடுக்கும் இவ்வகையால் இது முன்னைய பயிற்சியிலும் பார்க்கக் கூடுதலான கிரகித்தல் வலு உள்ளதாகும். இனி குறிக்கப்பட்ட வசனப் பகுதியையோ, சில செய்யுட்களையோ மாணவர் மீட்டு மீட்டு வாசித்து மனதில் அழுத்தி உள்ளது உள்ளவாறே வாயால் வெளியிடும் பயிற்சி மனனப் பயிற்சியாம். மனம் பற்றியதை மறவாமல் வைத்திருக்கச் செய்யும் ஞாபகசக்தியைத் திடப்படுத்துவதற்கு இதுபோற் சிறந்த மார்க்கம் வேறிருக்க முடியாது. கல்வி விஷயத்தில் ஞாபக சக்திக்கு உரிய முக்கியத்துவம் எவராலும் ஆட்சேபிக்கப்படுவதில்லை.

மேலும் குறித்த இம் முத்திறப் பயிற்சிகளால் இங்ஙனம் கிரகிக்கும் ஆற்றலும் ஞாபக சக்தியும் இஸ்திரம் பெறும் பேறாவதுடன் சொல் வடிவங்கள், வசன வடிவங்கள் மனதில் தங்கியிருந்து தகுதியான சொற்பிரயோகமும், சீரான வசன ஆக்கமும், அநாயாசமாகக் கைவர உதவும் ஒரு பெரும் பேறும் அமையும்.

இனி இப்போதைய நிலையில் தாம் கற்கும் இலக்கண, இலக்கியங்களில் ஏதோ ஓர் அம்சத்தையும் சுயமாகக் கையாண்டு துலாம்பரமாக விளங்கும் ஆற்றல் மாண்வர்களிடம் இருப்பதில்லை. காரணம் அதற்குத் தளமிடும் பாங்கான இலக்கண இலக்கியக் கல்வியை அவர்கள் பெறுவதில்லை. முன்னெல்லாம் ஒரு இலக்கியச் செய்யுளையோ, இலக்கணச் சூத்திரத்தையோ மாணவன் ஆசிரியர் முன்பாகப் பிழையின்றி வாசித்துப் பதம் பிரித்துப் பொருள் கூறி, நயங் கூறிப் போதாக்குறைக்குச் சொல்லிலக்கண முடிவுகளைத் தெரிவிக்கும் அளவுக்குப் பயிற்றும் முறையிருந்தது. ஆசிரியனும் மாணவனும் உணர்வொன்றி உள்ளங்கலந்திருந்து இலக்கண

இலக்கியங்களை ரசிக்கும் முறையால், படிப்பிக்கும் அம்சங்களில் சுவையூறித் தித்திக்கும் வாய்பும் உளதாயிற்று. அதற்கு அவற்றை உரைகளுடன் வரன்முறையாகக் கற்கும் நூற்கல்விக் கிரமம் உறுதுணையாய் இருந்து வந்தது. அது இப்போதில்லை. இன்றைய கீழ் வகுப்பு மேல்வகுப்பு அனைத்துக்கும் அவ்வவற்றுக்கு அரசு வழங்கும் பாடப்புத்தகங்கள் தோறும் இதற்கு வழிவிடுதற்கேற்ற பயிற்சிகள் இல்லாமலும் இல்லை. அவை முழுமையாக நடைமுறைப்படுத்தப்படுதலும் பெரும்பாலுமில்லை. இக் குறைபாடுகள் தீர்ந்து இலக்கண இலக்கியங்களை உரிய உரைகளுடன் ஆசிரியர் முகவொளியில் மாணவன் விளங்கும் நிலை அவசியம் ஏற்படவேண்டும். வகுப்புத் தரம் ஏற ஏற உரிய விகிதாசாரத்தில் அதன் தரமும் ஏறியேறி வந்து பட்டப்படிப்பு மட்டத்தில் உச்சவரம்பைத் தட்டும் நிலை எய்த வேண்டும்.

இனி நாவலர் திட்டத்தின் பிற்பகுதியாக உள்ளவை உயர் தமிழ் இலக்கண இலக்கியங்களும் அவற்றுக்கு இன்றியமையாத பரிமேலழகர் உரை, நச்சினாக்கினியர் உரை, சேனாவரையர் உரை போல்வனவும், இவ்வுரைகளில் தனித்துவ மாண்புகள் சிலாக்கியமானவையாகும்.

ஆன்றோர் அபிப்பிராயப்படி குறித்த உரையாசிரியர் ஒவ்வொருவரும் திருக்குறள் முதலிய உயரிலக்கியங்களைப் படைத்த ஆசிரியர்களுக்கு இணையான தமிழ்ப் புலமை உள்ளவர்கள். செய்யுள் தோறும் பதந்தோறும் ஆசிரியர் உள்ளம் பதிந்திருக்கும் இயல்பைத் தம் நுண்ணுணர்வால் அளவிட்டறிந்து நயமும் சுவையும் பெருக உரைவிரிப்பவர்கள். நூற் பெருமை நூற்பொருளருமை நூலாசிரியர் மகிமைகளைக் கண்ணே போற் கௌரவித்துப் போற்றி உரை கூறுபவர்கள். தமிழிலுள்ள அகில இலக்கண இலக்கிய மரபுகளில் ஒன்றுக்கும் பாதிப்பு நேராத வகையிற் அட்டாவதானமாக உரை செய்பவர்கள். அவர்கள் உரைகளில் அகிலத் தமிழ் இலக்கிய வாசனையும் பரிமளிக்கும். அகில இலக்கண விதி நுட்பங்களும் தேக்கறியும். கற்போர் பெறுதற்காம் தமிழ் புலமையிற் பெரும் பகுதிக்கு அவர் உரைகளே கருவூலமாயிருக்கும். இலக்கியம் பொருளோடு பொருளாக இலக்கணப் பொருளோடு பொருளாக உயரிய தத்துவ ஞானக் கோட்பாடுகளையும் விரவியிருப்பன அவர்களின் உரைகள். சான்றோர்க்கியல்பான அறிவியற் கலாசார வாசனை அவர் உரைகளில் கமகமக்கும். இவ்வாற்றால் மனித முழுமைத்துவத்துக்குக் கைகொடுத்துதவும் உபகாரிகளாகவும் அவற்றை அறிதல் கூடும்.

---

வரன் முறை - அடிப்பட வந்த முறை
விரவியிருத்தல் - கலந்திருத்தல்



சொற்சிக்கனமும் சொற் சாதுரியமும் பொதுளக் கருதிய கருத்தைச் சிதைவு முறிவில்லாத முழுமைப் பிரசவமாக வெளிக்கொணரும் வசனநடையழகுக்கு அவர்களே முன் மாதிரியானவர்கள். கருத்துத் தொடர்ச்சி இடையறாவண்ணம் தருக்க ரீதியாக வசனத் தொடர்ச்சியமைக்குந் திறம் அவர்கள் உரையால் மட்டுமே யார்க்கும் இலயிக்கத்தக்கதாகும். அவர்கள் உரையோடு நூற் கல்வி பெறுபவர்கள் முன்பின் முரண்பாடின்றி நூற் பொருளைக் கிரகிக்க வல்லோராவர். நூற் செய்யுட்கள் பதங்களுக்குத் தப்பர்த்தமோ விபரீதார்த்தமோ கொள்ளும் நிலைக்கு ஒரு போதும் ஆளாகார். தம் நுண்ணுணர்வால் நுனித்துக் காணும் நூற் பொருளுக்கே நூற்றுக்கு நூறு நேர்மையாய் இருப்பது அவரியல்பாய் இருக்கும்.

இப்பெருநலமெல்லாம் கற்போர்க்கு விருந்தாக வேண்டுமென்ற குறிக்கோள் இல்லாமல் நாவலர் பெருமான் அவர் உரைகளும் படிக்க வேண்டும் பாடமாக விதித்திருக்க முடியாது. அஃதில்லாமல் நாவலருஞ்சரி, ஸ்ரீமான். சி.வை.தாமோதரம்பிள்ளையும் சரி, டாக்டர். உ.வே. சாமிநாதையருஞ் சரி, அவரனையார் பிறருஞ்சரி கெட்டுச் சிதைந்தழியும் நிலையிலிருந்த பழவேடுகளைப் "போனால் துயர் போச்சுப் போ" என விட்டுவிடாமல் படாத சிரமமெல்லாம் பட்டுத் தேடிப் பகீரதப்பிரயத்தனம் பண்ணி ஆராய்ந்து இரந்தும் பொருள் பெற்று அவைகளை அச்சேற்றியிருக்க முடியாது. அவர்கள் பட்ட கஷ்ட நஷ்டங்களுக்கு நன்றிக்கடன் செலுத்துமளவிற்காவது அர்த்தமற்ற சாட்டுகளைச் சொல்லித் தப்பித்துக் கொள்ளும் தந்திரோபாயங்களை ஒருபால் ஒதுக்கிவிட்டு அவ்வுரைகளைப் பேணிப் படித்துப் பயன் கொள்ள வேண்டிய கடப்பாடு நம்மவர் கடப்பாடாகும்.

இதைப்பற்றிக் கிஞ்சித்தும் எண்ணிப்பாராது வசனங்கடுமை, விளங்கற் கடுமைச் சாட்டுக்களைச் சொல்லி அவற்றைப் புறந்தள்ளுவது மட்டிலன்றி அவற்றுக்குப் பதிலாகக் கால தேச வர்த்தமானங்களுக்கொத்த நவீனக் கருத்துக்களுக்கு புகலிடமாம்படி போலி உரைகள் எழுதி, வாழுந் தமிழ் மாணவரின் தமிழறிவு விருத்திக்கு முட்டுக் கட்டையிடும் இன்றைய இலக்கிய வர்த்தகர் முயற்சிகள் பரிகரிக்கப்பட்டாக வேண்டியவை.

குறித்த உரைகள் விளங்கவில்லை என்ற இவர்கள் சொற்குப் பொருள், இவற்றில் இப்போதெமக்கு விருப்பமில்லை என்பதற்கு வேறாயிருக்க முடியாது. இதற்குப் போதிய அத்தாட்சியும் உண்டு.

---

கிஞ்சித்தும் - சிறிதும்

தாவர சாஸ்திரம், பிராணி சாஸ்திரம், மருத்துவ சாஸ்திரம் படிக்கும் மாணவர்கள் எழுத்துக் கூட்ட, உச்சரிக்கப் பெரும்பிரச்சனையாக இருக்கும் இலத்தீன் சொற்கள் போன்றவற்றை இலகு சொற்களாக ஏற்றுக் கரைந்தபாடமாக்கி பரீட்சைகளிற் திறமைச் சித்திகளும் பெறுகிறார்கள். புலம் பெயர்ந்து மேல் நாடு சென்ற தமிழ் மாணவர் மட்டுமல்ல வயதுவந்தோர் கூட எழுத்துக் கூட்ட உச்சரிக்கத் தொந்தரவு தரும் ஜேர்மன் மொழி, பிரான்சியமொழி, ரஷிய மொழிகளில் கூடச் சுருங்கிய காலத்தில் தேர்ச்சி பெற்று உத்தியோகமும் பண்ணுகிறார்கள். இவை தெரிவிப்பதென்னெனில் விருப்பமும் தேவையுணர்ச்சியும் உள்ளபோது பாஷைக் கடினமும் தன்பாட்டில் விட்டுக்கொடுத்துவிடுகிறதென்பதேதான். நம் நாட்டில் தமிழ்க் கல்விக்குப் பொறுப்பாயுள்ளவர்கள் நன்மனசு வைத்து மாணவர்களிடத்தில் குறித்த உரைவசனத்திற் பிரியத்தையும். அவற்றைப் படித்தாக வேண்டிய தேவை உணர்சியையும் வருவித்தலாகாதோ என்றது இன்றைய ஆவல்.

பண்டை உரைகட்குப் பதில் போலியுரைகள் எழுதும் புத்திக்காரர் சிலர் பண்ணும் பழுதுகள் அளப்பில. இவர்கள் நூற்பொருளுருமை ஆசிரியர் மகிமைகளை மறைக்கிறார்கள். பதப்பொருள் விபரீதம் பண்ணுகிறார்கள். நூற் பொருளில் முன்பின் முரண்பாடுகள் பெருக்குகிறார்கள், தமிழிலக்கணத்தையே கெடுத்துவிடுகிறார்கள்.

திருக்குறள் ஒரு உயர்தர இலக்கியம். மருந்து பலன் செய்வதற்கு அநுபானம் போல, திருக்குறள் விளக்கத்திற்கு இன்றியமையாததெனப் பிரசித்தி பெற்றது பரிமேலழகர் உரை. இன்றைய க.பொ.த. உயர்தரத் தமிழ்மொழிப் பாடத்திட்டத்திலும் திருக்குறள் ஒழிபியல் பரிமேலழகர் உரையுடன் என்ற குறிப்புண்டாம். அஃதிருக்க பரிமேலழகர் உரைக்குப் பயன்படும், அல்லது பயப்படுத்தப்பட்டிருக்கும் மாணவர்களைத் தாக்காட்டும் பாங்கில் எழுந்த ஒழிபியற் புத்துரையொன்று எம் கவனத்தை வலிந்து தன்முகமாக்குகிறது.

குடிமையதிகாரத்து இரண்டாஞ் செய்யுள் 'ஒழுக்கமும் வாய்மையும் நாணும் இம் மூன்றும் இழுக்கார் குடிப்பிறந்தார்' என்பது. குடிப்பிறந்தார் இம்மூன்றிலும் வழுவ மாட்டார் என்பது அதன் பொருள். பரிமேலழகர் இப்பொருளைத் திடப்படுத்தும் நோக்கில், இழுக்கார் என்ற பதப்பொருளை விளக்கும் போது, கல்வியானன்றித் தாமாக வழுவமாட்டார் என எழுதியுள்ளர். அவர்கள் கல்வி விளக்கத்தின் பேறாக அவற்றிலிருந்து வழுவாது இருப்பவர் அல்லர். அப்படியிருப்பது அவர்கள்



பிறப்பியலிலுள்ள ஒன்று என்ற விளக்கத்தினால் திடப்படுத்தப்பட்டாகிறது. உரைக்கு இலகுத்தன்மை வேண்டும் புத்துரைகாரர் இங்கு கல்வியானன்றி என்பதை அநாவசியமாக்கி விட்டுத் தாங்களாகவே என்ற அளவில் உரை காட்டி அமைந்துவிட்டார். நான் நானாகவே தவறணைக்குப் போவதில்லை என்பது, வேறு சிலர் சகவாசத்தால் போயுள்ளேன் என்ற தொனியைத் தருவது போல, தாமாகவே வழுவார் என்பது வேற்றார் தூண்டுதலால் வழுவுவார் என்ற தொனியையும் கொடுத்து விபரீதம் விளைப்பதாகின்றதே என்பது பற்றி அவர் சிந்தித்திலர். இவ்வகை விபரீதம் எழவொட்டாமற் பரிமேலழகர் உரைக்கும் நயத்தை அவர் பார்த்திலர் போலும். என்னை, கல்வி முதலிய பிற ஏதுக்களால் அவர்கள் வழுவாது இருப்பவர்கள் அல்லர் என்றதுதானே பிற ஏதுக்களால் அவர்கள் வழுவுவரும் அல்லர் எனவும் குறிப்பித்து நிற்றலினால் என்க.

இனி இவ்வதிகாரத்து மூன்றாஞ் செய்யுளில் வரும் வாய்மைக்குடிக்கு என்ற தொடர்க்கு எக்காலத்தும் திரிபில்லாத குடியின் கண் பிறந்தார்க்கு என உரைத்த பரிமேலழகரின் உரைவிரிவு, இவர் புத்துரையில் உண்மையான உயர்குடி மக்களுக்கு எனச் சுருங்கியிருக்கிறது. பரிமேலழகர் வேண்டியது வாய்மை என்ற சொற்பொருளை சொன்மாத்திரையானன்றி பொருள் மாத்திரையாலும் கற்பவர் தெரிந்து கொள்ள வேண்டும் என்பது. அதன் மூலம் வாய்மை என்றால் என்ன எனத் தெரிவித்துக் காட்டும் பாங்கு அவருரையில் இடம்பெறுகின்றது. அதாவது எக்காலத்துந் திரிபில்லாதிருக்கும் பண்பே வாய்மை என அதன் இலக்கணம் அங்கு விளக்கப்பட்டிருக்கிறது. அதன் மூலம் எக்காலத்துந் திரிபில்லாமையாகிய இயல்பை தன்னியல்பாகக் கொண்ட குடி உயர்ந்தோர் குடியென்ற அதன் இலக்கணமும் பொருளொடு பொருளாகப் பொருந்தி விடும் வாய்ப்புண்டாதல் கண்கூடு. வாய்மை, உண்மையென்ற மாத்திரத்தால் இப் பொருட் பயனுக்கு இழப்பு நேர்தலும் கண்கூடு. பரிமேலழகர் உரை அதிகாரப் பொருள் நோக்கிலானது. புத்துரையாளர் உரை சும்மா சொற்பொருள் நோக்கிலானது. இதில் அதிகாரப் பொருட் சிறப்புக்கு மூழ்கடிப்பு, இதற்கெதிர் அதில் அதற்கு வாழ்வளிப்பு.

மேல் ஆறாஞ் செய்யுளில் சலம் பற்றி என்பதற்கு வஞ்சனையைப் பற்றி என்பது பரிமேலழகர் உரை. வறுமைபற்றி என்பது புத்துரைகாரர் உரை. வறுமை பற்றிக் குடிப்பிறந்தார் தவறுபடாமை ஏலவே நாலாவது செய்யுளில் முடிந்த காரியம். அதை மீளவும் எடுத்தோதுவது திருக்குறட் பண்பாகாமை வெளிப்படை. அத்துடன் சலம் - வறுமை என்ற

பொருளில் வந்தமைக்கு ஆட்சி வலுவும் உளதாகாது. இப்புத்துரைகாரர் சலத்துக்கு வறுமைப் பொருள் கற்பிக்க வேண்டின் மேற் கூறும் விரிவுரைப் பொருளுக்கும் ஆதார வலுவில்லையாகும். சல சல என்னும் இயல்போசை உடைமையால் நீருக்குச் சலம் என வழங்கப் பெற்ற பெயர் அவர் கருதுவது போல் வடமொழியுமாகாது. வடமொழியில் அசைவது என்ற பொருளில் உள்ள சல் என்ற வினையடியும் தண்ணீரைக் குறிக்கும் ஜலம் என்ற சொல்லின் மூலமும் வெவ்வேறு. எனவே சலம் பற்றி வறுமை பற்றி என இவர் சொல்லும் பொருள் திருக்குறள் அதிகாரப் பொருள் முன்பின் இயைபுக்காகாமையோடு மொழி மூலப் பொருள் இயைபுக்கும் ஒவ்வாத வெறும் கற்பனை விளக்கமளவேயாகின்றது. அதற்கெதிர் அதற்கு வஞ்சனை என்றுரைக்கும் பரிமேலழகர் உரை, வஞ்சி எனும் பொருளில் 'சல்' என்றுள்ள வினையடியிலெழுந்து, தமிழில் தற்பவமாய், வந்த 'சலம்' என்ற சொல் நிலைப் பொருளான 'வஞ்சனையை' வஞ்சகம் பண்ணாது காட்டும் செஞ்சொல் உரையாமாறு காண்க.

அப்பால் மானம் அதிகாரத்தின் 10 ஆஞ் செய்யுளில் 'மானமுடையார் ஒளி தொழுதேத்தும் உலகு' என்பதோர் தொடர். மானமுடையாரது புகழ் வடிவினை எஞ்ஞான்றும் தொழுது துதியாநிற்பர் உலகத்தார் என்பது இதற்காம் பரிமேலழகர்உரை. அங்ஙனமாகாது அவர்களின் புகழினைத்துதித்து உலகத்தார் வணங்குவர் என்பது புத்துரை. புகழென்றால் அதற்கு வடிவென்ன வடிவு? என இவர் அலுத்துக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. அது சரியன்று. பூவுலகில் புகழ் புரிந்தார் மறுமையில் எய்தும் ஒளியுடம்பு ஒன்றுண்மை தமிழிலக்கிய சம்மதமான ஒருண்மை. அவர்கள் தம் மறுமைப்பயன் அநுபவித்தற் பொருட்டுச் சுவர்க்கம் அடைய வேண்டும் அதற்காம் ஒரு வித உடல் அவர்க்கு இன்றியமையாதகும். அது ஒளிமயமான ஒருவித உடல். அவர்கள் விளைத்த புகழின் பேறாக விளையும் அவ்வொளியுடலே புகழுடல். இது சித்தாந்த ஞான சம்மதமுமாதலுடன் புறநானூற்றுச் செய்யுள் 27 இல் இலக்கிய சம்மதமாகவும் இடம் பெற்றாயிற்று. எனவே இலக்கிய மரபு பற்றித் திருக்குறளுக்கு உரை உரைக்கும் பரிமேலழகர்க்கு ஒளி புகழ் வடிவு எனக் கூறியேயாக வேண்டியாயிற்று. அன்றியும் தொழுது போற்றுதலை உடம்பட்டுரைக்கும் இவர் அச் செயற்கு முன்னிலையாயிருந்தாக வேண்டிய புகழுக்கு வடிவையும் வேண்டியேயிருந்தாக வேண்டும்.

---

தற்பவம் - தமிழில் திரிந்து வழங்கும் ஆரியச் சொல்

சல் - ச₁ சல் - ச₂ சலம் - ச₂



இனி இத்தொடர்பில் அடுத்த அதிகார முதற் செய்யுளை நோக்கும் இவர், அதில் வந்துள்ள ஒளி என்பதும் முன்னைய புகழ் என்னும் பொருளில் வந்ததாகக் கொள்ள வேண்டும் என்கிறார். இவரளவுக்கன்றி நூலிசைவுக்கு அது ஏற்குமாறில்லை. எங்ஙனமெனில், முதலதிகாரப் பெயர் மானம். அதன் இறுதிச் செய்யுட் பொருள் ஆகற்பாலது மானத்தின் வழுவாது ஒழுகுவார் பெறும் உயர் மதிப்பு. அதற்கேற்ப அங்குள்ள ஒளி புகழுடல் ஆவதே நூலியல்புக்கு ஏற்பதாம். அது போலாது, அடுத்த அதிகாரப் பெயர் பெருமை. பெருமையதிகாரத்திற் பேசப்படற்குரியது பெருமையொன்றே. அந்நோக்கில் அவ்வதிகாரத்தின் முதற் செய்யுளில் வரும். ஒளி ஒருவர்க்குள்ள வெறுக்கை என்பதில் உள்ள ஒளி ஒருவர்க்குள்ள வெறுக்கை பெருமை குறித்ததாகவே கொண்டு உரை விளக்கம் செய்கிறார் பரிமேலழகர். அதைத் தவறென்பர் ஆரோ? இங்ஙனம் அதிகாரப் பொருண்மைக்கு நேர்மையாக உரைப்பவர் பரிமேலழகர் என்பதை அவ்வதிகாரத்து இரண்டாஞ் செய்யுளுக்கு அவர் உரைத்த உரையும் இனிது காட்டும். அச் செய்யுளில் 'சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமையான் என்பது' ஒரு தொடர். அதில் சிறப்பு என்ற சொல்லுக்குப் பெருமை சிறுமை என்று, அதிகாரப் பொருளுக்கு நேர்மையாக உரைக்கும் பரிமேலழகர் மேல் வரும் தொழில் வேற்றுமை என்பதற்கு, செயல்களின் நன்மை தீமை வேறுபாடு என உரைப்பதே முன்னுக்குப் பின் பொருந்தும் உரையாம். அதைப் புறந்தள்ளி விட்டு இவருரைக்கும் தொழிலால் உயர்வு, தொழிலால் இழிவு என்ற கருத்து அதிகாரப்பொருட் புலத்துக்கு அயற்புலமான நவீன சமூகநல எடுகோளுக்குத் தோள் கொடுக்கும் கருவிலி உரை ஆமாறு காணத் தகும். சில வருடங்களாக இலக்கிய சர்ச்சை வடிவில் மட்டுக்கு மிஞ்சிய பிரசித்தி பெற்ற விஷயமாதலின் இதற்கு மேலதிக விரிவு வேண்டாம். ஆனால் அவசியமாக ஒன்றுமட்டும் சொல்லியாக வேண்டும். இவர்களின் இவ்வெடுகோள் கருத்து சான்றோர் இலக்கியத்துக்குத் தகுதியான கருத்தாகாது, அது சாதாரண சமூக இலக்கியக் கருத்தாகும். எனவே திருக்குறளில் இதற்கு உறுப்புரிமை கிடையாது. இதன்சார்பில் தமிழ் நூல் உரை விற்பத்தியில் அதிப் பிரசித்தி பெற்ற உரையாசிரியர் ஸ்ரீ.உ.வே.வை.மு.கிருஷ்ணமாசாரியர் கூற்றாக உள்ள பின்வரும் பந்திப் பொருள் நலம் அறியத்தகும்.

இச் செய்யுளில் பிறப்பொக்கும் என்பதற்குப் பிறப்பியல் ஒக்கும் எனப் பரிமேலழகர் கூறும் உரையையும் அதற்கு அவர் தந்துள்ள சித்தாந்த

---

வெறுக்கை - செல்வம் - விழுப்பொருள்

பொருண்மை - பொருட் தன்மை - கருத்துப்பொருள் உளதாம் தன்மை

ஞான பரமான விளக்கத்தையும் ஏற்காது, தாய் வயிற்றில் தங்கிப் பிறத்தல் எல்லார்க்கும் ஒக்கும், எனில் இத்தகு பிறப்பைக் கூற ஒரு வள்ளுவர் வரவேண்டுவதில்லை. அவருடைய குறள்கள் அனைத்தும் அணுவைத் துளைத்து ஏழ்கடலைப் புகட்டும் பாங்கில் ஆழ்ந்த தத்துவ ஞானங்களைப் பொதிந்துள்ளவை. அதற்கேற்பச் சீரிய முறையில் முன்பின் குறள்களுக்கேற்பவும் அதிகாரத்தலைப்புக் கேற்பவும் உரைவகுத்தலே தகுதியுடைத்து. அங்ஙனம் தானே பரிமேலழகர் உரை அமைந்துள்ளது.

இவை இவ்வாறாக இனி, இப் புத்துரை சார்ந்த இலக்கணப் புரளியும் ஒன்று. அது குடிமையதிகாரத்து எட்டாஞ் செய்யுள் சார்பில் அமைகிறது. 'நலத்தின் கண் நாரின்மை தோன்றின் அவனைக் குலத்தின் கண் ஐயப்படும்' என்பது செய்யுள். இதன் சார்பில் இவ்வுரைகாரர் குறிப்பிடுவது.

அவன் என்ற சுட்டுப் பெயர் ஐ வேற்றுமை உருபைப் பெற்றதாயினும் அது என்னும் ஆறாம் வேற்றுமை உருபுக்குரிய உடமைப் பொருளைத் தந்தது. இவ்வாறு ஓர் உருபு தனக்குரிய பொருளைத்த தராது பிற வேற்றுமைக்குரிய பொருளைத் தருமாயின் அது உருபு மயக்கம் எனப்படும். ஆக, அவனே என்பது உருபு மயக்கம் பெற்ற பெயர் (அவனது குலத்தின் கண்)

ஓர் உருபு நிற்றற்குரிய இடத்தில் மற்றோர் உருபு நின்று அதுபோலப் பொருள் தருவது உருபு மயக்கம் என்பது இலக்கணம். அதற்கேற்ப இன்ன இன்ன சூழ்நிலையில் இன்ன உருபுக்கு இன்ன உருபு மயங்கி நிற்கலாம் என வரையறுக்கும் இலக்கணம் தொல்காப்பியத்து வேற்றுமை மயங்கியலில் உண்டு.

"முதற் சினைக் கிளவிக்கு 'அது' வென் வேற்றுமை
முதற்கண் வரினே சினைக்கை வருமே" - தொல் - கொல் 87

முதல்முன் 'ஐ' வரின் கண்ணென் வேற்றுமை
சினை முன் வருதல் தெள்ளிதென்ப - மேற்படி - 88

முதற்சூத்திரம் முதற்பொருட் பெயருக்கு அது என்ற ஆறாம் வேற்றுமை வரின் சினைப் பொருட் பெயருக்கு ஐ என்ற இரண்டாம் வேற்றுமை வருதலையும் இரண்டாஞ் சூத்திரம் முதலுக்கு ஐ வரின் சினைக்கு கண் வருதலையும் விதிக்கின்றன. இவற்றில் இரண்டாவதன் படிக்கு அவனைக் குலத்தின் கண் ஐயப்படும் என்ற தொடரில் அவன் முதற் பொருட் பெயர் என்ற நிலையில் ஐ உருபு ஏற்று நிற்க, குலம்



அவனில் சினையல்லாத சினை என்ற நிலையில் கண் உருபு ஏற்றிருத்தல் இலக்கணப்படியானதே. (காட்சி மனிதனுக்குக் கை, கால் முதலியன சினையாவது போல கருத்து மனிதனுக்குக் குலம் குணம் ஆதியன சினையாகக் கொள்ளப் படுதல் இயல்பே) அப்படியாகவும் இங்கு இவ்வுரைகாரர் அதில் உருபு மயக்க விளக்கம் மேற்கொண்டுரைப்பதன் தேவை யாதாகுமோ? அன்றியும் அவர் வேண்டிய படி, முதற்பொருளுக்கு அது உருபு வரின் சினைப் பெயருக்கு ஐ உருபு வந்தாக வேண்டும் என்ற முதலாம் சூத்திர விதியும் தவறுபட்டாகின்றது. எனவே இது வீணே இலக்கணத்தைப் பிசக்கிய அர்த்தமற்ற தெளிவு.

இச் சில உதாரணங்களால் பரிமேலழகர் உரையைப் புறக்கணித்து விட்டுப் புத்துரை வகுத்தலால் திருக்குறட் பொருட் செம்மைக்கும் தமிழிலக்கண வரையறைக்கும் நேரும் இழப்புக்கள் வெளியாகின்றன. எனவே இப்பழுதுகளுக்கு இடம் கொடுத்தல் மூலம் தமிழ் தொன்மையைச் சிதைக்காமல் திருக்குறளுக்குப் பரிமேலழகர் தரும் உரையையே எக் கஷ்டப்பட்டும் படிக்க வேண்டும் எனல் இனிது புலனாகின்றது. இதே முக்கியத்துவமும் பயன்பாடும். அவ்வவ் நூல்கள் சார்ந்த அவ்வவ் ஆன்றோர் உரைகளுக்கும் உண்மை இதில் வைத்து நிச்சயிக்கப்படும்.

என்றும் எல்லாராலும் எதிர்பார்க்கப்படும் அளவிற்குத் தமிழரிடையில் தமிழ்ப் புலமையும் தமிழ்த் தரமும் தலையெடுக்க வைப்பதற்கு இவ்வுரைகளின் இன்றியமையாமை என்றும் உண்டு.

ஏதேனும் ஒருநல்வருவாய் தரும் தொழிலுக்கு உத்தரவாதம் அளிக்கும் பரீட்சை ஒன்றுக்கு அவசியம் அல்லாத பாடம் எதனையும் படிக்கும் சார்பு இந்நாளில் இல்லை. தமிழறிவு முதிர்ந்து அறிஞன் என்ற தகைமையோடு இருக்கும் வேட்கையால் தமிழை நாடித் தேடிப் படிக்கும் தமிழர் வழக்கம் மலையேறிச் சில தசாப்தங்கள் ஆகி விட்டன. பட்டப்படிப்புக்கு வேண்டியதாயிருந்தால் மாத்திரம் படிக்கும் அளவிலேயே தற்காலம் தமிழ்க் கல்வி தஞ்சம் காணும் நிலை உண்டு. ஆதலால் மேற்கண்ட நாவலர் பாடத்திட்டத்தின் இறுதிப் பகுதியை ஆதரிக்கும் பொறுப்பு பல்கலைக்கழகத்தையே சாரவேண்டியாகிறது. பிரதானமாக, மேற்கண்ட உரைகளைப் படிக்கும் வழக்கம் பல்கலைக் கழகத்துக்கு அத்தியாவசியம் எனக் காட்டப் பல ஏதுக்கள் உண்டு. பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறையினர் மட்டுமன்றி சகல துறையினரும் இறுதியாண்டுக்கு ஆராய்ச்சிக் கட்டுரை சமர்ப்பிக்காமல் தப்பித்துக் கொள்ள முடியாது. பட்டப்பின்படிப்பு மேற்கொள்வாருக்கு அத்தேவை மிகப் பெருமளவில் உண்டு. அவர்கள் முழுநூலே

எழுதி முடிக்க வேண்டியவர்கள். இவர்கள் படைப்புக்கள் இலக்கண சுத்தமான செவ்விய தமிழ் நடையில் இலக்கியச் சுவையும் சொட்டும் நல்ல ஆக்கங்களாக, இலக்கண நூலார் கூறும் கூறியது கூறல், மாறுகொளக் கூறல் முதலிய பத்து வகைக் குற்றமும் இன்றி, நவின்றோர்க்கு இனிமை, நன்மொழி புணர்த்தல் முதலிய பத்தழகு-களோடும் விளங்கும் செந்தமிழ்க் களஞ்சியங்களாகும் பேற்றை யாரே விரும்பார்? பொறுப்புக்கு உரியவர்கள் இப்பெருவிளைவுக்கு ஆவன செய்து உதவுதல் அவர்களின் தலைக் கடனாகும்.

இறுதியாக ஒன்று சொல்லி அமைவாம். இரண்டு மூன்று தசாப்-தங்களுக்கு முன்பாக நம் சமூகத்தில் கோயில் கும்பிட வரும் முதியோர்கள் இடையே கந்தபுராண, பெரிய புராண இலக்கியச் சர்ச்சைகள் நடக்கும். கடை வீதிகளில் சந்திக்கும் பண்டிதர்கள், ஆசிரியர்களிடையில் இலக்கண இலக்கிய சல்லாபங்கள் நடக்கும். சில வேளைகளில் அது சம்வாதமாக மாறி மேல் வாக்குவாதம் அளவிற்கும் உயரும். சங்கங்கள் சபைகளில் இலக்கியப் பொருள் வளம் பெருமளவில் அலையடிக்கும். தமிழறிந்தாரோடு அளவளாவி-யின்பம் பெற வேண்டி அவர்கள் இருக்குமிடம் தேடி நாற்றிசையிலு-மிருந்து வந்து செல்வார். வீதிகளில் தரிசனமாவர். யாழ்ப்பாண வீதிகளில் தடக்கி விழுந்தால் ஒரு தமிழ்ப் பண்டிதர் மேல் தான் விழ வேண்டும், என்று இங்கு வந்த கல்கி ஆசிரியர் கூறக் கேட்ட நினைவுப் பசுமை இன்னமும் மங்கி விடவில்லை. இவ்வகையில் இங்கு இலக்கியத் தமிழ் இயங்கிக் கொண்டிருக்கின்றது எனக்கண்ட சுப தரிசனமும் திருப்தியும் அருகிப் போயின. இன்றைய பல்லின வரட்சிகளுள்ளும் இலக்கியத் தமிழ் வரட்சி தலையான வரட்சியாக இருக்கக் காணும் கண்ணிறாவியும், ஒரு புறம் இந் நிலை திரும்பாதா என்பதல்ல ஏன் திரும்பக் கூடாது என்பதே இன்றைய விசாரம்.

ஒளி - (பெருமை) ஒருவர்க்கு உள்ள வெறுக்கை உற்சாக சக்தி-யாலாம் ஊக்கமிகுதி, வள்ளுவர் குறளும் உரையும் இவை, ஒளியில் ஒவ்வொருவரின் உற்சாக சக்தியும் ஒவ்வொருக்கால் தலைதூக்கி-னாலே தமிழ்ப் பண்பும் பயனும் உச்ச வரம்பைத் தட்டி நிற்பதற்கு மிச்சாமிச்சமாம்.



## பிரசுரம் — நான்கு

இந்துஎன்ற பெயர்க்குப்பதில் எங்கள் சைவம்
சைவன்என்றே சொல்களன யாழ்ப்பா ணத்தில்
வந்துசொன்னார் மகரிஷிவி வேகா னந்தர்
வரலாற்றுக் கண்கூட இருண்ட தாலே
அந்தமஹான் சொன்னதையும் தலைகீ ழாக்கிச்
சைவன்என்றால் இந்துஎன்றே சொல்க என்னும்
மந்தமதி களும்நமரேல் எளியே முக்கு
வாழ்ச்சியெங்கே தலைகீழாம் வீழ்ச்சி தானே.

**செந்தமிழ்ச் சைவச் சிந்தனைச் செல்வர்களுக்கு.**

தமிழராகிய நமது சமயம் சைவம், அதன் சார்பாக எதிர்பார்க்-கப்படும் உன்னதப் பேறு சிவமய விளைவு. தமிழர் பாரம்பரியம் இதை உன்னதப் பேறாகக் கொண்டிருந்தமைக்கு ஆதாரம் உண்டு. தமிழர்-களால் எழுதப்படும் நூல்கள், ஆவணங்கள் பத்திரங்கள் எல்லா-வற்றிலும் சிவனது முதற்படைப்பாகிய விந்துவைக் குறிக்கும் சுழியும் நாதத்தைக் குறிக்கும் கீறும் ஒன்றிய வடிவான பிள்ளையார் சுழி இட்ட கையோடு சிவமயம் கண்டிப்பாக எழுதப்படும் வழக்கம் இருந்திருத்தல் கண்கூடு.

கடல் உள்ளவரையும் அதிற் குமிழிகள், நுரைகள், அலைகள் தோன்றாதிருக்க முடியாமை போல உலகம் உள்ளவரை மக்கள் மத்தியில் ஆசாபாசமயம், மோசமயம், கவர்ச்சிமயம், சுயநலமயம் முதலான பல்வேறு மயங்கள் தோன்றாதிருக்க முடியாது. இவை எல்லாம் படைப்புக்கு மூலமாகிய மாயையின் விகாசங்கள். ஆதலால் இவை தங்கள் குணமாகிய மயக்கத்தை விளைக்காதிருக்கவும் முடியாது. மக்களினம் அவற்றுக்கு ஆட்பட்டு விடும் நிர்ப்பந்தத்துக்கு

விகாசம் - மலர்ச்சி; பிரகாசம்

ஆளாகாமல் இருந்து விடவும் முடியாது. அதே வேளை, அவற்றின் செல்வாக்கிற்கு உட்பட்டிருக்கும் அளவும் மக்கள் தமது நிரந்தரத் தொல்லை ஆகிய பிறப்பு இறப்புக் கொடுமையில் இருந்து மீட்சிபெறவும் முடியாது.

இத்தர்ம சங்கடமான நிலைக்குள்ளான உயிர்களுக்கு விமோசனம் அளிக்க வேண்டிச் சைவம் கண்ட ஒரே ஒரு மார்க்கம் இந்த மயங்களின் வியாபக எல்லைகளுக்கு மேற்பட்டு இவற்றை அமுக்கி நிற்கும் அளவு சிவமயத்தைப் பெருக்குதல் ஒன்றே. அம்மார்க்கம் திருஞானசம்பந்த-மூர்த்தி நாயனாரால் கடைப்பிடிக்கப் பெற்றிருப்பது அவருக்கு வழங்கும் 'சிவம் பெருக்கும் பிள்ளையார்' என்னும் பெயரால் இனிது விளங்கும். இவர் போல்வார் அடுத்தடுத்துத் தோன்றுவதும் நிரந்தர-மாகத் தொடர்ந்து இருப்பதும் ஆகுங் காரியங்கள் அல்ல. இக் கைங்கரியம் சமூகத்தில் தொடர்ந்தேர்ச்சியாகச் சரியான முறையில் சாத்தியமாவதற்கு ஏற்ற இடமாகச் சைவ ஆலயம் அமைகிறது. சைவ ஆலயத்தில் நித்திய, நைமித்தியம் என்பவற்றால் நாளிலும் பொழுதிலும் தேக்கப்படும் சிவமயம் தன் பிரபாவத்தால் சமூகத்-துட்புகுந்து மேற் குறித்த லௌகிக மயங்களை மழுங்கடிக்க, அதனால் சமூகம் சுபீட்சம் அடைய வேண்டியது முறையாகும்.

'ஆலயம் தொழுவது சாலவும் நன்று' எனவும் 'கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' எனவும் எழுந்த அறிவுரைகள் இது சார்பான-வையே. தமது தேவாரம் ஒன்றில் இதற்கு அழுத்தம் கொடுத்து உரைக்-கும் அப்பர் சுவாமிகள், 'ஒருக்காலும் திருக்கோயில் சூழாராகில் அவை எல்லாம் ஊரல்ல அடவி காடே'. என இதனை ஊரிலட்சணத்தில் அமைத்துப் பேசி உள்ளமை கருதத்தகும். ஆலயம் தொழா மக்கள் வாழும் ஊருக்கு ஊரிலட்சணம் இல்லை. அது வனாந்தரக் காடாகவே இருக்க முடியும், என்று இவர் கூறுவதன் தாற்பரியம் யாதாகலாம்.

காடு வேடர் ஆதிக்கத்தில் உள்ள பகுதி. துஷ்ட மிருகங்களின் அட்டகாசம் உள்ள பகுதியுமாம். வேடர்க்கு இயல்பான தொழில் ஆக்கிரமித்தலும், அலைத்துப் பறித்தலுமாம். துஷ்ட மிருகங்களுக்கு இயல்பான தொழில் துன்புறுத்தலாம். சைவஞான நோக்கில் மக்களை உலக வாழ்வில் வைத்து ஆட்டி அலைக்கும் ஐம் புலன்களை வேடர்கள் என உருவகப்படுத்திக் கூறுதல் வழக்கம். ஆலயம் விளக்-கும் சிவமயம் தன்னிடத்தில் நுழைதற்கு வாய்ப்பில்லாத ஊரில் இந்த ஐம்புல வேடர்களின் செயற்பாடுகளே மிஞ்சி இருக்கும். இச்சை, மயக்கம் போல்வனவாகச் சொல்லப்படும் இந்த ஐம்புல வேடர்களின்



செயற்பாடுகளே மேற்குறித்த ஆசைமயம், சுயநலமயம், உழைப்பு-மயம், பணமயம் முதலான அனைத்து மயங்களுமாம். எனவே ஆலயத்தால் சிவமயம் பெருக்கப்படாத ஊர், காட்சி அளவுக்கு ஊராக இருக்கலாமே அன்றிக் கருத்தளவுக்கு அது காடே தான் என்பது அதன் தாற்பரியமாம்.

நமது முகத்துக் கண்ணாற் காணும் காட்சி ஊனக்காட்சி. அதற்கு இந்த ஐம்புலக் கொடுமைகள் புலப்படுவது இல்லை. அதே வேளை, அகத்துக் காட்சியாகிய உள்ளுணர்வுக் காட்சிக்கு அது புலப்படாது இருப்பதும் இல்லை. அவ்வகையிலான சில வருமாறு:-

"ஐம்பெரு மா பூதங்கள் ஒருவீர் வேண்டிற்றொருவீர் வேண்டீர் ஈண்டிவ் வுலகமெல்லாம் உம்பரமே உம்வசமே ஆக்குகின்றீர்".

"மூள்வாய தொழிற் பஞ்சேந்திரிய வஞ்ச முகரிகாள் முழுதும் இவ்-வுலகை ஓடி நாள்வாயும் உம்முடைய மம்மராணை நடாத்துகின்றீர்".

"விரைந்தாம் நல்குரவே செல்வே (செல்வமே) பொல்லா வெகுட்-சியே, மகிழ்ச்சியே, வெறுப்பே நீங்கள் விரைந்தோடி இவ்வுலகை அரித்துத் தின்பீர்".

இப்படியான ஞானக்காட்சி விளக்கங்கள் எல்லாம் அத்தாற்-பரியத்துக்கு மேலதிக அத்தாட்சிகளாம். எனவே, சிவமயம் ஒன்றல்-லாத ஏனைய மயங்கள் அனைத்தும் தம்மியல்பில் தீங்கானவை. சிவமயத்தால் பரிகரிக்கப்பட்டாக வேண்டியவை என்பது மறுக்-கொணாத உண்மை ஆகின்றது.

இன்றைய சூழ்நிலையிலும் பலரும் பலகாலும் இவ்வுண்மையின் நிலைபற்றிப் பிரலாபித்துக் கொள்ளுதல் பழக்கப்பட்டுப் போன ஒருவழக்கமாகவும் இருந்து வருகிறது. இதனை உற்றுநோக்கி உள்நுழைந்து உசாவிப்பார்த்தால்.

சமூகத்தில் நுழைந்து சமூகப்பழுதுகளைத் தீர்த்து நலம் விளைக்க வேண்டிய அரச நீதியுள், சமூகப் பழுதுகள் நுழைந்து அரச நீதியை விபரீதமாக்குவது போல ஆலயம் பிதிபலிக்க வேண்டிய சிவமயத்துள் ஆசைமயம் உழைப்புமயம், அதிகாரமயம், அறியாமை-மயங்கள் போன்ற லௌகிக மயங்கள் புகுந்து விபரீதம் விளைக்கும் நிலை இருந்து கொண்டிருப்பதாகவே தெரிகின்றது. கௌரவ கண்ணிய நோக்கில் இதனை விரித்து விமர்சிக்காமல் ஏலவே

பிரசித்தமான ஒரு உதாரணத்தால் மட்டும் சுட்டிக்காட்டி அமைதல் சிலாக்கியமாகும்.

கோண்டாவிலைச் சேர்ந்த அன்பர் ஒருவர் விசனத்துடன் வரைந்த கடிதத்தின் சாரம்சம் இது.

அந்தணப் பெரியோர்கள் ஆலயங்களில் தாம் செய்யும் பூசை, அபிசேகம் மற்றும் கிரியைகளுக்கு வேதனமாக (தக்ஷிணையாக ) இவ்வளவு தொகை வைத்தாற்தான் வருவோம் என்று பேரம் பேசுகின்றார்கள். அடம்பிடிக்கின்றார்கள். இவ்வாறு நிபந்தனை விதிப்பது சைவசமய பாரம்பரியத்துக்கும், சிவதர்மத்துக்கும், சமய அறிவு ஆசாரத்துக்கும் ஏற்புடைய ஒழுங்கா? அந்தணப் பெரியோர்களை உரிய முறையில் மதித்துப் பேணி அவர்களின் தேவைகளை நிறைவு செய்யும் வகையில் பொறுப்புடன் செயற்பட வேண்டியது சமூகத்தின் கடமை என்பது சரியேயானால், பணஞ்சம்பாதிக்கும் வர்த்தக நிலையம் போல் ஆலயத்தைப் பயன்படுத்திப் பூசைக்குப் பேரம் பேசுவதும் தீபம் காட்டுதற்கும் கட்டணம் விதிப்பதும் நியாயமானதா?

இந்த வாசகரின் கேள்விக்குப் பதில் தரவேண்டியது அந்தணப் பெரியோர்களினதும் வைசமய அமைப்புக்களினதும் கடனாகும் - (சஞ்சீவி 14.08.98)

இது நம்குரல் அன்று நாட்டின் குரல் என்பதைக் கவனிக்க வேண்டும். மேற்குறித்த மயங்களுள் கொழுத்தமயமான உழைப்புமயம் சைவாலயத்துள் நுழைந்துள்ளமைக்கு இது தக்க உதாரணமாகும்.

ஆலய கிரியையிற் சம்பந்தப்படும் பூசகர் சிவமயம் மட்டும் பெருக்கி விட்டுத் தான் சர்வபட்டினியாய்க் கிடக்க வைக்கும் நிலை கிரியைகளின் சார்பில் இல்லவே இல்லை. அவருடைய அன்றாட வாழ்க்கைக்கு அவசியமானவை பல அவ்வக் கிரியைக்கு உபகரணங்களாக, கிரியையில் கையாளப்படும் பொருள்களாக அடங்கியுள்ளன. இது சைவ ஆலயக்கிரியைகளின் சர்வ உபகாரத் தன்மைக்கு அறிகுறியாகும். லௌகீகத்தை விரட்டி ஆத்மிகத்தை முன்னெடுக்கும் போக்குச் சமண. பௌத்தப் போக்கு. அது சைவப் போக்குக்கு நேர் விரோதம். ஒரு அபிஷேகக் கிரியை பூசைக்கிரியை சார்பில் பூசகர் ஒருவர் பொருளாகவும், பொன்னாகவும் பெறக்கிடப்பனவற்றின் விபரம் அகிலப் பிரசித்தம் ஆதலின் அதற்கு விளக்கம் வேறு வேண்டா.



இனி, அபிஷேகம் பூசை முதலிய ஆலயயக்கிரியைகள் உடல் உழைப்பை பிரதானமாக்கி உறுப்புக்களைத் தொழிற்படுத்தும் சாதாரண தொழில் போல்வதன்று. ஒப்புக் கொண்ட ஒரு ஒப்பந்தத்தை நிறைவேற்றிக் கேட்கப்பட்டதைப் பெற்றுக் கொள்ளும் தன்மையினதும் அன்று. உடலுறுப்புகளின் தொழிற்பாட்டை விட அதிகமாக உள்ளத்தின் ஈடுபாடும் உணர்வுருக்கமும் தன்னிழப்பும் வேண்டி உள்ளவை அவை. தியான பாவனைகளால் உள்ளும் புறமும் தம்மைத் தாமே சிவம் ஆக்கிக் கொண்டு ஏதொன்றும் தான் செய்வதல்ல சிவன் செய்வதாம்படி அச்சிவன் போல் விருப்பு வெறுப்பற்ற தியான யோகநிலையில் இருந்து ஆத்ம திருப்தியும் சிவானுபவமுமே கண்ணாக அதனை நிறைவேற்றுபவர் பூசகர். கிரியைக்கு முன்னோ பின்னோ அது பற்றிய எவ்வகைப் பல்பேறும் பற்றிய விசாரம் அவர்க்குப் பொருந்தாத ஒன்றாகும். அவர் வாழ்வு குறித்து அவர் சிந்திக்க வேண்டிய பொறுப்புக்களைத் தாமாகவே சிந்தித்து அவருக்கு நிரம்பக் கொடுப்பது கிரியைகளைச் செய்விப்பவர் பொறுப்பு. அதை அவர் சரியாகச் செய்யாத இடத்து அவர் கிரியை செய்வித்ததற்குப் பலன் இல்லை. மூல சிவாகமங்கள். 207 உபாகமங்கள். நூற்றுக்கணக்கான பத்ததிகள் அவற்றுக்கு எழுந்த வியாக்கியானங்கள் என்ற அனைத்துக்கும் ஒரே விதமாக முடிந்த உண்மை இது.

நிலைமை இதுவாகலின், தானாகக் கிடைப்பது ஏதுவோ அது சிவன் தந்தது என்ற அர்ப்பண புத்தியுடன் ஏற்கும் நிலைக்கு உரியவராகிய பூசகர் விஷயத்தில் பேரம் என்ற பேச்சு யதார்த்தமான அவர் நிலைக்கு முற்றிலும் அந்நியமும், பெறுமளவில் திருப்தியுறுதல் அவர்க்குச் சுய கௌரவமும் ஆகும். இத்தகைய அவர் நிலையே சிவமயம். கிரியை செய்விப்பவரை அவர் தமது தியான பாவனைச் சாமர்த்தியங்களாற் தம்மோடு இயைத்துக் கொண்டு செய்வதனால் செய்விப்பவருஞ் சிவமயமே ஆகிறார். இவ்விதம் கிரியையை நிறைவேற்றும் பூசகர் கிரியை முடிவில் கிரியைப் பலனையுஞ் சிவனிடமே ஒப்பித்து விட்டுச் "செயலும் உனதே பலனும் உனதே, கிரியை செய்விப்பவரும் உம்மவரே அவருக்காம் பலனும் உம் பொறுப்பே" என முற்று முழுதாக அனைத்தையும் சிவன் பால் ஒப்படைத்து விடுவதால் ஆகும் விளைவு யாது? அது சிவமயம். சைவாலயம் ஒன்றில் இத்தகைய ஆசார அனுட்டானங்களுடன் தினசரி நடைபெறும் கிரியைகளினால் எங்கும் சிவமயமே நிலவும். அது ஆலயத்துக்கு அழகு தருவதாகும்.

ஆலயத்தை இடமாகக் கொண்டெழும் இச் சிவமயம் வெறுமனே பூசகர் மட்டில் மாத்திரம் அமைவதன்று. அதற்கு அவர் பிரதான பாத்திரம் என்னும் அளவே இதில் அவர் பங்காகும். அவரது பேச்சு, செயற்பிரபாவங்களினால் இது அங்கே பூசை அபிஷேகம் செய்விப்பவர், பூசைக் கைங்கரியங்களுக்குத் தொண்டர்களாக நின்று உதவுபவர்கள், வழிபாட்டாளர் அனைவருமே இதற்குப் பாத்திரம் ஆவர்.

அபிஷேகம் பூசை செய்யும் பூசகர் சாதாரண சந்தியாவந்தன அனுட்டான சுத்தி செய்த பின்னரும் சிவபூசை செய்து தமது அகப்புறச் சுத்திகளை உறுதிப்படுத்திக் கொண்டு, அதன் மேலும் மந்திர பாவனை சகிதமான பஞ்சசுத்திகள் செய்து கொண்டே பூசைக் கிரியைகளில் ஈடுபடுகின்றார். அவரது பிரபாவத்தால் அவர் தம்மோடு இயைத்துக் கொள்ளும் உபயகாரருக்கும் தற்காலிகமாகவாவது இவை உளவாகும் வாய்ப்பு உண்டு. அதை ஏற்பதற்கான அடிப்படைத் தகுதி இவருக்கும் வேண்டி உள்ளதே. இவரும் தனது ஸ்நான சுத்தியோடு குறைந்த பட்சம் சைவ அனுஷ்டான சுத்தியாவது பெற்றிருத்தல் அவசியமாம். சைவ அனுட்டானக் கிரமத்தால் உளதாகும் அகப்புறத் தூய்மை அவரை அதற்குத் தகுதி ஆக்குகிறது. கோயில் தொண்டர், வழிபடுவோர், வாத்தியகாரர் ஆகியோர்க்கும் இந்த அனுட்டானக் கிரியை அத்தியாவசியம் என்றே பேசப்படுகிறது. இவர்கள் உபயகாரர் போலப் பூசை கிரியைகளில் நேரடியாகச் சம்பந்தப்படுதல் இல்லை எனினும், அங்கு நிகழும் பூசை கிரியைகளில் இடம் பெறும் மந்திர சாதனைகளால் எழக்கூடும் சார்ச்சி அலைகளைத் தம்மை அறியாமலே தாம் ஏற்கும் வாய்ப்பு இவர்களுக்கும் உளதாம். எனவே, அதற்காம் தூய்மைத் தகுதி பெறும் நோக்கில் அவர்களும், அதாவது கோயில் வளாகத்திற் சம்பந்தப்படும் அனைவரும் சைவ அனுட்டானக்களை விளங்கவே நின்றாக வேண்டும் என்ற நியமம் உளதாயிற்று.

காந்தம் இரும்பை ஈர்க்கும் தான். ஆனால், இரும்பு மண் மூடி இருக்கும் போது அது நிகழாது. எனவே, அப்படிச் செய்து தான் ஆக வேணுமோ என்பது பலன் தரும் ஆட்சேபம் ஆகாது. கோயில் வளாகத்தில் சிவமயப் பிரபாவம் நேர்தலை நிராகரிக்கும் அர்த்தமற்ற ஆட்சேபமாகவே அது அமையும்.

பிறசமயத்தார் கோயில்களில் நிற்பது போல் மேற்சட்டையுடன் நாமும் நின்றால் என்ன? என்பது இந்நாளில் பிரபலமான ஒரு ஆசங்கை. அது தவறு. மேற்சட்டை தழுவாத தமிழ் உடையிலேயே கோயிலில் நின்றாக வேண்டும் என்பதற்கும் பிரதான காரணம் முற்குறித்த



காரணமே. கோயில் வழிபடுவர் தனது தேகப்பற்றையே பலிபீடத்தின் முன்னிருந்து கும்பிடுதல் மூலம் நீக்கிக்கொள்ள வேண்டும், என்பது விதியாய் இருக்கையில், மேற்சட்டையெனத் தேவைக்கு அதிகமான இன்னொன்றையும் சேர்த்துக் கொள்ளுதல் எங்ஙனம் பொருந்தும். அத்துடன் சைவாலய வழிபாடு, ஆலயத்தில் ததும்பும் அருள் அலைகளை ஐம்புலன்களாலும் உள்வாங்கிக் கொள்ளும் இலட்சணம் உடையது. எனவே ஐம்புலன்களின் ஒன்றான பரிச உணர்வைத் தாங்கும் வழிபடுவர் மேனி, அத்தியாவசிய தேவைக்கு மேல் மறைக்கப்பட்டிருத்தல் ஆகாது என்பது பொருத்தமான நியமம். மேற்சட்டை இவற்றுக்குக் குந்தகமானது என்பதனை யாரும் ஆட்சேபிக்க முடியாது.

மறுசமயத்தவர் தத்தம் கோயில்களில் மேற்சட்டையோடு நிற்பதை ஆட்சேபித்தற்கு எதுவுமில்லை. அவர்கள் கோயில்களில், சைவக் கோயில்களிற் போல மந்திரக் கிரியைகளினால் ஏற்படும் சார்ச்சி அலைகளைப் பரிச மூலம் ஏற்க வேண்டும் நிலை இல்லை. அதனால் அவர்கள் சட்டையோடு நிற்பதும், சட்டை இன்றி நிற்பதும் ஒன்றுதான். அவர்கள் சமய இயல்புக்கு அது சரி. அது நமக்கு முன்மாதிரியாதற்கு இடமில்லை, என்பதும் இத்தொடர்பில் அறியத்தகும்.

மேலும் திருநீற்றுக்கு விசேட ஆற்றல் ஒன்று உண்டு. மந்திரசக்தியை ஏற்றுப் பயன் விளைப்பது அதன் விசேட ஆற்றல். ‘மந்திரம் ஆவது நீறு’ என்ற தேவார வார்த்தை அதற்கு ஆதாரமாம். மந்திர சக்தியை ஏற்றுக் கொள்ளும் தன்மையால் தானே மந்திரமாய் உதவக் கூடியது நீறு என்பது அதன் விளக்கம். சைவர் வாழ்வியலில் பொதுவாகவும் சைவ ஆலய வழிபாட்டில் விசேடமாகவும் திருநீறு அணிதல் வற்புறுத்தப்பட்டிருக்கும் காரணங்களில் முக்கியமானது இதுவாகும். சிவனே திருநீற்றுக் கோலம். மாணிக்கவாசகருக்கு நீற்றுக் கோடி நிமிர்ந்து காட்டியவர் சிவன். திருஞானசம்பந்தர் கையில் மந்திரமும், மருந்துமாகிப் பாண்டியன் வெப்பு நோய் தீர்த்தது திருநீறு. நீற்றுக் கோலமாய் நின்று நினைப்பவர் உள்ளத்தில் தான் சிவன் இலகுவில் தோன்றுபவன் என்கிறார் அப்பர் சுவாமிகள். வெண்ணீற்றொளி சிவனடியார் உள்ளத்தொளிக்கு ஞாபகம் என்கிறார் சேக்கிழார். நாங்களும் நிறைவாய்ப்பூசிக் கொண்டு கண்ணை மூடித்தியானிக்க உள்ளெல்லாம் வெள்ளொளியாய்த் திகழ்வது கண்கூடு. இந்த விஞ்ஞானகாலத்திலும் மாந்திரீகர்கள் கையில் மூட்டைக் கணக்கில் இருந்து வீபூதி பல சாதனைகளை விளைத்து வருதலை, ஒன்றையும்

நம்பாத நாஸ்திகர்கள் கூட நம்புகிறார்கள். இவ்வகையில் வீபூதி அணிந்த கோலம் ஆலயங்களில் அத்தியாவசியமாக வேண்டப்படு- கிறது. ஆலயத்தில் பரவும் மந்திர சக்தி அலைகளை வசீகரித்து தன்னை அணிந்திருப்பவர்கள் இடத்தும் அவ் வயலிலும் நிகழ வைத்தலில் பிரபல்யமானது வீபூதி.

வீபூதிக்கு அடுத்த படியாக ஆலயங்களிற் சிவமயம் தழைக்க வைக்க வல்லவை பஞ்சாட்சர செபமும் திருமுறை ஓதலும். அவற்றுள் பஞ்சாட்சரசெபம் உயர்ந்த சாதனையாளர்களுக்கே பொருந்தும். அதுபோல் ஆகாது , திருமுறை கற்றார், கல்லார், சிறியார், பெரியார், பாலர், விருத்தர் எல்லார்க்கும் பொருத்தமானதாகும். திருமுறையின் ஒவ்வோர் பாடலும், ஒவ்வோர் வார்த்தையும், ஒவ்வோர் பதமும் கடவுள் சிவன் பெயராக, சிவன் இலட்சணமாக, சிவன் புகழாக, சிவத்தியான மந்திரமாக அன்றி இருப்பதில்லை. உண்மைப் பக்தியில் தோய்ந்து, கனிந்து, பழுத்த அனுபவச் சொற்கள் வாக்கியங்கள் ஆதலால் அவற்றை உச்சரிக்கும் நாவே சிவமயமாம். உச்சரிப்பவரான ஆளே சிவமயமாவர். உச்சரிக்கப்படும் சூழல் சிவமயமாம். இத்திருமுறையை பத்தியை வருவித்துக் கொண்டு படிப்பது என்பது இல்லை. விசிறியைம் விசுக்கப் பவனம் தன்னாலே அசைவது போல திருமுறையைப் படிக்கப்படிக்கப் பக்தி தன்னாலேவந்து, வந்து மூளும். ஆதலால், திருமுறை ஓதலுக்கு ஆலயத்தில் சிவமயம் விளைக்கும் ஆற்றல் மிகவும் உண்டு. எனவே ஐயர், அடியார், ஆண், பெண், குழந்தை, வயோதிபர் என்ற பேதமின்றி ஆலயத்தில் எவரெவர் எது எது செய்யும் பொழுதும் அவரவர் வாயில் எல்லாம் திருமுறை ஒலித்தாக வேண்டும், பூசையில் மற்றும் மந்திரங்களுக்குச் சமமாகத் திருமுறை ஓதிஓதி மலரிடும் அர்ச்சனை முறை ஆட்சி பெற வேண்டும். தற்காலிகமாகப் பூசை வழக்கில் ஊடுருவி இருக்கும் அவதாரய வழக்கு, பண்டைய வழக்கில் இருந்த அருளிப்பாடுக என்ற அருள் வாக்குக்குப் புனர்- வாழ்வளித்து, விலகிக் கொள்ள வேண்டும். இனி,

இச் சிவமய விளைவுக்கு இன்றியமையாதவற்றுள் மற்றொன்று சித்தாந்தஞானவுணர்ச்சியும், அதன் அநுபவவிளக்கமும். சைவா- லயமே சிவஞானியொருவரின் உடலமைப்பு வடிவம். சிவனையறிந்து சிவனையடைதலே ஞானலக்ஷணம், ஆலயத்திற்குரிய நித்திய, நைமித்திக பூசை விழா ஒவ்வொன்றும் சித்தாந்த ஞானப் பின்னணி- யோடு கூடியவை. கோயிலில் மணியடித்தல், சகல படைப்புகளுக்கும் ஆதிகாரணமாவதும் சகலபடைப்புகளிலும் நின்று கொண்டிருப்-



[illegible] நாதகத்துவத் தோற்றம். அபிஷேகம், சீவ அன்பில், சிவனை [illegible], தீர்த்தமாடல், சிவனருளில் ஆன்மா முழுகுதல். தூபங்காட்டுதல் சிவனது கிரியாசக்தி விளைவின் தோற்றம். நாசித்துவாரத்திற்கெதிரே தூபங்காட்ட வேண்டும் என அகோர- சிவாசாரிய பத்ததி சொல்கிறது. இப்பிரபஞ்சமெல்லாம் பிரமத்தின் நிச்சுவாசம் என வேதோபநிடதங்கள் கூறுகின்றன. பிரபஞ்சம் கிரியாசத்தியினால் ஆம் விளைவென்பதில் ஆட்சேபமில்லை. எனவே, இத்தூபங்காட்டுங் கிரியை வேதாகம விளக்க அடிப்படையிலான ஒரு தத்துவப் பின்னணியைக் கொண்டிருத்தல் கண்கூடு. இவ்வாறே தீபந்- தரிசிப்பித்தல் சிவனது ஞானசக்தி விளக்கமென்றும் அது முக்கண்- களுக்குமெதிரே தர்சிப்பிக்கப்படவேண்டுமென்றும் மேற்குறித்த பத்ததி சொல்கிறது. நைவேத்தியம் பண்ணுதல் சீவ போதத்தைச் சிவன் ஏற்க வைத்தல் என்று பத்ததிகளும், ஜீவன் முத்தி நிலையில் உயிரில் அந்தரங்கமாயிருந்த சிவம் வெளிப்பட்டு உடலிலும் வியாபித்து ( எந்தன் உடலிடங் கொண்டாய் எங்கெழுந்தருளுவது இனியே - திருவாசகம்) நிற்கையிற் சீவன் முத்தருண்ணுமுணவு சிவனேயுண்ணு முணவாந்தன்மையை முன்னிட்டுச் சிவனை உண்- பித்தலாகச் சைவத்திருமுறைகளும் தெரிவிக்கின்றன. ‘அடியேன் உண்ட ஊன் உனக்காம் வகை எனதுள்ளத்துள் எழுந்தருள் பரஞ்- சோதி' என்ற திருவிசைப்பாப் பாடல் இங்கு அறியத்தகும். சிவன் சார்பில் அல்லாமல் ஆணவத்துடனான ஆன்மாவுக்குப் பந்த மோட்ச வாழ்வில்லை, என்ற விளக்கந்தர நிகழ்விக்கின்றது கொடியேற்றம், மகோற்சவ நிகழ்வுகள் ஒட்டு மொத்தமாகச் சிவனது பஞ்சகிருத்திய விளக்கம் தோற்றுபவை. பிரபஞ்ச சிருஷ்டிப் பொருட்டுச் சிவன் சக்தியைத் தோற்றி அதனுடன் கூடுதல் என்ற ஞான விளக்கப் பின்னணியில் அமைகிறது திருக்கல்யாணம். இத்தியாதி இத்தியாதி.

ஆலய வழிபாட்டில் கையுயர்த்திக்கூப்பல், தன்னளவுக்குட- னிருந்தானேனும் ஆன்மா எட்டுதற்கரிய உச்சத்திலுள்ளான் சிவன், என்ற உண்மையின் விளக்கம். நிலத்தில் விழுந்து கும்பிடுதல் தேகப்பற்றைக் கீழ்ப்படுத்தி விடுவதாகவும், மீள எழுதல் தேகத்தை விட்டுத் தேகியாகிய ஆத்மாவாக வழிபடுவதாகவும் உள்ள இலட்- சணத்தைக் காட்டும். அங்ஙனம் கும்பிடுங்கால் முகத்தை அழுத்தித் தலையைத் தாழ்த்துதல் சிவனடிக்கீழ் ஆன்மா ஒடுங்கி இன்புறும் தாடலை என்ற அத்துவிதச் சேர்க்கை அநுபவவிளக்கம். திருவிழா-

---

தாடலை - தாள் + தலை - உயிரின் தலை இறைதாளுடன் ஒன்றல்

வில் சுவாமிக்குப் பின் போதல், ஆன்மா தன்முனைப்படங்கித் திருவருளின் பின் செல்லுதல் என்ற ஞான அநுபவ விளக்கம். 'நும்பின் எம்மை நுழையப் பணியே' என்று திருவாரூர்த் திருவாதிரை விழாவில் வழிபாடாற்றும் அடியார்கள் வேண்டிக் கொண்டதாக வரும் அப்பர் அருளிச்செயல் இங்கு கருதத் தகும். அடியளித்தல், திருவிழா உலாவில் புறப்பட்ட சிவனது நிலத்திற் பதிந்த திருவடிச் சுவடுகளைத் தலைமேற் கொள்ளல் என்ற ஞான விளக்க அம்சமாய் அமையும். 'பூவாரடிச் சுவடென்மேற் பொறித்து வை' என்ற அப்பர் பிரார்த்தனை விளக்கம் இதிலுண்டு . இத்தியாதி. இத்தியாதி.

மேற்குறித்த விதமான உண்மை உணர்வு விளக்கப் பின்னணியில் இன்றைய நடைமுறையில் கோயிற் கிரியைகள், வழிபாடுகள் இடம்பெறக் காண்கின்றோமா? அழுது உருகி அன்பு நீராட்டி அபிஷேகம் செய்து பரிவு காட்டி மெச்சிப் பாராட்டி (கண்ணப்ப நாயனார் போல) சுவாமியை உண்பிக்கும் பொறுதியான நைவேத்தியம் நிகழ்த்தி அதற்கு அடுத்தனவுஞ் செய்து பூசித்து ரமிக்கும் காட்சி அருகி அருகிப் போகிறதே. இவற்றின் அருமை, பெருமை தெரியும் அறிவாற்றல் பெரும்பாலுஞ் சொரூபிப்பது இல்லை. இதற்குக் காரணம் பூசகர் வழிபடுவோர் சார்பில் சைவ சித்தாந்த ஞான விளக்கம் பெரிதும் அருகிப் போயினமையே எனல் வெளிப்படையாகத் தெரிகிறது.

கோயிலுக்குக் கோயில் சித்தாந்த ஞான விளக்கமுள்ளோருக்கு வரவேற்பிருந்தது ஒருகாலம். சித்தாந்த சாத்திரப் படிப்பாய் இல்லாவிட்டாலும் கந்தபுராண, பெரியபுராண, திருவாதவூரடிகள் புராணங்கள் தெரிவிக்கும் உண்மைஞான விளக்கங்களைக் கோயில் மண்டபத்திற் பொறுத்திருந்து கேட்கும் வழக்கம் பிரபல்யமாய் இருந்தது அக்காலம். இப்போ நிலைமைவேறு. உவற்றைச் சொல்லு-வோரில் கவர்ச்சி இல்லை என்பது ஒரு சாட்டு. உவை விளங்காது என்பது மறுசாட்டு. சுவாமி கும்பிடுவதற்கு உதெல்லாம் ஏன்? என்பது மற்றொரு விதப்பு. லௌகீகப் பாங்கான கவர்ச்சி மயம், அறியாமை மயங்களின் பிரதிபலிப்புக்கள் இவை ஆதல் சொல்ல வேண்டா.

சைவ ஆலயங்களில் புராண படனம், சைவ விஷயப் பிரசங்கம் நிகழ்த்தும் ஏற்பாடு முன்னையோர் தழுவிப் பலன் கண்ட, வளர்ந்தோர் கல்வி முறையாம். வெளியில் உள்ள சமயஸ்தாபனங்களில் சமய, இலக்கியப் பிரசங்கங்கள் நிகழ்வித்து வரும் முறை இருந்ததும் அதன் பொருட்டே. அப்படிப்பட்ட அனேகமான ஸ்தாபனங்களில், பதவிக்-கவர்ச்சி, பேச்சுக்கவர்ச்சி முதலிய ஏதுக்களைக் காட்டிப் பிரசங்கத்



தகுதி இல்லாதாரை வரத்திச் சொற்பொழிவு நிகழ்த்தி மகிழ்தல் இன்றைய பிரபலவழக்கமாய் இருக்கின்றது.

எனில் கோயில்களிலும், சூழலிலும் சிவமய விளக்கம் பொங்கிப் பெருகுதற்கு உரிய வாய்ப்புக்கள் பெருமளவில் மறுக்கப்பட்டும், மறக்-கப்பட்டும் வருதல் உண்டோ இல்லையோ? இவற்றின் நிலை மீள, நிலை நிறுத்தா இடத்துச் சைவ ஆலயங்கள் சமூகப் பொய் மயக்கங்களைப் போக்கும் தமது புனிதக் கடமையில் இருந்து தவறி விடுமோ அல்லவோ? இது எல்லாராலும் எப்போதும் எதிர்பார்க்கப்படும் சைவ ஆலய வாயிலான சமூக நலவிருத்திக்குக் குந்தகமாமோ அல்லவோ?

சைவ ஆலயங்கள் வேண்டுமெனில் அவற்றால் சமூக நலன் விருத்தியுற வேண்டு மெனில் அதற்காம் முன்னேற்ற முயற்சிகளுக்கு ஆர்வமூட்டவல்ல அடிப்படைத் தேவையான சைவசித்தாந்த ஞான விளக்கம் கோயிலில், ஐயர் முதல் அன்றாடத் தொழும்பர் வரை எல்லாரிடத்திலும் விளங்க வைக்கப்பட்டாக வேண்டும். அவசியம் உண்டோ இல்லையோ? இவை உங்கள் சிந்தனைக்கு.

## அநுபந்தம்

சைவரிற் சிலர் தம்மை இந்து என்று சொல்லிக் கொள்வதிற் பெருமைப் படுகின்றனர். ஏன் இப்படி? என்று சென்னையில் இருந்து அறிஞர் ஒருவர் கவலை தெரிவித்து எழுதுகிறார். இங்குஞ் சிலர் சைவம் இந்து சமயந்தான் என்கிறார்கள். இந்துப் பேரில் இருந்து கொண்டேதான் நான் சிவனை வழிபடுவேன், என அடம் பிடிக்கிறார் பிரமுகர் ஒருவர். ஒன்பதாம், பத்தாம் ஆண்டில் இருந்து சைவ மாணவர்கள், இந்து சமய உட்பிரிவுகள் ஆறில் சைவம் ஒன்று. இதைப் போல மற்றைய ஐந்து சமயங்களும் தனித்துவம் ஆனவை. அவை ஒவ்வொன்றிற்கும் முழு முதற் கடவுள் ஒவ்வொன்றுஉண்டு. என்று படிக்க வைக்கப்படுவதன் நோக்கம் அவர்களும் தம்மை இந்து என்று அழைக்க வைக்கும் தந்திரமாய் இருக்கிறது. சமீபத்தில் நடைபெற்ற விநாயகர் ஆலயக் கும்பாபிஷேகப் பத்திரிகை விளம்பரம் ஒன்றில் விநாயகர் காணபத்திய மதத்தின் முழுதற் கடவுள் என இந்துமத பரிபாலன பீடாதிபதி ஒருவரைக் கொண்டு எழுதுவித்துத் தலைப்புச் செய்தியாகப் பிரசுரித்திருக்கிறார்கள், மிகச் சமீபத்தில் கொழும்பில் வெளியான வெள்ளி விழா மலர் ஒன்றில்.

"ஸ்ரீபகவத் பாதாள் ஸ்தாபித்தருளியுள்ள வைஷ்ணம், சாக்தம், காணபத்தியம்" கௌமாரம், சௌரம் என்ற சண்மதங்களிலும் அவர்கள் அநுபவித்து விளக்கிப் போந்துள்ள அத்துவிதத்திலும் மூழ்கித் திளைத்த மூதறிஞர் தம் பாக்களும், நூல்களும் கணக்கில் அடங்காக் காலமாகப் பெற்றுத் திகழும் மொழி தமிழ்மொழி, கொழும்பில் அமைந்து மேற்கூறிய மதங்களுள் சைவத்தை முக்கியமாகக் கொண்டு ஆஸ்திகமும், ஆன்மிகமும் தழைக்க வைக்கப் பலவேறு நற்பணிகளை ஆற்றி வந்து வெள்ளி விழாக் கொண்டாடுகிறது திருநெறித் தமிழ்மன்றம்.

(இதன்படி சைவத்திருமுறைகளும், பகவத்பாதாளின் ஷண்மதத்திலும் அவரின் அத்வைதத்திலும் மூழ்கித் திளைத்தவர் பாடல்களாகவல்லவோ எண்ண வேண்டியாகிறது, என்னே கொடுமை) என குறித்த பரிபாலகரைக்கொண்டு எழுதுவிக்கப் பெற்ற வசனம் தலைப்புச் செய்தியாகப் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது.

இந்து சமயம் என்பது ஒரு கூட்டுச் சரக்கு. அதன் கூறு ஆறில் செம்பாதி இருந்ததற்கு ஆதாரம் ஏதும் இல்லை. அதற்கு ஆயுசும் அதிகமில்லை. ஆனால் பிந்தி வந்த கொம்பு முன்பிருந்த செவியை மறைப்பது போல, வேதகாலத்துக்கும் முற்பட்டதென ஜோன் மார்ஷல், ஜி. யூ போப் முதலிய மேல்நாட்டு அறிஞர்களாலும் தீர்மானிக்கப்பட்டுள்ள சனாதன சைவத்தை இது கெடுக்க நிற்கிறது என்பது எங்கள் பிரசுரம் இலக். 01 இல் ஏலவே விளக்கப்பட்டுள்ளது. இனி 1896 இல் அமெரிக்காவில் கூடிய சர்வமத மகாநாட்டில் இந்துமதம் என்ற பெயரில் இந்திய சமய ஞானத்தின் தனித்துவப் பெருமையை விளக்கி வீர கர்ச்சனை புரிந்து பெரு வெற்றியீட்டி 1897 இல் திரும்பிய சுவாமி விவேகானந்தர் யாழ்ப்பாணத்தில் அவ்வருடம் ஜனவரியில் வரவேற்று உபசரிப்பப்பட்ட போது தமது யாழ்ப்பாண விஜயத்தைப்பற்றி அவர் விடுத்த அறிக்கையில் "இந்து என்ற பெயர்க்குப் பதில் சைவன் எனக் கூற வேண்டும்" என்று கூறி இருந்தமை இன்றும் பத்திரிகைக் கட்டுரை ஒன்றில் பிரசுரமாகியிருக்கிறது.

இங்கு அத்வைதமும், வீரசைவமும் அனுட்டிக்கப்படுகின்றன. இந்து என்ற பெயருக்குப் பதில் சைவன் எனக்கூற வேண்டும். ஸ்ரீசைதன்ய வேர் வங்காளத்திலே பரவச் செய்த இறைவனின் திவ்விய நாம சங்கீர்த்தனமும், நடனமும் ஆதியிலே தென் நாட்டிலே தமிழர்களிடையே பிறந்தன ...... நன்றி ....... (உதயன். 07.09.98)



இங்கு சுவாமிகளை வரவேற்றுப் பேசிய பிரமுகர்கள் சுவாமிகளுக்கும் பிரீதியாய் இருக்கும் என்ற நோக்கில் இந்து என்ற சொல்லையே மீள மீளப் பிரயோகிக்கக் கண்டதன் விளைவாக அவரது திருவுளக் குறிப்பு இங்ஙனம் வெளிப்பட்டதாகத் தெரிகிறது. தனியான சைவத்துக்குரிய சர்வ மங்கலங்களும் பொருந்தும் இந்நாட்டுக்கு இந்து வழக்கும் பொருந்தாது என்பதையே சுவாமிகள் சுட்டி உணர்த்தி உள்ளார். சுவாமிகள் உத்தமமான ஒரு சிவபக்தன் சிவபெருமானைப் பற்றி உள்ளுருகப் பேசுபவர். சிவபெருமான் சூலமும் கையுமாகத் தமது மூரி வெள்ளேற்றில் ஏறி ( Lord Siva Mounting His Stout bull) திபெத்தைக் கடந்து கீழ்பாலும், மேல்பாலும் திரிந்து லோகபரிபாலனம் பண்ணுவதாக அவர் மற்றோர்சந்தர்ப்பத்தில் வெளியிட்டுள்ள கருத்து, உள்ள உள்ள, உடல் சிலிர்க்க வைக்கும். இத்தகு சிவபக்தனாகத் தோன்றுதற்கு உரிய முன்னீடு அவர் பிறப்பு வரலாற்றில் உண்டு. நல்ல சிவபக்தர்களாயிருந்த பெற்றோர்க்குக் காசி விஸ்வநாதரின் வரக் கொடையாக அவதரித்தவர் இவர் என்பது வரலாற்றுச் செய்தி - அறிவுக்கனலே அரும்புனலே. (ரா. கணபதி) பார்க்க.

சேர். பொன். இராமநாதன் சைவம் வழக்கை உறுதிப்படுத்தி, இந்து வழக்கை நிராகரித்திருந்த செய்தி பிரசுரம் 01 இல் காணப்பட்டது. சமீபத்தில் மறைந்த சைவப் பெரியார் சு. சிவபாதசுந்தரம் B.A அவர்கள் பேராதனைப் பல்கலைக் கழகத்துக்கு எழுதி இந்து எம்மொழிச் சொல்? என்ன அர்த்தத்தில் உள்ளது என ஆராய்வித்து அது அந்நியச் சொல் ஆதலையும் அர்த்தமற்ற அமங்கலமான அதன் பொருள் இயல்பையும் தெரிந்து கொண்டு 1956 களில் யாழ்ப்பாணத்தில் இருந்த இந்து வாலிபர் சங்கத்திற்கு விளக்கிச் சைவ வாலிபர் சங்கம் என அதற்குப் பெயர் மாற்றம் செய்து வைத்தமை கண்கண்ட காட்சி.

முற்குறித்த இந்து மதபரிபாலன பீடாதிபதி சைவம் பற்றி விளம்பியவற்றில் எந்த ஒரு அம்சமும் சனாதன சைவ ஆதார நூல்களான சிவாகமங்களிலோ. சைவ சித்தாந்த சாஸ்திரங்களிலோ சைவ மக்கள் மெச்சிப் போற்றும் கந்த புராணம், பெரிய புராணம், திருவாதவூரடிகள் புராணம் என்பவற்றிலோ,சைவத் திருமுறைகளிலோ இல்லவே இல்லை. இவற்றின் அடிப்படையில் வைத்தே ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் பெருமான் சைவபரிபாலனஞ் செய்துள்ளார். ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் பெருமான். இருந்தும், அவர் மறைந்து இரு தசாப்தங்கள் கழிய முன்னமே நம் நாட்டில் அங்கும் இங்குமாக அருகல் சொருகலாக இந்துக் கல்லூரி, இந்து சாதனம், இந்து போர்ட் என இப்பெயர் பரவத்

தொடங்கி இப்போ இந்து வாலிப சங்கம், இந்துப் பேரவை, இந்து தர்மம் எனப் பல ரூபங்களிலும் தலை தூக்கி வருதலைக் காணும் காட்சி துர்லபமானதாகும். இது சைவ மக்களாகிய நம்மவர்களின் ஆய்விலிப் போக்குக்கு அசையாத அத்தாட்சி ஆதல் கண்கூடு.

வடநாட்டில் ‘விஷ்வ ஹிந்து பரிஷத்’ என ஒரு பெரிய ஸ்தாபனம் இருப்பதால் அப்பெயரையே தாங்குதல் மூலம் நாமும் பயன் பெற்றுப் பரிமளிக்கலாம், என்ற நப்பாசையால் இந்துப் பேரவை முதலாயின இங்கு தோன்றியதாகச் சொல்லப்படுவதும் உண்டு. அதிலும் அர்த்தமில்லை. அதுவும் மேற்குறித்த இந்து மத பரிபாலன பீடங்களின் செல்வாக்கில் உள்ள ஸ்தாபனம். ஷண் மதம் பரப்பும் நோக்கில் அமைந்த அது, நமது சனாதன சைவத்துக்கு எவ்வகையிலும் உதவப்போவதில்லை. இருந்தும். காது போனாலும் கடுக்கன் பத்திரம் என்றவாறு, இந்து சமயம் பெயர் வழக்கால் சைவ நலனுக்கு எந்தப் பழுது நேர்ந்தாலும், எம் பதவி நலனுக்காக அதையே கடைப்பிடிப்போம் என்பாரும் நம் சமூகத்தில் இல்லாமல் இல்லை. மேற் குறித்த ஆய்விலித்தனம் விட்டு விடாமல் தொட்டுத் தொடர்வதையே இது உறுதிப்படுத்துகிறது. இத்தகைய ஆய்விலிப் போக்கினால், நம் கண்காண நம் சைவத்துக்கு நேர்ந்திருக்கும் அநீதமான இழப்புகளும் சிந்திக்கத்தக்கவை. இந்த இந்து சமய சகவாசத்தால் நம் கோயில்கள் யதார்த்தமான சைவக் கோயில்களாக நிலைக்க முடியாதிருக்கிறது. கோயில்கள் தோறும் எழுந்தமானத்துக்குச் சாக்த தியான மூர்த்திகள் கூடப் பிரதிட்டை செய்யப்படுகின்றன. சைவ ஆகமத்தில் இல்லாத ஒன்றைச் சைவக் கோயிலில் பிரதிட்டிப்பான் ஏன்? என்று கேட்டால் அது புராணத்திலே சொல்லி இருக்கிறது, என்கிறார்கள். வடமொழிப் புராணம் சிவாகமம் அல்ல என்று விளங்க முடியாத நிலை உயர்மட்டப் பூசகர் இடத்திலேயே இருக்கிறது.

இந்து சமயம் முன் வைக்கும் ஆறு முழு முதல் தெய்வங்களையும், சமத்துவ நோக்கிற் பூசிக்கும் வழக்கத்தால் இவர்களிடத்தில் சிவத்தின் தனித்துவ மகிமையும் சிவனிடத்தில் அனன்னியமான பக்தியும் விளங்காமல் போகின்றன. பலர் முலையிற் பால் குடித்து வளரும் பிள்ளைக்குப் பெற்ற தாயில் பிரத்தியேக மதிப்பும் களங்கமற்ற அன்பும் உண்டாதல் அசாத்தியம் தானே! சாதாரண சிறுசைவக் கோயில்களில் கூடப் பெரிய சிவாலயத்துக்குரிய சகலபரிவார மூர்த்திகளையும் பிரதிட்டை செய்து கோயில்கள் வெறும் அர்ச்சனைக்

ஆய்விலித்தனம் - ஆராய்வற்ற போக்கு



கோயில்களாகின்றன. சைவ வழிபாட்டு இலட்சணமான சிவஞானப் பேற்றை எதிர்பார்ப்பதற்குப் பதில் லௌகிக இன்ப வசதிகளையே எதிர் பார்க்க அப்பாவி மக்களைப் பயிற்றும் காமிய பூசைகள் கணக்கு வழக்கில்லாமல் பெருகுகின்றன.

இத்தகைய சோர்வுகள் உண்மையான சிவாகம நெறி பற்றி ஒழுகும் பாரம் பரியமான சிவாசாரியர்களால் ஏற்படுவதற்கு எவ்விதமான நியாயமும் இல்லை. இவை முழுவதும் வேற்றார் கைவண்ணங்கள் ஆதல் வெளிப்படை. அந்த வேற்றாரை இனங்கண்டு அவர்கள் ஆக்கிரமிப்பில் இருந்து சைவத்தைக் காக்க வேண்டுதல் இன்றைய அத்தியாவசியக் கடமை ஆகும்.

இறுதியாக ஒன்று சொல்ல வேண்டும். அவர் சொன்னார் என்று இவரும். இவர் சொன்னார் என்று மற்றவரும் இந்து சமயத்தில் ஆறு தனிச் சமயமும், ஆறு முழு முதற் கடவுளும் உண்டென்று சொல்கிறார்களே தவிர காணபத்தியம், கௌமாரம், சௌரம் எந்தெந்த நிலப் பிரதேசங்களில் உள்ளன? என்னென்ன இலட்சணங்களில் உள்ளன? அவற்றுக்கு ஆதார முதல்நூல்கள் யாவை? என்று கேட்டால் பதில் சொல்வார் கிடையாது. உண்மையில் இல்லாத ஒன்றை, உண்மை எனக் கட்டி அழுவது சைவர்க்கு அடுக்காத செயல்.

சிலவேளை அப்படி ஏதேனும் ஆதாரங்களைப் புதிதாகப் படைத்துப் பழையதாகப் பண்ணிக் காட்டுவார். இருப்பினும் அது ஏற்கத் தக்க தன்று. சிவாகமம், சைவ சித்தாந்த சாத்திரம், தமிழ்ச் சைவ புராணம், சைவத் திருமுறை என்ற இவைகளில் இடம் பெறாத எதுவும் சைவத்துக்குப் பிரமாணம் ஆக மாட்டா. சைவ மக்களால் ஏற்கப்படுவன ஆகா.

**வெகுதானிய கன்னிமதி 2ம் நாள்**

காமிய பூசை - இஷ்ட காமியம், மோட்சகாமியம் -
இங்கு விரும்பியதைப் பெறும் இஷ்டகாமியத்தை குறிக்கிறது.

## பிரசுரம் — ஐந்து

நித்தியநை மித்திகங்கள் இரண்டும் முன்னால்
நிகழ்ந்தகும்பா பிஷேகத்தின் ஆற்றல் நின்று
மெத்துவிற லுறமேலோர் வகைமை தேர்ந்து
விதித்தஉபா யங்கள்ஒன்றும் விளங்க லொட்டா
மத்தர்களால் நிலைமைவிப ரீத மாச்சு
மதிப்பான சைவமதிப் பிழைப்பாய்ப் போச்சு
சுத்தவெளிச் சோம்பர்கள்போ லிருக்க வோநாம்
தூயசைவ நிலைமீட்கத் துணிந்தோம் இன்றே

***செந்தமிழ்ச் சைவச் சிந்தனைச் செல்வர்களுக்கு.***

நமது சமயம் சைவசமயம் சைவசமயத்தவராகிய நமக்குச் சிவபெருமானே முழுமுதற் கடவுள். கடவுள் என்ற பெயரிலக்கணத்திற்குச் சரிமுறையான கடவுள் அவரேதான். அதாவது, சாமானிய நினைவு, சொல், செயல்களின் எட்டுமளவுக்கு அப்பாலாய் அவை எல்லாவற்றையுங் கடந்து நிற்பவர் அவர். பாதாளம் ஏழினுங் கீழ் சொற்கழிவு பாதமலர் போதார் புனைமுடியும் எல்லாப் பொருள்முடிவே. அதேவேளை, தம்மை நன்றாக உணரும் ஞானிகளின் உணர்வுக்கு ஒரு வகையில் எட்டுபவர் அவர். அதுவும் அவர்கள் நானும் எனதும் என்ற உணர்வு நிலைகளை முற்றாக இழந்து சகல விதத்திலும் தான் (சிவன்) ஆகவே நின்று உணரும் போது மட்டும் அவர்களுக்கு எட்டுபவர். தற்செயலாக அப்படி உணரும் நிலை சில போது நழுவுமானால் அவர்களுக்கும் டிமிக்கி தான்.

சைவபரம்பரையில், உரிய முறையில் நின்று சிவபொருமானை உணர்வினால் எட்டும் பாக்கியம் வாய்க்கப் பெற்றவர்களாக உள்ள சிலருள் அகிலப் பிரசித்தி பெற்றவர்களாக உள்ளோர் நமது சமயாசாரியர் நால்வர். அவர்கள் கோயில்களில் தம்மை (சிவனை ) அகக் கண்ணால் மட்டுமன்றிப் புறக்கண்ணால் கூடக் காணுந் தகைமை சிவபிரானால் அவர்களுக்குப் பிரத்தியேகமான கொடையாக வழங்-



கப்பட்டிருந்ததற்கும் அவர் வரலாறுகளிலும் அவர்களின் அருளிச் செயல்களான தேவார திருவாசகங்களிலும் நிரம்ப ஆதாரமுண்டு. இருந்தும், சில சில போது அவர்களே சிவனைக் காணத்தவறியதன் சார்பான கவலைக் குரல்கள் கூடத்திருமுறைகளில் இல்லாமல் இல்லை.

உன்னை எப்போதும் நினைய ஒட்டாய்நீ நினையப்புகில் -
பின்னை அப்போதே மறப்பித்துப் போர்த்தொன்று நாடுவித்தி
அப்பர் சுவாமிகள்

நாயி லாகிய குணத்தினுங் கடைப்படும்.
என்னை நன்னெறி காட்டித்
தாயி லாகிய திருவருள் தந்த
என்தலை வனைநனி காணேன்
தீயில் வீழ்கிலேன் திண்வரை உருள் கிலேன்
செய்வ தொன்றறி யேனே - மாணிக்கவாசகர்.

இனி அப்பரும் பிள்ளையுமாய் அணைந்து குலாவி உலாவி வந்த திருநாவுக்கரவு சுவாமிகளுக்கும் திருஞானசம்பந்த சுவாமிகளுக்கும் திருவாய்மூர் என்ற தலதில் நடந்த ஓர் அற்புதம் இதோ!

திருமறைக் காட்டில் உறங்காமல் உறங்கும் திருநாவுக்கரசருக்கு, வாய்மூருக்கு வா என்று அவரறிவில் உணர்த்திய சிவபெருமான் அவரைப் பின் வரவிட்டுத் தான் முன்னே விரைகிறார். அவரை எப்படியாவது எட்டிவிட முயன்ற அப்பர் நடைவேகம் தோல்வி கண்டுவிடுகிறது. திருமறைக் காட்டில் அப்பர் இருந்த மடத்திற்கு அடுத்த மடத்திலிருந்த திருஞானசம்பந்தர், அப்பர் தமக்குச் சொல்லாமற் கொள்ளாமல் புறப்பட்டுவிட்ட செய்தி அறிந்து அவரைப் பின்தொடர்கிறார். தொடர்ந்து வந்து திருவாய்மூரில் அப்பரை எட்டி விடுகிறார். அப்பருக்குக் குதூகலம் பொங்குகிறது. ஆஹா இதோ வந்துவிட்டார் ஆள். திருமறைக் காட்டில் எடுத்த திருப்பாட்டிலேயே திறந்தகதவு அடைக்கப் பாடிவிட்ட ஆள் வந்துவிட்டார். இனியும் இவருக்கும் உவர் தம்மை மறைப்பாரோ பார்க்கலாம் என்று பாட்டாகவே பாடிவிடுகிறார் அப்பர். அப்போது தன்னைக் காட்டிய சிவபெருமான், காட்டியது திருஞானசம்பந்தருக்கு மட்டும் தான். அவர் கண்டு காட்டவே அப்பர் கண்டதாகச் செய்தி. சிவபெருமானைக் காணும் விஷயத்தில் அப்பரான அப்பருக்கே வேதனையுஞ் சோதனையுமாகிறது.

மேல், சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குத் தாமாகவே தோழமை உரிமை வழங்கியிருந்தவர் சிவபெருமான். தம் இருப்பிடங்கள்

சிலவற்றுக்குச் சுந்தரர் போய்ச்சேர முன்னமே சிவபெருமான் எதிர் வந்து வரவேற்ற செய்திகளும் அவர் வரலாற்றில் உண்டு. அவற்றுக்குத் தேவார அத்தாட்சிகளுமுண்டு. இருந்தும், ஒரு தடவை அதுவும் கண்மறைந்த நிலையில், சுந்தரர் திருவெண்பாக்கம் என்ற தலத்திற்குச் சென்ற போது சிவபெருமான் அவருக்குத் தோற்றப்படவில்லை. ஒரு சுவாரசியமான கட்டம் இது.

"குழையுடைய வடிகாதா கோயிலுளாயோ" - சுந்தரர் கேள்வி.

"உள்ளோம் போகீர்" ( ஆம் நான் இங்கேதான். மினக்கெடாமல் போய் வாரும்) - சிவபெருமான் பதில்.

"குழையுடைய வடிகாதா கோயிலுள்ளா யோவென்ன உழையுடையான் உள்ளிருந்து உளோம் போகீர்" என்றானே. நண்பனான நண்பனுக்கு சிவன் அந்நேரம் கடவுள் ஆகத்தான் இருந்திருக்கிறார்.

உண்மை உணர்ந்த சைவஞானிகளால், உண்மைச் செய்திகளென உறுதிப்படுத்தப்பட்டவற்றில் சில இவை.. இவை எல்லாம் இங்கு ஏன்? எதற்காக?

தன்னால் ஆட்கொள்ளப்பட்டுத் தன்வாரிசுகளெனப் பிரசித்தமாக ஏற்றுக்கொள்ளப் பட்ட மெஞ்ஞானச் செல்வர்களுக்கே இப்படிப் பண்ணுஞ் சிவபொருமானை, அஞ்ஞானம் நீங்காத நம்மவரும் அறியாமலே அறிந்தது போலவும் காணாமலே கண்டது போலவும் நாளடைவிற் பாவித்துப் பயின்று பயிற்சி வசத்தால் காலகதியில் உண்மையாக அறிந்து உண்மையாகக் கண்டு ஞானப்பேறு பெறவைக்கும் அர்த்தமுள்ள, அனுபவசாத்தியமான உபாயமொன்று நம் சைவத்தில் இருக்கும் போது, அதன் அருமையென்ன பெருமையென்ன என உற்றுணர வைப்பதற்குத்தான். அத்துடன், அவ்வுபாய அநுசரணையில் நம் பயில்வுஞ் செறிவும் இருக்கும். நிலைக்கெதிர் யதார்த்தத்தில் அது இருந்தாக வேண்டிய உண்மைநிலையை மீளாய்வுக்குக் கொண்டு வருவதற்குந்தான். மேலும், தன்னைக் காணும் உத்தரவாதம் பெற்றவர்களுக்கே சமயா சமயங்களில் டிமிக்கி விட்டுவிடும் சிவபெருமானை இன்னமும் ஒருதகுதியும் பெறாதிருக்கும் நம்மவரும் பாவனை மூலம் நினைவார் போலவும் செயற்கை வடிவுகளாற் காண்பார் போலவும் நம் உள இயல்புகளுக்குப் பொருத்தமாக, அதே வேளை ஞானாசார மரபுக்கு விரோதமில்லாத வகையில், நினைந்தும் கண்டும் பயன்பெற உபாயம் வகுத்துள்ள சைவவிவேகத்தை எண்ணி மகிழவைப்பதற்குந்தான்.



தன்னியல்பில் சச்சிதானந்த மயமாயிருப்பவர் சிவபெருமான். அந்நிலையில் எங்கும் வியாபகமாயிருக்கும் அவரை ஏகபோகமாகக் கண்டுகளிக்கும் வாய்ப்பு மெஞ்ஞானிகளுக்கே உண்டு. அதிற் சுவைகண்ட மெஞ்ஞானிகள் அவரை எங்குங் காணுங் காதல் மேற்கொண்டு நாடு, நகரம், கோயில், குளம் எங்கும் ஓய்வொழிவின்றித் திரிந்து கொண்டிருப்பர். எங்கள் நால்வர் பெருமக்கள் சீவியபரியந்தம் திரிந்து திரிந்து தலயாத்திரையில் ஈடுபட்டிருந்தது இதற்கேதான். கோயில்களில் மட்டுமல்ல, கோயில் செல்லும் வழியிலுள்ள நாடு, நகரம், சோலை, குளம், கடற்கரை, மலைச்சாரல் எல்லாவற்றிலும் அவர்களுக்கு அதே காட்சிதான். கோயிலிற் பாடுவதுபோல வழிநடையிலும் சிவபெருமானைப் பாடியிருக்கிறார்கள் அவர்கள். சிவனோடு சிவனாக அவரது காட்சிக்கு இடமாயிருந்த சோலை, குளம் முதலியவற்றையுஞ் சேர்த்துப் பாடினார்கள். பூவில் தேன் நுகரும் வண்டின் காட்சி, அம்மானை விளையாடும், ஊஞ்சலாடும் மகளிர் காட்சி, பொற்சுண்ணம்இடிக்கும் மகளிர் காட்சி, சோலையில் மிழற்றுங்குயில், கொஞ்சுங் கிளிகளின் காட்சி, ஏன்? மார்கழி நீராடுங் கன்னியர் ஆரவாரம், கலகலப்பு, கிளுகிளுப்பு ஒன்றுமொழியாமல் சேர்த்துங்கூட எல்லாவற்றையுஞ் சிவனோடு சிவனாகவே கண்டு மாணிக்கவாசகர் பாடியருளிய திருவாசகம் இருக்கிறதுதானே! அதுவே இதற்கு உதாரணமாகக் கொள்ளப் போதுமே.

இவ்வகைக் கடவுட்காட்சியும் வழிபாடும் அவர்கள் அளவில்மட்டும் நின்றுவிடுவதற்கில்லை. சிவன் எவ்வுயிர்க்கும் அவ்வுயிராய் அனைத்துயிரின் கண்ணும் அவ்வுயிர் தன்னை அறியாவாறே உள்ளார் என்பது மட்டுமல்ல, ஒவ்வோருயிரும் தன்னை யாதேனுமொரு வகையில் நினைந்தாக வேண்டிய முன்நியமத்தையும் ஏற்படுத்தியுள்ளார் என்பதும் ஞானக்காட்சியே தான். எருமைகூடத் தன்வடிவிலாவது கடவுளை நினையாதிருக்க முடியாது எனச் சுவாமி விவேகானந்தர் ஒருகாற் கூறியுள்ளமை இதற்கு நிதர்சனமாம். இங்ஙனமாக, விஷேட அறிவுக்கும் விவேகத்துக்கும் உரியவனான மனிதன் விஷயத்தில் இது மகாமுக்கியத்துவம் பெறுகின்றது. மனிதனுக்கு இங்ஙனம் இயற்கையாக உள்ள இந்த நிலையை ஆதாயப்படுத்தி மற்றும் பிராணிகளிலும் பார்க்க விசேடமாக அவனது கடவுள் சிந்தனையை நெறிப்படுத்தி வளர்த்தெடுப்பதற்கென்றே அமைந்தவை சைவாலயங்கள்.

கடவுளை நினையக் கோயில் தேவையில்லை என்பாரும் இருக்கலாம். அவர்கள் ஏனைய பிராணிகள் நினையுமளவுக்குத் தமது கடவுள் நினைவுத் தேவையை மட்டுப்படுத்திக் கொள்பவராயிருக்கலாம்.

அதுபற்றிக் கவலையில்லை. மனிதனுக்கியல்பான கடவுள் நினைவை நெறிப்படுத்தச் சைவக்கோயில் என்னவகையில் உதவுவதாகும் என்பதே இங்கு விஷயம்.

நினைவென உள்ளது எதுவும் அதற்கு முன்நிலையான ஒரு பொருளைப் பற்றியல்லாது எழுவதில்லை என்பது பிரசித்தம். மேற்கண்டவாறு சமயாச்சாரியர்க்கு முன்னிலையாயிருந்த சச்சிதானந்த சொரூபம் நம்மவர்க்குப் பொருந்தாது. அதனால் அதற்கொரு மாற்றீடு அவசியமாகிறது. நல்லவேளையாக அவர்களுக்கு சச்சிதானந்த சொரூபமாகப் புலப்படுஞ் சிவனே சிலதருணங்களில் தானாக அங்காவவயவங்கள் கொண்ட சோதிரூபமாக அவர்களுக்குப் புலப்பட்ட காட்சிகளும் அவர்கள் வாக்கிலேயே வந்துள்ளன. “தோடுடைய செவியன் விடையேறியோர்...” “மருவார் கொன்றை மதிசூடி மாணிக்கத்தின்....” “நீறலைத்த திருவுருவும் நெற்றிக்கண்ணும்..........” இவை போல்வன நம் திருமுறைகளிற் பிரமாதம்.

இனி, தமிழில் திருமுறைகள் தோன்றுதற்கு வெகுகாலம் முன்பாகவே சமஸ்கிருதத்தில், சிவாகமங்கள் தோறும் சிவன்வாக்காக இவ்வகையில் வெளிவந்திருக்கும் தியானமந்திர சுலோகங்களும்அதி பிரமாதம். இவை குறிக்கும் வடிவங்களை நம்மவரின் கடவுள் நினைவுக்கு முன்னிலையாக நாட்ட எண்ணிய விவேகம் சைவ விவேகத்தின் முதல்நிலையாகும். இனி, இவற்றை அறிவிக்குந் திருமுறைப்பாடல்களும் சிவாகம சுலோகங்களும் நாம் வாழும் அசுத்த மாயா மண்டலத்துக்குரியனவாகா. இவையெல்லாம் சுத்த மாயா மண்டலஞ் சார்ந்த சிதாகாசத்திற்குரியவவை. திருமுறை ஓதுவோர் திருச்சிற்றம்பலம் சொல்லித் தொடங்கித் திருச்சிற்றம்பலம் சொல்லி முடித்தலும், சிவாகம சுலோகங்கள் ஓதுவோர் ஓம் சொல்லித் தொடங்கி ஓம் சொல்லி முடிப்பதும் இவ்வுண்மைக்கு நிதர்சனமாகும். சித்-ஞானம்.அம்பலம் - ஆகாசம். சித்தம்பலம் ஞானாகாசம். எங்கள் அசுத்த மாயா மண்டலஞ் சார்ந்த ஆகாசம் போல் தூலத்தோற்றம் ஆகாமல் சூக்கும (நுண்) ரூபமாயிருப்பது சிதாகாசம். ஆகல் பற்றி அது சிறுமை (நுண்மை) + ஆகாசம் = சிற்றாகாசம் எனவும் அதே பாங்கில் சிறும்மை + அம்பலம் = சிற்றம்பலம் எனவும் ஆம். எனவே. சித்தம்பலம், சிதம்பரம், சிதாகாசம், சிற்றம்பலம், தஹராகாசம் எனும் ஐந்தும் ஒன்றே. தமிழில் அம்பலம், சம்ஸ்கிருதத்தில் அம்பரம், தமிழில் சிறுமை, சமஸ்கிருதத்தில் தஹர.



திருமுறைகள்.சிவாகம மந்திரங்கள் சிதாகாச ஒலிகள் ஆதல் போல இவை குறிக்குஞ் சிவமூர்த்தங்களும் சிதாகாசத்துக் குரியவை. அதனால் இம் மூர்த்தங்களைத் தாபிக்கக் கருதும் இடமாகிய ஆலயம் கருத்தளவிற் சிதாகாசம் ஆதலே அமையும். ஆலயத்தை அமைக்கும் சிற்பிகளும் அதைப் புனிதமுறுத்தும் சிவாசாரியர்களும் சிதாகாசமாய் அமைதற்காம் திவ்விய பார்வையுடனும் தியானமந்திர பாவனையுடனுமே அமைக்கிறார்கள். அதனால்தான் சைவாலயம் கைலாசத்துக்குச் சமமாகப் போற்றப்படுகிறது. இனி, இங்கு ஸ்தாபிக்கப்படும் வடிவங்கள். சிவாகம தியான சுலோகங்களும் திருமுறைகளும் குறிக்கும் அமைவுகளுக்கேற்பக் சிற்பியின் தியானபாவனை வலுவால் அற்புதமாக உருவாகின்றன. கருங்கல்லிலோ, உலோகத்திலோ அவை உருவாகுமளவில் அவை மூர்த்தம் ஆகவே இருக்கும். உரிய சுத்திகளின் பின் கர்ப்பக்கிரஹத்திற் சேர்த்தி அஷ்டபந்தனஞ் செய்து மஹாகும்பாபிஷேக் கும்பத்தினின்று தெய்வீக அங்க அவயவங்கள் ஏற்றப்பட்டுப் பிறகு கும்பநீரால் அபிஷேகமுந் செய்யப்பட்டதன் மேல் பிராணப்பிரதிஷ்டையும் நிகழ்ந்த பின்னே அது முர்த்தி ஆகிறது. அம்மூர்த்தியே வழிபடற்காந் தகுதியுள்ள சுவாமி ஆம்.

இங்ஙனம் மூர்த்தத்தை மூர்த்தி ஆக்குஞ் சாதனமாய் அமைவது ஆலய கும்பாபிஷேகம். பலகாலும் பலரும் கண்டு களிக்கும் நிகழ்ச்சி ஆதலின் இதற்கு விபரவிளக்கம் வேறு வேண்டா. எனினும் அவசியமாக இதுபற்றிய ஒன்று கருதப்படவேண்டும். மூர்த்தத்தை மூர்த்தியாக்குவதில் மேற்கொள்ளப்படும் அதி உயர்பட்சமான ஆத்மிக சாதனையும் அதிகஷ்டதரமான பிரயாசையும் அதி உன்னத சிரத்தையுமே அதுவாகும். கும்பாபிஷேகத்துக்கு நேர்படுஞ் சிவாச்சாரியர் சாமானியமான தமது ஆசாரசுத்தி அனுட்டானக் கிரியைகளின் மேலும் பஞ்சசுத்திபண்ணிச் சுயசிவபூஜையாற்றியதாற் பொங்குஞ் சிவக்களையுடன் இருந்து பிராசாதயோக நெறிபற்றி நிகழும் அதிகஷ்டதரமான தியானபாவனைகளால் தம்மை ஒடுக்கி ஒடுக்கித்தாமாந் தன்மையை முற்றாக இழந்து முற்றிலுஞ் சிவனாகவே ஆகிவிடுகிறார். அதன்மேல் பிரத்தியேகமான ஏற்பாடுகளுடன் தயாரிக்கப்பட்ட மஹாகும்பாபிஷேக கும்பத்தில் தம்மையே உருக்கியெடுக்குந் தியானவலுவால் கருதப்பட்ட மூர்த்தியை வரத்தி அமர்த்துகிறார். அதன் தொடர்பில் வெகுவிஸ்தாரமான அளவில் ஆம் நவகுண்டயாகபூஜையில், விசேட ஹோமங்கள் நடைபெறுகின்றன. இச்சிவாசாரியர் தம்பால் விஞ்சியிருக்குஞ் சிவசக்தியை கறந்து

---

பிராணப் பிரதிஷ்டை - பிராணன் அல்லது உயிர்ப்புள்ளதாக்கல்

வரத்தி - அழைத்து

ஓமாக்கினியிற் பாய்ச்சுகிறார். அக்கையோடு பஞ்சபூதங்களிலும் வியாபித்திருக்குஞ் சிவசக்தி முழுவதையும்கூட வரத்தியெடுத்து அக்குண்டத்திற் பாய்ச்சுகிறார். அவர் பொறுப்பிலுள்ள பிரதான குண்டத்துக்குத் துணையாகச் சூழவுள்ள மற்றைய எட்டுக்குண்டங்களிலும் அவ்வகையில் விளைவிக்கப்படும் சிவசக்தி முழுவதையும் பகீரதப்பிரயத்தனத்தால் பிரதானகுண்டத்திற் சேர்த்துக்கொள்கின்றார். இவ்வகையால் வந்துகூடும் சிவசக்தி முழுவதையும் பிரதானகுண்டத்திலிருந்து நாடிசந்தானமூலம் மகாகும்பத்திற்கு ஏற்றுகின்றார். இவ்வளவுக்குமான கிரியாவிதங்கள் இராப்பகலாகத் தொடர்ந்து குறைந்தபட்சம் மூன்றுதினங்கள் இடம்பெறுகின்றன.

நாடிசந்தானம் பண்ணிக் குண்டத்திலுள்ள சிவசக்தி கும்பத்திற் சேர்க்கப்பட்டபின், மகாகும்பத்திலிருந்து கர்ப்பக்கிருகத்திலுள்ள மூர்த்தத்திற்கும் நாடிசந்தான மூலம் அது தொடர்புபடுத்தப்படுகின்றது. அதன்மேல் மகாகும்பம் வீதிவலமாக எழுந்தருளிவந்து அம் மூர்த்தத்திற்கு அபிஷேகமாகிறது.

'அப்பாலைக் கப்பாலைப் பாடுதுங்காண் அம்மானாய்' என்றார் மாணிக்கவாசகர். இதற்கு மேலும் ஓர் அப்பாலை கூட்டி 'அப்பாலைக் கப்பாலைக் கப்பாலானை ஆரூரிற்கண்டடியேன் அயர்த்தவாறே' என்றார் அப்பர்சுவாமிகள். இத்தகையது இங்கு வரவழைத்து இருத்தப்படும் தெய்வத்தின் அருமை. அதை வரத்தியிருத்திய சிவாசாரியரின் சிரத்தையின் அருமை அதனினும் பெரிது.

இப்போது நிலையென்ன. அரியதிலரியதொன்று பெரியதிற்பெரிய சிரத்தையால் நமக்காக நாம் காண்பார் போற்காண, நினைப்பார்போல் நினைக்க, நாமும் தொழுவார்போல் தொழ, அதன் கடாக்ஷம் பெற்றார்போல் நாம் மகிழ்ந்து பூரிக்க ஏற்ற ஒருவிதத்தில் நமக்குத் தரப்பட்டிருக்கிறது. இது முற்றுமுழுதாகச் சைவவிவேகம் நமக்களித்த பரிசு. இதற்குள் இன்னுந்தான் எத்தனை யெத்தனை விசேடங்கள். நாமோ உருவுடலின்றி வாழமுடியாத சென்மங்கள். கண்ணாற் பார்த்துச் செவியாற் கேட்டு மூக்கால் முகர்ந்து நாவாற் சுவைத்து, தோலாற் பரிசித்தன்றி வாழமுடியாத சீவன்கள். இங்கு மூர்த்தியாக்கப்பட்டிருக்கும் மூர்த்தமும் மந்திரநியாசத்தாற் சீவகளையூட்டப்பட்ட கண், காது, மூக்கு, வாய், தோல் என்பவற்றோடு கூடியதாகின்றது.

ஆனால் ஒருவித்தியாசம் மட்டும் நமது கண், செவி முதலானவை அசுத்தமாயைப் படைப்புக்களாய் அதற்கியல்பான அஞ்ஞானமயக்



கதியியக்கங்களோடு கூடியவை. அதனுடைய கண், செவி முதலாயின அதற்கெதிர் சுத்தமாயைசார்ந்த சிதாகாசப் படைப்புக்களாய் அதற்கியல்பான ஞானப்பிரகாசத்தோடு கூடியவை. (மந்திரங்கள் சிதாகாசப் படைப்பல்லவா?). அஞ்ஞான மயக்கத்திலிருத்தலால் நம்கண் அம்மூர்த்தியைச் சரியான கோணத்திற் காணுமோ சொல்லமுடியாது. ஆனால், அதன்கண் தன்ஞானப்பிரகாசத்தினால் நம்மைச்சரியான கோணத்திலேயே காணும். நம்செவி அஞ்ஞானமயக்க தோஷத்தோடுள்ளமையால் சரியானதைச் சரியாகக் கேட்குமோ சொல்லமுடியாது. ஆனால்,அதன்செவி தன்ஞானவிசேடத்தினால் சரியானதைச் சரியாகவே கேட்கும். இதனால் அதனோடு புழங்கும் விசயத்தில் மிகஎச்சரிக்கையாய் இருக்கவேண்டிய கட்டுப்பாடும் நமக்கிருக்கும். சுவாமி வழிபாட்டுக்குப் பக்தியோடு பயமும்வேண்டும் என்பது இதனாற்றான். அடிகேள் உமக்காட்செய அஞ்சுதுமே! எனச் சுந்தரமூர்த்திசுவாமிகளே பயந்து கெலித்ததுமுண்டு.

இதேபாங்கில் நமக்குள்ள மனம், புத்தி, சித்தங்கள் போல அதற்கும் மனம்,புத்தி, சித்தங்கள் மந்திரநியாசத்தால் உள்ளன. அவையும் நம்முடைய நிலையற்றமனம், தடுமாறும் புத்தி, கலங்குஞ்சித்தம் போலாது ஸ்திரமான மனம், நிலையான புத்தி கலங்காச்சித்தங்களாயே இருக்கும். இதேபாங்கில் இருதயம்,வயிறு முதலிய அங்கங்கள் கூடச் சர்வசுத்தப்பான்மையாக அதற்குள்ளனவே. இவையெல்லாம் ஏலவே மகாகும்பம் அமைக்கும்போது அதில் மந்திரநியாசமாக நியமிக்கப்பட்டு மேல், பூசை, உபசாரங்களில் உறுதிப்படுத்தப்பட்டுப் பின் அபிஷேகத்துக்குச் சற்றுமுன்னாக மூர்த்தத்தில் (கும்பத்திலிருந்து பிம்பத்துக்கு) ஏற்றப்பட்டவை.

இவை எல்லாவற்றையும் தொகுத்து இயைத்துப்பார்த்தால் கும்பாபிஷேகம் நமக்குப் பொறுப்பித்துள்ள பொறுப்பாவது:

"உங்கள் நலத்துக்காக உங்கள் அங்காவயவ ஞானேந்திரிய கன்மேந்திரியங்களுக்குச் சமாந்தரம் போலவுள்ள சுத்தஞானமயமான அங்க அவயவ அமைப்புக்கள் உள்ளதாய் ஒருமூர்த்தி உங்களுக்குத் தரப்பட்டுள்ளது. குறைந்தபட்சம் உங்களை நீங்கள் பேணுமளவிற்காவது அதனைப் பேணும் முறையாற் பேணி உங்கள் ஆன்மநலனை ஆக்கிக் கொள்ளுங்கள்" என்பதாம்.

இப்பொறுப்பை ஏற்றுநடத்தும் ஆலயக்கிரியைகள் நித்தியம், நைமித்தியம் என இருவகையின. இவற்றின் அடிப்படைப் பண்பாவது கும்பாபிஷேகத்தினால் ஆலயத்தில் வருவிக்கப்பட்டிருக்கும் சிவசாந்-

நித்தியம் என்றும் மங்காதிருக்க வைப்பதும், இயல்பிலே அவரிடத்தில் இருந்துவரும் சீவசிவசம்பந்தம் (பிரசுரம் - 2 இற் கண்டபடி) மேல்மேல் வலுவுற்றுவரச் செய்வதுமாய் இருக்கும். இவற்றைச் செய்வோர், செய்விப்போர் நோக்கும் "சைவாலய வளாகம் கைலாயம், சிதாகாசம், சுத்தமாயா மண்டலம்" என்ற அதன் இயல்புநிலை, நாம்வாழும் அசுத்தமாயா மண்டலத்திற்குரிய விகாரநிலைகளால் மலினமுறாமற் காப்பதும் ஆலயத்தில் உண்மையான சிவக்களை மென்மேல் ஜொலிக்க வைப்பதுமாயிருக்கும். உச்சாரணக் கிரமப்படியான மந்திர-ஒலி, வேதஒலிகளும் உள்ளூர ஓதப்பெறும் திருமுறைப் பிரார்த்தனை ஒலிகளும், சுத்தநாதமான தாளவாத்திப ஒலிகளும் இந்தநிலைமை நிலவுவதற்கு மிகவும் ஏற்புடையனவாய் இருக்கும். ஒளி விஷயத்திற்கூட நெய்த்தீபஒளியும், கற்பூரஒளியுமே இதற்கு உதவக்கூடியன என்பர். ஒலிவகைகள் மிடற்றொலியளவினவாயும், தாளவாத்திய இயல்பொலியளவினவாயும் இருத்தலே அமையும். கோயில் வளாகத்தின் சிதாகாசப்பண்புக்கு ஊறுவிளைவிக்கும் வகையில் இவ்வொலிகள் பெருக்கப்படுதலும் அதேவகையில் காந்தவிளக்கொளி, மின்குமிழ்விளக்கொளிகளால் இயல்பான கோயில் ஒளிப்படலைகள் விரிக்கப்படுதலும் அதாவது ஒலிபெருக்கி ஒளிவிரிப்பிகளின் உபயோகம் கோயில்வளாகத்திற்குப் பொருந்தாது என்ற அறிந்தோர் அபிப்பிராயம் என்றென்றும் இருந்துகொண்டே வருகிறது. "கொஞ்சம் ஆழமாகப் பார்த்தால் எத்தனையோ பேருடைய படிப்பை நித்திரையைக் குழப்புகின்ற ஒலிபெருக்கிக்கும் கடவுள் வணக்கத்துக்கும் எந்தச்சம்பந்தமும் இல்லை. யாரோ சிலருடைய தவறான நடவடிக்கைதான் காரணம். கோயில் திறந்து ஆரம்ப அலுவல்களைத் தொடங்கும் போதோ அதற்கும் முன்னரோ ஒலிபெருக்கியை இயக்கவிடுவது வழக்கமாய் விட்டது - உதயன் -10-88-. இஃதிருக்க.

அங்கிங்கெனாதபடி எங்கெங்கும் தானாயிருந்து அதிர்வுமிக்க இடியொலி, எரிமலை வெடிப்பொலிகளைக் கேட்டுக்கொண்டும் அகோரம் மிக்க காட்டுத்தீயொளி, எரிமலைச்சுவாலை ஒளிகளைக் கண்டுகொண்டும் இருந்துவருஞ் சிவனுக்கு இவ்வொலிபெருக்கியும், ஒளிவிரிப்பியும் ஏதோ பெரிதோ? ஏன்பாரும் இருக்கலாம், அதை ஆமோதிப்பாரும் இருக்கலாம். அவர்கள் இருபாலரும் அதுதவறென்பதன் பின்னணியைத் தெரிந்துகொள்ளுதல் விரும்பத்தகும்.

சிவனியல்புக்கு இவை பொருந்துமோ என்பதல்ல. சிதாகாச, இயல்புக்குப் பொருந்துமோ என்பதே இங்கு விஷயம். எங்குமுள்ள சிவன் தன்னிற்றானாயிருக்கும் சிவன். அவர் அதிர்வொலி, அகோர



வொளிகளைக் கண்டிருப்பதில் ஒரு புதுமையுமில்லை. ஆனால் இங்கு ஆலயங்களிலிருப்பது அதைக்காணமுடியாத நம்தேவைக்கென குறிக்கப்பட்ட சில நியமங்களின் பேரில் நம்மால் வரத்திக்கொள்ளப்பட்ட சிவம். இது நமக்குப் பலனாதற் பொருட்டு நாமே நம்தியான பாவனைகளால் சிதாகாசவளாகத்தை இங்கு அழைத்து அதில் சிவனை வரத்தியுள்ளோம். நம்நோக்குக்கமைய நாம் வரத்திய சிவனுக்குப் பொருந்த நாம் அமைத்துக்கொண்ட சிதாகாய த்து நிலை களங்கமுறாமல் நம் தேவைநோக்கிற் பார்த்துக்கொள்ள வேண்டிய நாம், எம் இலக்குக்கு மாறாக நடந்து கொள்வது தவறாதல் தர்க்கரீதியான முடிபாகும். சிதாகாசத்தின் நுண்மைக்கு இப்பூதாகாச ஒலிகளின் பருமை விரோதமாகும். நாம் வரத்தியிருக்கும் பொருளின் அருமையும் அதனை வரத்துதற்கு நாம்பட்ட சிரமத்தின் அருமையையும் இங்கு நாம் ஆரம்பத்திற் கண்டவாறு மீள்நினைவுபடுத்திக் கொள்ளல்மூலம் இத்தகைய ஆசங்கைகளை விரட்டியடிக்கும் தீரமுள்ளோர் ஆவோம்.

இப்பண்புகளைப் பேண அமையும் சிவபூசைவகை இரண்டில் நைமித்தியத்தை விட நித்தியம் முக்கியமென வற்புறுத்தவேண்டிய அவசியத்தை இன்றைய நடைமுறை தெரிவிக்கின்றது. நித்தியம் இரேசு. நைமித்தியந்தான் வீச்சு. நித்தியம் சும்மா சாமானியமாயிருந்தாற் போதும் நைமித்தியந்தான் வரன்முறையாக நடந்தாக வேண்டும் என இன்றுநிலவும் போக்குத்தவறானது. நித்தியத்திற்குஞ் சரி நைமித்தியத்திற்குஞ்சரி பூசை நோக்கிலான அடிப்படை ஒன்றே. கும்பாபிஷேகத்தில் இடம்பெற்ற சிவக்களை தளம்பாதிருக்க வைத்தற்கே இந்த இரண்டும். அதில் இடம்பெற்ற பஞ்சசுத்தி, ஆவாஹனம், அபிஷேகம், நைவேத்தியம், அர்ச்சனை, வேதமோதுதல், திருமுறையோதுதல், பிரதக்ஷணம், நமஸ்காரம் என்ற பிரதான பூசை நிகழ்வுகள் இரண்டுக்கும் ஒரு தன்மையனவே. இரண்டினும் பூசைக்குரிய மேற்குறித்தவை சார்ந்த தூய்மை, சிரத்தை, உள்ளுணர்வுருக்கம், அர்ப்பணபக்தி ஆதியன ஒரேதன்மையாக நிலவவேண்டியனவே. விரயமாக்குந் திரவியத்தொகை குண்டமண்டல விரிவு அலங்கார சாதனங்கள் அணிபணிகள் என்பன கும்பாபிஷேகத்தைவிட நைமித்தியத்திற் குறைவுபடலாம். நித்தியத்தில் அவையாக அடிமட்டத் தேவையளவில் குறைவுபடலாம். அதனால் ஆம் பழுதேதுமில்லை. ஆனால், மேற்குறித்த பஞ்சசுத்தி ஆவாகனம் ஆதியன உரியதரத்திற் சற்றுக் குறைவுபட்டாலும் கூடச் சுவாமி

---

இரேசு - இரேகு - அடையாளம்
வீச்சு - விரிவைக்காட்டும் எறிவு

அங்கு சுமுகமாய் இருப்பதற்குப்பதில் விமுகமாய்விடும். நித்தியத்தில் இந்த நிலை தொடர வைத்துக் கொண்டு நைமித்தியத்திற் பலன்காணலாம் என்பது ஏலவே முயலை நழுவவிட்டுவிட்டுப் பற்றையை அடித்தலுத்தல் போலாகும் என்பர். நித்தியத்திற் குறைதீரச் செய்வது நைமித்தியம் என்பது, நித்தியத்தில் அத்தியாவசியஞ் செய்ய வேண்டியதைச் செய்யாமல் விட்டுவிட்ட குறைதீர்க்கும் உபாயமாகாது. நித்தியத்தைத் தவறாமல் செய்கையில் தற்செயலாகவோ கைபிழைபாடாகவோ நேருந்தவறுகள் சாந்தியாவதற்கே உபாயமாம். எனவே நைமித்தியத்திற் பொறுப்பைச் சார்த்திவிட்டு நித்தியத்தை நித்திய தரித்திரநிலையில் விட்டுவிடலாகாது. முற்குறித்த பஞ்சசுத்தி முதல் பிரதக்ஷண நமஸ்காரம் வரையிலான முக்கிய பூசைநிகழ்வுகள் தினமும் சம்பூரணமாக நிறைவேறியே ஆகவேண்டும். பரார்த்த நித்திய பூஜாவிதி எனும் பெயரிலுள்ள பத்ததிகளில் இவை அனைத்தும் நித்திய நிகழ்வுகளாகவே வகுக்கப்பட்டுள்ளன.

இத்தகைய நித்தியபூஜை நியமங்களிற் பஞ்சசுத்தி என்பது பூஜிப்பவர் தன்னையும் தான் பூசிக்கும் இடத்தையும், பூசைத் திரவியங்களையும், மந்திரங்களையும், பூசிக்கும் இலிங்கத்தையும் அசுத்தமாயா புவனச் சார்பான குற்றங்கள் நீங்கப் பூசைக்குரிய தெய்வீகத்தன்மை பொலியச் செய்து கொள்வதாம். பூசிப்பவர் தமது அசுத்தமாயா சரீரத்தை தத்தமது ஞானாக்கினியினால் அழிந்ததாகப் பாவித்துப் பின் திருவருட் பொலிவால் உருவான தெய்வீக சரீரம் உள்ளவராகத் தம்மைக் காண்டல் தன்னைச்சுத்தி செய்தலாம். பூஜைத்திரவியங்களில் புறச்சுத்திக்கு அகப்படாமல் தப்பியிருக்கும் குணவிவகாரங்களான நுண் அழுக்குகளை மந்திர ஆற்றலால் போக்கித் தெய்வீகமாக்கல் திரவிய சுத்தியாம். ஏனைய மூன்றும் மந்திரசுத்தி, தானசுத்தி, இலிங்கசுத்தி என்பன. இவற்றில் மந்திரசுத்தி அழுக்குநீக்கித் தெய்வீகமாக்கும் பண்புக்கு வேறானது. மந்திரங்களை இலக்கணரீதியான ஒலியொழுங்கமைய உச்சரிக்கும் ஆற்றல் தமக்கு வாலாயமாயிருக்குமாற்றைப் பூசகர் பூசைவேளைகள் தோறும் உறுதிசெய்து கொள்ளுதல் மந்திரசுத்தியாகும். பூசைப்பலன் உயர்பலனாக வைப்பதில் இப்பஞ்சசுத்திகளுக்கு முதன்மை இருத்தல் தாயுமான சுவாமிகளாலும் போற்றப்பட்ட காரியம். "பஞ்சசுத்தி செய்து நின்னைப் பாவித்துப் பூசித்தால் - விஞ்சிய மெய்ஞ்ஞானம் விளங்கும் பராபரமே" என்பது பாடல்.

இப்பஞ்சசுத்தியைத் தொடர்ந்து நிகழ்வனவற்றில் முக்கியமானது ஆவாஹனம். ஆவாஹனம் என்றால் அழைத்தல். பூசிக்கப்படும்



சுவாமியை உடனுக்குடன் அழைத்துப் பூசிக்கப்படும் மூர்த்தியில் இருத்திப் பூசிப்பதுதான் பூசைமரபு. முதனாள் அழைத்து இருத்தப்பட்டதோ முன் கும்பாபிஷேகத்தன்று அழைத்து இருத்தப்பட்டதோ கணக்கில் எடுக்கப்படுவதில்லை. தனக்குரிய அதீத இயல்புகளுக்கேற்ப இருக்கும் அதே இடத்திலேயே இல்லாதவர் போலவும் இருந்துவிடக் கூடியவர் சுவாமி. ஆதலால் நேற்றழைத்தோமென்ற தனாலோ முன் கும்பாபிஷேகத்தில் அழைக்கப்பட்டவரென்றதனாலோ அவர் அங்கிருத்தலை உறுதிசெய்ய இயலாது. அக்காரணத்தால் பூசை புரியும் ஒவ்வொரு தருணமும் அவரை அழைத்திருத்தியல்லது பூசித்தல் பொருந்தாதாகும். மகா உத்தமபக்தரான சண்டீசநாயனார் கூடதழைத்ததோர் ஆத்தியின் கீழ் தாவரம் (இலிங்கம்) மணலாற் கூப்பிவிட்டுச் சிவனை அழைத்துத்தான் பூசித்ததாகப்பேசுகிறது தேவாரம். எனில் நமக்கு அது விதியாதலில் ஆசங்கைக்கிடமேது ? அவ்வப்போது சுவாமியை அழைப்பதற்கென்று பிராசாதயோக நெறியென ஓருபாயம் உள்ளது. பூசகரென்றிருப்பவர் எவரும் அதை அறியாதிருக்க முடியாது. இவ்வுபாயம் பற்றிச்சுவாமியை அழைக்கும் செயற்பாட்டில் இறுதிக்கட்டம் சுவாரஸ்சியமானது. அழைக்கும் முறையாக அழைத்துச் சுவாமி தமது புஸ்பாஞ்சலிக்குள் வந்துவிட்டதை உறுதிப்படுத்தவேண்டும்.

"சுவாமி நீ வந்து விட்டாயா? கேட்கிறார் பூசகர். ஆம் வந்துவிட்டேன் மகனே" சுவாமி பதிலளிக்கிறார். சுவாமிக்கு நல்வரவு. பூசகர் வரவேற்கிறார். இவ்வகையால் உறுதிபெற்றபின்னும் பூசகர் பிராத்திக்கிறார்.

"சர்வலோக நாயகரான சுவாமி, அடியேன் நிகழ்த்தும் பூசை முற்றாக முடியும் வரையும் இம்மூர்த்தத்திற் பிரீதிருபமாக விளங்கியிருக்க வேண்டும்." இப்படி முடிகிறது ஆவாஹனம்.

மேலும் வந்துவிட்ட சுவாமியை அங்கு அமர்ந்திருக்கச் செய்து கொள்ளும் ஸ்தாபனம் என்பதொன்று. அடுத்தது சந்நிதானம். சந்நிதானம் என்றால் ஸ்தாபிக்கப்பட்ட சுவாமி பராக்காயிருந்துவிடாமல் நடக்கவிருக்கும் கிரியைகளுக்கு முகஞ்செய்திருக்க வைத்தல். அவ்வளவுக்கும் மேல், பூசைமுகந்து சுவாமி ஓய்வுபெற வேண்டும். பிரார்த்தனை நிகழும்வரை சுவாமி அம்மூர்த்தி வளாகத்தில் தடையுண்டிருக்கக் கோரப்படுவார். அதற்குச் சந்நிரோதனம் என்று பெயர்.

---

பிரசாதயோக நெறி - கடவுள் அனுக்கிரகத்தை உபாயமாக உணரும் வழி

இவ்வளவும் நடந்தாகும் பட்சத்திலேயே பூசிக்கப்படும் மூர்த்தியிற் சுவாமி தங்கியிருக்கும் நிலை உறுதியாகின்றது. ஆலயமொன்றில் பூசைவழியாடு நிகழ்த்துதற்கு ஆரம்பநடவடிக்கையாக எவ்வளவு பொறுப்புணர்ச்சிவாய்ந்த எவ்வளவு சிரத்தையோடுகூடிய கைங்கரி-யங்கள் நிகழ்ந்தாக வேண்டும் என்பதை இவ்விபரம் தெளிவாகக் காட்டுகிறது. விருந்துபசாரம் நடத்துதற்கு விருந்தாளியின் பிரசன்னம் எவ்வளவுக்கு இன்றியமையாததோ அவ்வளவுக்கு இன்றியமையாதது இதுவாகும். இது நடந்திலதேல் மற்று என்னென்னதான் செய்யப்பட்ட போதிலும் பூசைநடந்ததில்லை என்றமுடிவே தேறும். இவற்றில் எத்தனை சதவிகிதத்துக்கு நடைமுறையிலுள்ள பரார்த்த நித்திய பூசைகள் இடமளிக்கின்றன என்பது கேள்வி.

வந்தார் பூசகர், திறந்தது கதவு, எடுத்தார் குடத்தை, முடிந்தது அபிஷேகம், கையோடு தீபாராதனை என்ற 'திடுதிப்' அவதியில் ஏதோநடந்துமுடியும் கண்ணறாவிக்காட்சி பலகோயில்களில் தரிசன-மாவதாக பலரும் பேசிக்கொள்ளும் நிலையுமுண்டு. சுவாமி ஸ்நானம் செய்வதில்லை. சுவாமி ஒன்றும் புசிப்பதில்லை இவையெல்லாம் சும்மா ஒரு பாவனைக்கு அல்லது மாதிரிக்கு என்ற எண்ணம் திணிந்து போயிருத்தலும் கண்கூடு. மேற்கண்டவாறு திவ்வியசரீரமும், உறுப்புக்-களும், உணர்வுகளுமுள்ள சுவாமியைத் தியானமந்திர பாவனை-களால் நாமாக நிறுத்திவிட்டு, குறைந்தபட்சம் நம்மைநாம் பேணும் அருமைபோலாவது அதைப்பேணும் பொறுப்பை ஏற்றுக்கொண்டு, மேல் ஏமாளிக்கருத்துகள் கற்பனைகளை சொல்லிச் சமாளித்துக்-கொள்ளும் விதத்தால் நமது தீர்மானத்துக்கு விரோதமாக நாமே நடந்துகொள்ள என்ன அவதிதான் நேர்ந்துள்ளதோ நமக்கு! 'பூசிக்க வாராய்' என்று நம்மால் அழைக்கப்படாத நிலையிலேயே சுவாமிக்கு அது இலக்கணம். அழைத்து அமர்த்தப்பட்ட நிலையில் அதற்கு அது இலக்கணம் எனல் அறியத்தகும்.

நம் ஆலயங்களிற் பூசிக்கப்படும் மூர்த்திகள் எல்லாம் அருந்தி வருந்தி வரத்தப்பட்ட சுவாமிகள். அவற்றுக்கு நாம் ஊட்டியேயாக-வேண்டும். யதார்த்தமான ஊட்டற்பண்பும் பரிவும் பொங்கத் தாராள-மாக ஊட்ட வேண்டும். 'சுவாஹா' அங்கமான மூலமந்திரமோதிக் கௌரியின் வலதுகையால் சிவனது வலதுகையில் அன்னம் சேரக்-கண்டு ஊட்டவேண்டும். 'இனிப்போதும் எடு' என்று சுவாமிஅருளக் கேட்பதான பிரக்ஞை ஏற்படும்வரையும் ஊட்டவேண்டும் என்று பூஜாபத்ததிகள் சொல்லும் விதியும் வேறுண்டே. இதில் லயம் நேர்வது கஷ்டமென்றால், கண்ணப்பர் காளத்தியாருக்கு ஊட்டிக் கண்ணெதிரே



உண்பித்ததாகப் பெரியபுராணஞ் சொல்வதன் பண்பையும் பரிவையும் ஒருகால் நினைவுக்கு வரத்திக் கொண்டு ஊட்டுதல் இலகுவாயு-மிருக்கும் வெகு இதமாயுமிருக்கும். வெறுமனே 'நிவேதயாமி' சொல்லுமளவில் திருப்தியுறும் நிலை நீடிக்கவிடல் ஆகாது.

சைவஆலயபூசை வழிபாட்டில் ஒவ்வோர் அம்சமும் உயர்வான ஆன்ம ஞானத்தின் ஒவ்வோர் அம்சப்பின்னணியில் இருத்தல் பிரசுரம் இல.04 இலும் குறிக்கப்பட்டது. நைவேத்தியம் சார்பிலும் அப்படி ஒன்று கருதிக்கொள்ளப்படும். ஒவ்வோர் உயிரிலும் அதன் அதன் வாழ்-முதலாக இருந்துகொண்டிருக்குஞ் சிவன் அவ்வவ்வுயிர் தன்னை அறியும்காலம் வரை அதையறியாமலே அதற்கு வினைப்போக அனுபவங்களை ஊட்டிக்கொண்டிருக்கிறார். அது செய்கையில், போகானுபவம் நிகழ்தற்கு இடமாயும் ஆதாரமாயும் இருக்கும் உடலின் போஷனைக்கு உரியவற்றையும் உரியஉபாயங்கள் மூலம் ஊட்டிக் கொண்டிருக்கிறார். மீள உயிர்தன்னை அறியவரும் சீவன் முத்தி நிலையில் அவர் முன்புதான் உயிரளவாய் ஒடுங்கியிருந்த தனது நிலையில் விரிவுற்று உடல் அளவாகவும் வியாபிக்கும்நிலை நேர்கிறது. இந்நிலையில், உயிரானது உடற்சார்பில் தான்பெறும் போக அனுபவம் எதனையும் முன்னைய பெத்தநிலையிற் போலத் தனக்கென ஏன்றுகொள்வதில்லை. அனைத்தையுஞ் சிவனே கொள்ளவிட்டு-விடுகிறபடியால் அந்நிலையில் அந்தச் சீவன்முத்தர்கள் உண்ணும் உணவு கூடச் சிவன் உண்பதாகவே முடியும்.

இங்கே சிவன் உண்டல் விஷயம் சிவன் நோக்கில் அல்ல ஆன்மா-வின் நோக்கிலேயாம். இப்படியான சிவன் உபகாரம், 'கண்டுகாட்டல்' என்ற வாய்பாட்டில் அடங்கும். இங்ஙனம் கண்டுகாட்டுதல் மூலம் உயிருக்கு 'உண்டுஊட்டும்' இக்கருணைக்குக் கைம்மாறு ஏது? மாணிக்கவாசக சுவாமிகள் இதனைப் பட்டவர்த்தனமாகச் சொல்லி-விடுகின்றார்.

"எந்தையே ஈசா உடலிடங் கொண்டாய் யான் இதற்கு இலன் ஓர் கைம்மாறே" - திருவாசகம், இதில் சிவனது உண்டுஊட்டல் விதித்துச் சொல்லப்படவில்லை. அதையுஞ் சேர்த்து விரிவாக விளக்கிச் சொல்லுகிறது திருவிசைப்பாவில் ஒரு செய்யுள்.

'அண்டமோ ரணுவாம் பெருமை கொண்டு அணுவோர் அண்டமாஞ் சிறுமைகொண்டு அடியேன் - உண்டஊண் உனக்காம் வகைஎன உள்ளத் துள்ளெழுந்தருள் பரஞ்சோதி' - என்பது செய்யுள்.

இன்னமுந்தான் தன்வியாபகத்தின் எல்லை ஒருவராலும் அறியப்படாத பென்னம்பெரிய சிவன், அவரெதிரில் அணுமாத்திரமே ஆம் உடலிலிருந்து அந்த உயிர் உண்ட ஊணையும் தனதாக ஏற்றுக்கொள்வதென்றால் அது எப்படி முடியும்? என்ற ஆசங்கை இருக்குந்தானே! அதுவுங் கையோடே இங்கு விளக்கப்பட்டாயிற்று எங்ஙனம்? அணுமாத்திரமான உடல் தனக்குப் பெரியதோர் அண்டம் ஆகும்படி சிவன் தன்னைச் சிறுப்பித்துக் கொள்வதால் அது முடிகின்றது என்ற விளக்கம் காண்க.

இங்ஙனம், ஆன்மவாழ்வில் இருதுருவங்களிலும் நமது உணவு விஷயம் இருவேறு நிலைகளில் சிவனை இன்றியமையாததாக இருக்கும் ஞானக்காட்சிப் பின்னணியில் அமைகிறது பூசையில் இடம்பெறும் நைவேத்தியம். ஆதலால், யதார்த்தமான ஊட்டற்பண்பும் பரிவும் பொங்க நைவேத்திய பூஜை நடந்தாக வேண்டும்.

இதற்கடுத்த முக்கியபூசை அம்சங்கள், தூபதீப ஆராதனை, அர்ச்சனை, வேதம் ஓதுதல், தமிழ் வேதம் ஓதல், ஆசீர்வாதம், பிரதக்ஷிணம், நமஸ்காரம் என அமையும், ஒவ்வொன்றினதும் சைவஞானப் பின்னணி வருந்தியும் அறிந்து கொள்ளப்படுதற்கான பெறுமதி வாய்ந்த விஷயங்களாம். சைவசித்தாந்த சாஸ்திரக்கல்வி கேள்வி அறிவுகள் நூற்கல்வியாகவோ அனுபவஸ்தர் வாய்மொழியாகவோ சைவ ஆலயங்களில் விளக்கமுறும் நிலை ஒன்றே இதற்கு உதவுவதாம். கும்பாபிஷேகத்தில் இடம்பெறும் பொருள் விரயமல்ல, குண்டமண்டல விரிவல்ல, கிரியை விவரங்களல்ல அதில் இடம்பெறும் செயற்கிரமம், சிரத்தை, உணர்வுருக்கம், செயல்திறன் முதலியசீர் ஒழுங்குகள் நித்தியபூசை, நைமித்தியபூசை இரண்டிலும் நிலவ வேண்டும். அதில் நிலவும் பயபக்திக்களை இவற்றிலும் நிலவ வேண்டும் என்பதே இக்கட்டுரையின் முக்கிய பொருள். அதன்சார்பில் இன்னுமொன்று அவசியமாகக் குறிப்பிட்டாக வேண்டும். கும்பாபிஷேகத்தில் மகாகும்பம் தாபித்துப் பூசித்து வீதிவலம்வந்து சுவாமிக்கு அபிஷேகமாகிறது. அதேபாங்கில்,நைமித்திய பூசையிலும் அபிஷேகம் நடக்கும் வழக்கம் இருக்கிறது. இருந்தும் நைமித்தியத்தில் கும்பம் தயாரிக்கும் போது கும்பாபிஷேகத்தில் தயாரிக்கும் முறை பின்பற்றப்படுவதும், அன்று கும்பம் எழுந்தருளியது போல தலை மேற்கொண்டு கும்பம் எழுந்தருளுவதும் இன்றைய காட்சிக்கு அரியனவாய்விட்டன. கும்பாபிஷேகக் கும்பமும் சிவகும்பம்தான் நைமித்திய அபிஷேகக் கும்பமும் சிவகும்பம்தான். அதாவது அவற்றின் அந்தஸ்து ஒன்றேதான். அந்தக்கும்பம் பிராணப் பிரதிஷ்டை செய்து தாபிக்கப்பட்டதென்றால்



இந்தக் கும்பமும் பிராணப் பிரதிஷ்டை செய்து தாபிக்கப்பட வேண்டும். அந்தக்கும்பம் சுவாமிக்குரிய கௌரவத்தோடு சிரசிலேற்றி வீதிவலம் வந்தது போல, இந்தக் கும்பமும் கௌரவபூர்வமாகச் சிரசிலேற்றி வீதிவலம் வரவேண்டும். இந்த நடைமுறைகள் அர்த்தமற்றசாட்டுக்களால் அவமதிக்கப்பட்டு வருகின்றன. இவைபோல்வன பிறவும் ஆலயநடைமுறையில் இல்லாமல் இல்லை. கும்பம் வைப்பதிலேயே அசாமானியமான சிரத்தையீனமும் இலகுநோக்கும் காணப்படுகிறது. கும்பம் வைக்கிறதென்றால் என்ன? குனிந்த குனியில் செய்யும் வேலைதானே. குழந்தைப்பிள்ளை வேலைதானே என்ற அபிப்பிராயம் இளைஞர் மனத்தில் புகுந்துவிடத்தக்க வகையிலும், வீதிவலம் வரும்போது கைகனத்தால் சுவாமிகும்பத்தை வயிற்றில் சாத்திக் கொள்ளலாம் பரவாயில்லை என்ற அபிப்பிராயம் தோன்றக்கூடிய வகையிலும் கருமங்கள் நடந்துகொண்டு போகின்றன. இவை போல்வன எல்லாம் ஆலயத்தில் சிவக்களை குன்றாமற்பண்ண நிகழும் பூசைநோக்கத்துக்கு முழுமாறானவை.

நாங்கள் ஆவாஹனஞ் செய்து மூர்த்தியில் இருத்துஞ் சிவத்தின் சுயஇயல்பு பற்றிக் கட்டுரை முகப்பில் நிரம்ப அறிந்துள்ளோம். எங்கே ஒரு அற்பசோர்வுதான் நேரினும் அதுவே சாட்டாக 'டிமிக்கி' கொடுத்துவிடும் இயல்பினது சிவம். இருக்கிற இடத்திலேயே சமவேளையில் இல்லாததாகவும் இருந்துவிடும் அதீத இயல்புள்ளது சிவம் எனவுங் கண்டோம். அதனை அழைத்து ஒரு மூர்த்தியிலிருத்தி அதன் இருப்பை உறுதிசெய்துகொள்ள ஆவாஹனம் வேறு, ஸ்தாபனம் வேறு, சந்நிதானம் வேறு, சந்நிரோதனம் வேறு என ஒன்றுபோல் நான்கு உபாயங்கள் கையாளப்படவேண்டியிருந்த உபத்திரவம் பற்றியும் அறிந்தோம். இவற்றின் மூலமாக எம் சக்திக்கியலுமளவு எல்லாவிதிமுறைகளும் குறைவறக் கையாண்டாலுங்கூட நாம் எண்ணியவாறு சிவத்தை நாம் கருதிய இடத்தில் தக்கவைத்துக் கொள்வது பரமசங்கடம் என்ற நிலை தெளிவாகிறது.

சிவன் 'பெருமைக்கும் நுண்மைக்கும் பேரருட்கும் பேற்றின் - அருமைக்கும் ஒப்பின்மையான்' (திருவருடபயன்) என்பதறிவோம். சிவத்தின் பெருமைபோல, நுண்மைபோல, பேரருள்போலப் பெறுதற்கருமையும் தனித்துவமானது.

நிலைமை இவ்வாறாக, குனிந்தகுனியில் (சில வேளை குழந்தைகளே) கும்பம் வைத்து முடித்துவிடுவதால், அது சிவகும்பமாம் என்றும் தலையிலேற்றில் தலைநோகும் என்றோ சங்கைக் குறைவென்றோ

உதரத்திலேற்றி வருதல் சிவகும்ப வீதிவலமாம் என்றும் கூசாமற் கூறுவார் எவரோ?

குனிந்தகுனியில் வைக்கும் தேங்காய், மாவிலை தர்ப்பைகள் அல்ல, வைப்பவர் சிவபாவனையோடு தானாந்தன்மை அற்றிருந்து புதிய தியான பாவனைகளால் கலசத்தைச் சிவமாக்கிப் பூசித்து நிரப்பும் நீரைப் புண்ணியதீர்த்த நீராக அபிமந்திரித்து (ஆபோவா........ என்றது மந்திரம்) கோயிற் சுவாமியின் பிராணனை அதன்கண் வரத்தும் பிராணப் பிரதிஷ்டையுஞ் செய்த நிலையே கும்பம் ஆவது. (பிறகு செய்யும் எந்தப் பூசையும் இதை ஈடுசெய்வதாகாது) குனிந்த குனியில் இவ்வளவும் கூடுதற்கிடமெங்கே?

சாதாரண பூஜைத்திரவியங்களே தோள்மட்டத்துக்குக் கீழ்பட எடுத்துச்செல்லப் படலாகாமை கோயில் ஆசார நியமமாய் இருக்கையில், சும்மா பறுவாயில்லை என்று, சுவாமி கும்பத்தை வயிற்றோடணையக் கொண்டு செல்வது எவ்வளவு அபசாரம்? இவ்வபசாரம் விளைவதற்கோ நாமெம் முயற்சிகளில் பெரும் பொருள் செலவிட்டுச் ஸ்நபனபூசை செய்விக்கிறோம்? என்னேமதியீனம்.

தட்டிக் கேட்டால் எங்கும் இப்படித்தான் என்கிறார்களாம். எங்குஞ் செய்வதென்றதற்காக ஒழுங்கீனம் ஒழுங்காகுமா? அகௌரவம் கௌரவம் ஆகுமா? அபசாரம் உபசாரம் ஆகுமா? அறியாமை அறிவாகுமா? பிழை சரியாகுமா? ஏன் இந்த விபரீதம்!

அறுதியிட்டுரைப்பதாயின், தானேயும் அற்பசாட்டிற் சறுக்கிவிடத் தயங்காத நோன்மைமிகும் நுண்பொருளாகிய சிவத்துவத்தை நாமாகவே உந்தித் தள்ளி ஓடவைக்கும் உதாசீனக் கிறுக்குகள் இவையென்றுதான் சொல்ல முடியும்.

சைவாலய மேன்மை பேணும் நோக்கில் இந்நிலை நீங்கியாக வேண்டுமா இல்லையா? சிந்தியுங்கள்.

*வெகுதானிய — ஐப்பசி 15.10.1998*



## பிரசுரம் — ஆறு

பரார்த்தபூ சைக்கென்று சைவா சார்யர்
பதம்பணிந்து பெற்றசிவா சார்ய தீக்ஷை
யதார்த்தத்தைக் காற்றினிலே பறக்க விட்டிங்
கேமாற்றுஞ் சங்கரஷண் மதப்பொய் வாய்மைச்
சுமார்த்தலட் சியந்தமதா வரித்துப் பேணிச்
சொல்லியிறு மாப்படையுங் கண்ணி றாவிச்
சுமார்த்தநோ விசுக்களினாற் சிவநெ றிக்காந்
துரிசுகளை வாரெவரோ அவரே சைவர்
(நோவிசு - Novice : கற்றுக்குட்டி)

**செந்தமிழ்ச் சைவச் சிந்தனைச் செல்வர்களுக்கு,**

சைவ சமயிகளாகிய எங்களுக்கு வாராவரத்தாய் வந்து கிடைத்த மூலதனம் சைவத்திருமுறைகள். நம்மவர்களுக்குச் சிவபெருமானால் சர்வமானியமாக விடப்பட்ட விளைநிலம் திருமுறைகள் என்பதும் பொருந்தும். வெறுமனே தோத்திர நூல்கள் சைவஞான அநுபவ நூல்கள் என்ற மட்டிலன்றிச் சைவர்களான நமக்கு வாழ்க்கை நூல்களுமாஞ் சிறப்பை உணர்ந்து அவற்றை நடைமுறை வாழ்வில் அநுசரித்தொழுக வேண்டும். சுவாமி வழிபாட்டு முறை மட்டிலன்றி அன்றாட நிகழ்வுகளும் அவற்றின் அநுசரணையுடன் நடைபெறுதலில் தான், சைவ வாழ்வுத் தூய்மையின் பெரும் பகுதியென்ன, முழுமையுமே தங்கியுள்ளது என்னும் சைவச் சான்றோர் அபிப்பிராயம், இன்று அகில சைவ உலக மட்டத்தில் உருவாகி வருவது, சைவ உயர் மேன்மைக்கு நல்ல ஒரு சுபநிமித்தமாகும். ஆதலால் இதுபற்றிச் சற்று விரிவாக நோக்குவோம் ஆக.

இலௌகிகமும் ஆத்மிகமும் நமக்கு இரு வேறு துருவங்களாகாமையால் வாழ்வின் ஒவ்வோரசைவிலும் "சிவ சிவ" உச்சரிக்கும் வழக்கம் நமது மூதாதையர் வழிப்பழக்கம் ஆம். தும்மும் போதும் சிவ

சிவ என்ற நாவோசையுடன் தும்மி முடிப்பதும், தலையில் நீரூற்றி முழுகும் போதும் இடையில் தவறினாலும் முதலிலும் முடிவிலும் சிவசிவ ஒலியுடன் தொடங்கிச் சிவ சிவ ஒலியுடன் நீரூற்றி முடிப்பதும் போன்ற சர்வ சாதாரண விஷயங்களிலும் கூட இது பிரபல்யமாய் இருந்து வந்து உள்ளது. தாமாகச் சொல்லிக் கொள்ளத் தகுதி பெறாத பாலன்களின் சார்பில் பெற்றோரோ மற்றும் மூத்தோரோ அவ்வாறு சொல்லத் தவறாதிருந்தமை விசேட கரிசனைக்குரியதாகும். தமிழர் தம் வாழ்க்கை வளாகத்தின் ஒருபகுதியிற் சமயத்துக்கும் ஒதுக்கிடங் கொடுத்திருந்தோரல்லர், சமயத்தோடிரண்டறக்கலந்த வாழ்க்கையை மேற்கொண்டிருந்தனர் என இந்நிலைமையைச் சுருக்கமாகக் கூறுதல் அமையும். அது நிற்க.

சிவனுக்கும் சீவனுக்குமிடையில் நீக்கமற்ற ஒருவித பிணைப்பை உட்கொண்டுள்ளது சைவம். அதன் சார்பில் உயிர்க்குயிராயிருக்குஞ் சிவன் சீவனது தேவையை அறிந்து நிறைவேற்றுபவராயிருக்கும் நியதிக்கேற்பச் சீவனும் தன் இயல்புக்கமையச் சிவனை நினையும் எழுதாமுறியான ஒரு நியமம் இருத்தல் சைவசாஸ்திர ஞானத்தினாலும் திருமுறை வாக்குகளினாலும் உறுதி செய்யப்பட்டிருப்பதுண்டு. சிவன் இலட்சணத்தை அறிந்து அவரைச் சிவனாக அறியும் பக்குவ முதிர்ச்சி ஏற்படுதற்கு முன்னைய முன்னைய நிலைகளிலும் தான் பிறந்திருந்த யோனிபேதங்களின் சூழ்நிலைக்குப் பொருந்தும் ஏதேதோ ஓரோவோர் விதத்தில் சீவன் சிவனைநினைந்திருந்தாக வேண்டிய நியமமிருந்தே வந்தது என்பது ஞானக்காட்சி. 'புற்றுள் இருந்து சப்தமிடும் சர்ப்பம் சிவனைத் தியானம் பண்ணுகிறது' என்ற முதியோர் கருத்தை இன்றி யாமறியும் உயிரியல் தரவுகள் கொண்டு நிராகரித்து விடமுடியாது.

"ஈசனவன் எவ்வுயிர்க்கும் இயல்பானான் சாழலோ" என்ற திருவாசகம் இதனை ஆதரித்துள்ளமை காணலாம். எவ்வுயிரும் பராபரன் சந்நிதியதாகும் - இலங்குமுயிர் உடலனைத்தும் ஈசன் கோயில் - என்ற மேற்கோள் இதனை மேலும் வலியுறுத்தும்.

இந்நிலையிலும், விசேடமான பூர்வபுண்ணிய வாசனையுடன் பிறந்த பிராணிகள் தம்யோனிச் சூழ்நிலைக்கேற்ப, நினைதல் அளவிலன்றி சிவனைப் பூசித்த செய்திகளும் தேவாரத் திருமுறைகளில், சைவாசாரியர் திருவாக்குகளாக வெளிவந்தனவும் உள.

'சிலந்தியும் ஆனைக்காவில் திருநிழற்பந்தர் செய்து ---- ' பிடியெலாம் பின் செலப் பெருங்கைம்மா மலர்தழீஇ விடியவே புனல் மூழ்கி விதியினால் வழிபடும் - என்பன போன்ற தேவாரப் பகுதிகள் பலவுள.

இந்நோக்கில் விசேட அறிவாற்றல் பெற்ற உத்தமப்பிறவி மனிதன் என்ற முறையில் மனிதன் சிவனை நினைதலிலும் விசேட தன்மை இருந்தாதல் இயல்பே. மனிதரிற் பாலர், விருத்தர், கற்றோர், கல்லாதோர் என்ற பேதமின்றி எல்லோரும் தான் சிவனை நினைக்கிறார்கள். அது அவரவர் கன்மச் சூழ்நிலைக்கேற்ப அமையும், அவரவர் மனத்தின் தகுதிக்கும் தரத்துக்குமேற்ப அமையும். அவரிற் பலர் சராசரி மன அபிலாஷைகளுக்கேற்பத் தத்தம் உடனடித் தேவைகளை முன்னிட்டு அவ்வத் தேவைக்குப் பொருத்தமெனத் தாம் அறிந்த வடிவுகளில் தான் அவர்கள் சிவனை நினைதல் தவிர்க்கமுடியாதாகும். (Something is better than nothing) - ஒன்றுமில்லாதிருப்பதை விட ஏதாவது கொண்டிருத்தல் நல்லது - என்றதற்கிணங்க அதுவும் அங்கீகரிக்கப்படுகிறது.

நடைமுறை வாழ்வில் அவ்வப்போது முக்கியமாகத் தோன்றும் அவசிய தேவைகளைத் தெண்டித்து நிறைவேற்றி விடுமளவில் முடிந்து விடுவதில்லை வாழ்க்கை நோக்கம். மனிதக் குறைபாடுகளாக உள்ளவை எல்லாந் தீர்தற்கு அவசியமான ஆணவ நீக்கம் முற்றாகப் பெற்றுப் பூரண மனிதனாகிச் சிவன் கருணைக்காளாகிச் சிவனை நோக்கியெழும் அன்பினில் முழுகிச் சிவானந்தம் பெற்று இன்புறும் நிலையிலேயே முடிவுற்றதாகக் கொள்ளத்தக்கது வாழ்க்கை நோக்கம். நமது முன்னோரின் வாழ்க்கைச் சுவடுகள் இதனை ஆமோதிக்கின்றன. ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் பெருமான் இதையே வற்புறுத்தினார். சைவசித்தாந்த சாஸ்திரங்கள் இதனை விதியாக வகுத்து விளக்கியுள்ளன. சைவத்திருமுறைகள் அனுபவப் பிழிவாகத் தெரிவித்துள்ளன. எனவே இந்த உயர்முடிபுக்கு ஏற்ற வகையிற் சிவனை நினையும் முறை ஒன்றின் அவசியம் தன்னில் தானாகவே உளதாகின்றது.

குறித்த இலக்கை அடைதற்கு உரிய முறையிற் சிவனை நினைத்தற்காம் அங்கங்களாக குருவருள், திருநீறு, ஐந்தெழுத்து, திருக்கோயில், சிவனுருவம், திருவடி, திருத்தொண்டு, அர்ச்சனை என எட்டு உண்மைகள் ஆன்றோரால் தழுவப்பட்டு வந்துள்ளன. நல்லவேளையாக இவ்வெட்டையுமே தமது உருவும் திருவுமாகக் கொண்டு மிளிருஞ் சைவத்திருமுறைகள் நமது உரிமைச் சொத்தாக வாய்த்திருக்கும் அரிய வாய்ப்பும் பெற்றுள்ளோம். மேலும் தொகையிற்

பதினெண்ணாயிரத்தை அடுக்குந் திருமுறைச் செய்யுள் முழுவதை-யும் ஓதி முடித்தவிலுள்ள சிரமம் நோக்கித் தமிழின் ஆதிப் புரவலராம் அகத்தியமாமுனிவர் தமது சீடராகிய சிவாலயதேவரின் ஞான சாதனைப் பொருட்டுத் தேவாரத்திருமுறை ஏழினுள்ளும் தெரிந்-தமைத்த 25 திருப்பதிகங்கள் மேற்குறித்த எட்டம்சங்களுமடங்கின-வாகக் கண்டு தொகுத்துக் கொடுத்துள்ள அகத்தியர் தேவாரத் திரட்டும் பிரத்தியேக வாய்ப்பாகப் பெற்றுள்ளோம் எனவே, பிறவிப்-பயன் கைகூடுதற்கு நம்பகமாக உதவும் உத்தரவாதமுள்ள இத்திரு-முறையை வாழ்க்கை நூலாகப் பயன் செய்து கொள்வது பற்றி விரிவாகச் சிந்தித்தலிற் பயன் மிகவுமுண்டாம்.

நமது தினசரி வாழ்க்கை துயில்விட்டெழுதலிலிருந்து மீளத்துயி-லமர்தலில் முடிகிறது. உலகியலில் நாம் துயில் கலைந்தெழுஞ் சூழ்நிலைக்குச் சமாந்தரமாக ஆத்மீகத்தில் ஆணவமயக்கமாகிய அறியாமை இருளில் இருந்து விழிக்கும் சூழ்நிலை ஒன்று இருக்கிறது. இங்கு உலகிருளில் உறங்கியிருந்தோம். வைகறை என்றொரு வேளை நேர்கிறது. விடிவெள்ளி என ஒன்று காலிக்கிறது. இருட்கட்டுக் கலைய ஆரம்பிக்கின்றது. சேவலொலி, சங்கொலியாகியன கிளம்புகின்றன. அடிவானத்தில் அருணோதயம் ஆகிறது. சற்று நேரத்திற் சூரியோத-மாய் விடுகிறது. வைகறைக்கு முன் எங்குந்திணிந்திருந்த இருளுக்-கெதிர் இனி, எங்கும் ஒரேபிரகாசம். இதற்குச் சரி சமாந்தரமாக ஆத்மீகத்தில் உயிர்கள் ஆணவ இருளில் அசையா உறக்கத்தில் இருக்கையில் மலபரிபாகம் என ஒன்று நேர்கிறது. ஞானகுரு தோன்றுகிறார், ஆணவ இருளின் கட்டுக்குலைகிறது. பரநாதம் எழுந்தொலிக்கிறது. அருள் தரிசனம் நிகழ்கிறது. மேல் மெய்ஞ்ஞான விளக்கமாகிய பரப்பிரகாசம் அதன் மேல் எங்கும் ஒரே சிவப் பிரகாசம் அதுவே ஞானப்பிரகாசம்.

இந்த ஆத்மீக நிலை விளக்கத்தைத் 'திருப்பள்ளி எழுச்சி' என்ற பெயரில் தருகிறது திருவாசகம். திருவனந்தல் என்ற பெயரில் கோயில் வைகறை வேளைப் பூசையில் இதைப்படிக்கிறார்கள். துயிலுணரும் போதில் இத்திருப்பள்ளி எழுச்சிப் பாடல்களைப் படிப்பதனால் நாளாந்த வாழ்க்கை திருமுறையோதுதலோடு ஆரம்பிக்குஞ் சிறப்புவாய்க்கும். மேற்குறித்த சமாந்தர பாவத்தைக் கருத்திற் கொண்டு ஓதும் வகையால் அது சார்ந்த ஆத்மஞான விளக்கமும் மெல்ல மெல்ல வந்தேறும். திருமுறையை வாழ்க்கையோடிணையக் கொள்ளு மாற்றுக்கு இது ஒரு எடுத்துக்காட்டு. யதார்த்தத்தில் அதை அடுத்து



உடன் நிகழ்தற்பாலது நீரில் தோய்தல். இவ்வுலக நிகழ்ச்சிக்குச் சமாந்தரமாக ஆத்மீகத்தில் உள்ளது ஆன்மா சிவன் அருளில் தோய்தல். அதைநினைவிக்கும் திருமுறைப்பாக்கள் 'அத்தா உன் அடியேனை அன்பாலார்த்தாய் அருள் நோக்கில் தீர்த்த நீராட்டிக் கொண்டாய். ஆர்த்த பிறவித்துயர் கெடநாம் ஆர்த்தாடுந் தீர்த்தன்' ஆகியன. திருவாசகத்தில் திருவெம்பாவைப் பதிகம் முழுவதுமே அதற்குதவும். சிவனைப் பாடிப்பாடிச் சிவனருளைப் புகழ்ந்து புகழ்ந்து நீராடுக என்பதே திருவெம்பாவை வழங்கும் புதிராகும். திருவெம்-பாவைக் காலம் இதை விசேடமாக நினைவுறுத்துதல் சைவமக்கள் நடைமுறை வாழ்வில் இது இடம்பெற்றாக வைக்குங் குறிப்பினாலேயாம்.

சேர். இராமநாதன் அமெரிக்காவுக்குப் பயணம் பண்ணிய கப்பலில் அவரைச் சந்தித்து உரையாடிய அமெரிக்கர் ஒருவர், ஐயா உங்கள் மக்கள் நீரில் முழுகுதலையும் சமய வழிபாடாகக் கொள்கிறார்-களாமே! என வியப்புடன் கேட்டாராம். இது சும்மா அர்த்தமற்ற ஒரு மூடப்பழக்கம் என்ற குறிப்பில் அவர் கேட்கிறார் என்பதை மட்டிட்டுக் கொண்ட இராமநாதன். அதிலென்ன வியப்பு? தமது ஆத்மா சிவனரு-ளில் மூழ்குதல் என்ற அர்த்தத்திலேயே அவர்கள் நீராடுகிறார்கள், சாமானியமாக நீங்கள் கருதுவது போல வெறும் உடல் பேணும் அர்த்தத்திலல்ல. உடல் நலங்கருதி நீராடுதலில் விசேடமாக எதுவுமில்லை என்று சொல்லிப் பறக்கடித்து விட்டாராம். அவருடன் சென்ற ஹரிசன் அம்மையார் எழுதிய நூலில் உள்ளது இது. கோயிற் குளங்கேணிகள் கடற்கரைகளில் மட்டுமல்ல, விசேஷ புண்ணிய காலங்களில் மட்டுமல்ல, எப்போது எங்கே நீராடினாலும் சைவர்களுக்-குரிய நீராடற் பண்பு இதுவேயாகும்.

'கங்கையாடிலென் காவிரியாடிலென்.... எங்கும் ஈசனெனாதவர்க்-கில்லையே' என்ற அப்பர் சுவாமிகள் தேவாரம் துடியாக உணர்த்து-வது இதனையே. இது சம்பந்தப்பட்ட திருமுறைப்பாடல்கள் வேறு அறியாதோர் இதனையே பாடிப்பாடி நீராடினாலும் போதும்.

சைவரின் அன்றாட வாழ்வில் நீராடலை அடுத்து உடன் நிகழ்வது விபூதி தரித்தல். அவ்வநுசர்ணையின் போது பாடுவதற்கென மந்திரமாவது நீறு என்று தொடங்கும் பதினொரு பாடல்கள் கொண்ட தனித் தேவாரப் பதிகமே உண்டு. அதை விடவும், மெய்ப்பால் வெண்ணீறணிந்த மேனியானை..... விடிவதுமே வெண்ணீற்றை நிறையப் பூசி.. போன்ற திருத்தாண்டகங்கள், ஒண்மையனே திருநீற்றை... பாற்றிருநீற்றெம்பரமனை ..... போன்ற திருவாசகங்கள், பவளமால் வரை

மேற் பனிபடர்ந்தனைய..... போன்ற திருவிசைப்பாக்கள், கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை போன்ற திருமந்திரங்கள் தொகை வகையான உள்ளன.

சிவதீக்ஷை பெற்று அநுட்டானம் பண்ணுதல் சைவத்தில் அவசியமான ஒரு நித்திய கருமமாயுள்ளது. அதில் மந்திர சகிதம் விபூதி குழைத்தணிதல் முக்கியமான அம்சம். இது பற்றிச் சற்று விரிவாக அறிதல் நலமாகும்.

சைவ அநுட்டானம் மிகச் சுருங்கிய அளவிலான ஒரு சைவ நாற்பாத அநுசரணை. அதில் சரியை, கிரியை, யோகம், ஞானம் நான்கின் அம்சங்களுமுண்டு. அவ்விபரம் தனியாக விபரிக்கப்பட வேண்டியது. இங்கு, இந்நான்குக்கும் இன்றி அமையாத ஒரு பண்பே சைவ அநுட்டானத்தில் வைத்து அறியப்படும். சமயக்கிரியைக்கு மட்டுமென்றில்லை, எக்கிரியைக்கும் அதாவது எல்லாச் செயற்பாட்டுக்கும் செய்பவர் தன்னைச் சிவனாகப் பாவித்திருந்து செய்தாக வேண்டியது சைவர் தனித்துவக்கடனாகும். சைவ அநுட்டானத்தின் போது ஒருவர் பிராணாயாமத் தியானம் என்ற யோக சாதனையும் பஞ்சாக்ஷரசெபம் என்ற ஞான சாதனையும் செய்யவுள்ளார். இரண்டும் அவ்வவ்வினத்தின் அடிப்படை அம்சங்கள் ஆயினும் அவையும் சிவ பாவனை இல்லாவிடத்துப் பயன்பெறமாட்டா. சைவாநுட்டானத்தில் நிகழும் சிவஹஸ்தம், சகளீகரணம், முக்குறி தரித்தல் என்பன சிவபாவனைக்கான அநுட்டானங்கள். அதாவது அநுட்டானம் பண்ணும் அவர் தான் சிவனாக இருக்கும் பிரக்ஞையை (உணர்வை) ஏற்படுத்துஞ் செயல்கள். இதற்கிணங்க, அவர் மந்திர சகிதம் முக்குறியணியுந் தருணத்தில் ஒரு கணம் அமைதியோடிருந்து மேற்குறித்த திருமுறைப் பாடல்களில் இரண்டொன்றையாவது மனங்குளிர ஓதுவதன் மூலம் தமது சிவபாவனையில் மனம் மேன்மேல் அழுந்திலயிக்கப் பெறுவர். அதன் மூலம் தான் உள்ளும் புறமும் சிவனாகவே இருக்கும் உறுதி பெறுவர். சைவ அநுட்டானத்தில் திருமுறை அநுசரணையாகும் விதம் இதுவாகும்.

இனி, ஒரு பொது நிலையில் சைவாநுட்டானமும் சிறப்புநிலையில் ஆன்மார்த்த சிவபூசையும் சைவர்க்குத் தனிச் சிறப்பாக உள்ளனவாம். சிவபூசை செய்பவரே சைவருள் மேன்மையுள்ளவர் என்ற கணியம் இருக்கவே இருக்கிறது. அவரைச் (ஏன் தமிழரின் உயர்சாதியும் சிவ பூசை செய்யும் சாதிதானே.) சைவம் என்று பிரத்தியேகமாகக் கௌரவித்து அழைக்கும் வழக்கமும் உள்ளதே. சிவபூசைக்கு



விதிமுறை விளக்கங்கள் சிவாகமங்களின் உள்ளன. நடைமுறை அனுபவத்தில் வைத்துச் சிவபூசை மேன்மையையும் அதன் உயர் பலனையும் விளக்கும் வரலாறுகள் பிரசித்தமானவை. சிவனோடு சம்பந்தமாவதே சைவம் என்ற சைவ இலக்கணத்தை நடைமுறை அனுசரணையிற் கொண்டு பயிலும் பயிற்சிக்குரிய ஒரே ஒரு சாதனம் சிவபூசை. மனம், வாக்குக் காயம் என்ற மூன்றையும் ஒருவழிப்படுத்தித் தியானிக்கும் உண்மைத் தியானம் சிவபூசையில் மட்டுமே சிறப்புறுவதாகும். உயர் பயனளிக்கும் சிவத்தியானத்துக்குத் தளங்களென முன்கூறிய எட்டில் அர்ச்சனை என்றது சிவபூசையையே.

மனம் வாக்குக் காயத் தூய்மையுடன் குறைந்தபட்சம் பூவும் நீருங் கொண்டு சிவனை ஒரு இலிங்கத்தில் அல்லது அதற்கிணையான மற்றொன்றில் வரவழைத்து அமர்ந்திருக்கும்படி வேண்டிச் செய்யும் பூசை சிவபூசை. இதற்கு ஆகக் குறைந்தபட்சத் தேவை பூவும் நீரும். இவை யார்க்கும் இலகுவிற் கிடைக்கக் கூடியவை. இவற்றுடன் தீபம் தூபம் கந்தம் அடுத்தபடி அவசியமானவை. அடுத்தபடி நைவேத்தியம். அடுத்தபடி, பூசிக்கும் இலிங்கத்துக்குச் சாத்தும்பட்டுப் பணிகள் இடம் பொருள் ஏவல்கள் இருக்குமளவுக்கு இவை அமையலாம். ஆனால் அன்புருகிச் சிவனை வருந்தி அழைத்து அமர்த்திப் பூவும் நீரும் தூவிப் போற்றுதல் இதன் அத்தியாவசிய அம்சமாகும். இதன் அவசியத்தை வற்புறுத்தும் திருஞானசம்பந்த சுவாமிகள் - பூத்தேர்ந் தாயன கொண்டுநின் பொன்னடி ஏத்தா தாரில்லை எண்ணுங் கால் - எனப்பாடியிருத்தல் காணலாம். இதில் ஏத்தாதார் இல்லை என்றது, சகல உலகங்களிலும் சகல பிரிவினரிடையிலும் சிவபூசை வழக்கம் இருந்து வருதலைக் குறித்தபடியாம். தேவர், மனிதர்,நாகர், அசுரர், தானவர், வானவர், முனிவர் என்ற சகல பிரிவினரிடையிலும் சிவபூசை வழக்கம் இருந்துள்ளமைக்கு வரலாற்று ஆதாரங்கள் மிகப் பல. இராவணனுஞ் சிவபூசை செய்தவன், சூரனும் சிவபூசை செய்தவன் என, இராமாயணமும் கந்த புராணமுந் தெரிவித்திருக்கையில் இதற்கு வேறு விபரமேன் என்பர்.

சிவபூசை நினைவை உறுதிப்படுத்துதலிலும் சிவபூசை நிகழ்வுகளில் ஆங்காங்கு தழுவப்பட்டுச் சிவபூசைச் செழிப்பை, அதாவது அதன்கண் உணர்வுருக்கச் செழிப்பை மிகுவிப்பதிலும் திருமுறைகளின் பங்கு மகா முக்கியமானது. சிவபூசையில் சுவாமியை அழைத்தல், அபிஷேகஞ் செய்தல், அன்னம் நிவேதித்தல், மலரிட்டு அர்ச்சித்தல், தோத்திரஞ் செய்தல் என்ற அம்சங்களிலெல்லாம் திருமுறைப்பிரயோகத்திற்கு ஏகப்பட்ட இடமுண்டு.

“தழைத்ததோ ராத்தியின் கீழ் தாவரம் மணலாற் கூப்பி அழைத்து” என்று கூறும் சம்பந்தர் தேவாரம், ஊறி நின்றென்னுள் எழுபரஞ்சோதீ உள்ளவா காண வந்தருளாய் எனக் கூறும் திருவாசகம், ஆவிக் கமலத்து அப்புறத்திப்பால் மேவித்திரியும் விரிசடைநந்தியைக் - கூவிக் கொணர்ந்து குறியிடைத் தாபிக்கும் எனும் திருமந்திரம் முதலியவை ஆவாஹனம் (அழைத்தல்) என்ற கிரியாம்சத்தின் போது நினைக்கவும் ஓதவுந் தக்கவை. சிவாகம மந்திரக் கிரியை தழுவும் சிவபூசையிலும் ஆவாஹனத்தின் போது அவற்றுடன் இதற்கும் இடமளித்தலால் விசேட மனவெழுச்சியும் மன உருக்கமும் ஏற்படுதல் தான் தானே செய்து கண்டு பெறத்தகும் அநுபவமாம். அபிஷேத்தின் போது முன் ஸ்நானத்துக்குக் குறிக்கப்பட்ட திருமுறைப் பாடல்கள் நினைக்கவும் ஓதவுந்தகும். நைவேத்தியத்தின் போது, நைவேத்தியஞ் செய்வதன் நோக்கத்தைச் சுட்டிப்பாக விளக்கும், அடியேன் உண்ட ஊண் உனக்காம் வகை என் உள்ளத்துள் எழு பரஞ்சோதி! என வரும் திருவிசைப்பா நினைக்கவும் ஓதவுந் தகும். மலரிட்டு அர்ச்சிக்கையில், திருவாசகத்திற் போற்றித்திருவகல், திருவண்டப் பகுதி, திருச்சதகத்திற் போற்றிப் பதிகம் என்பனவும் திருத்தாண்டகத்திற் போற்றி. காண், கண்டாய் நீயே என்ற ஈறுகள் கொண்ட மந்திரங்களுள்ள பதிகங்களும் சிறப்பாகவும் ஏனைய திருமுறைப்பதிகங்கள் பொதுவாகவும் அர்ச்சிப்பர் உள்ளத்தில் மெய்ஞ்ஞான வாசனை கமழ மிகவும் உதவுவனவாம். இனி, தோத்திரம் என்ற சிவபூசை அம்சத்தில் திருமுறைகளின் பங்கும் பயனும் சொல்லாமே அமையும்.

திருமுறை என்ற தொடர்பில், சைவாலயபூசைசார்பிலான ஒரு விஷயம் இங்கு கவனிக்கப்பட வேண்டியாகிறது. வேதத்தோடு சைவத் திருமுறைகளுக்குளதான தெய்விக அர்த்த சமத்துவ நோக்கில், பூசையின்போது வேதம் ஒய்ந்த கையோடு திருமுறை ஓதவேண்டும் என்ற ஆன்றோரபிப்பிராயம் வலுவுள்ளதாகும். பலவாண்டுகளாக இது பற்றிய பிரசாரம் இருந்தும் சில கோயில்கள் மட்டும் இதனை அங்கீகரித்துள்ளன. அவற்றுளுஞ் சிலவற்றில் இரண்டுக்குமிடையே லிங்காஷ்டகம் முதலிய வேற்றார் கிருதிகள் சிலவற்றைப் புகுத்தும் வல்லமை இடம்பெறுவதாகச் சொல்லப்படுகிறது. சிவன் பெயரில் உள்ள எதனையும் பூசையிற் சொல்லலாம். ஆனால் திருமுறை அல்லாத தோத்திரங்கள் திருமுறைக்கும் வேதத்துக்குமிடையிலான நேரடி உறவுக்கு குறுக்கிடுதல் கூடாது. திருமுறை வாசகங்களிற் கசியும் பக்திக் கனிவும் ஞான வாசனையும் அவ்வேற்றார் கிருதிகளுக்கில்லை



என்பது விசேடமாகக் கவனிக்கத்தகும். சம்பந்தப்பட்டவர்கள் புரிந்துணர்வால் நோக்கி இக்கோணலை நிமிர்த்திக் கொள்வார்களாக.

இனி, நடைமுறை ஆலய வழிபாட்டில், விசேஷமாக வழிபடுவோர் மட்டில் இத்திருமுறை அநுசரணை பற்றிச் சிந்தித்தல் தகும். உசிதமான உயர்ந்த முறையில் அதாவது ஆத்மிகப் பேற்றிலட்சியங் கைகூடுதற்கேற்ற வகையில் சிவனை நினைதற்காம் எட்டுத் தளங்கள் முன் காணப்பட்டுள்ளன. அவ்வெட்டும் மிகத் துலக்கமாகத் தம்பால் அமைய கொண்டுள்ளவை திருமுறைகள்.

இதனைச் சற்று விடுவித்துரைத்தால் :-

தேவாரம் அருளிச் செய்தவர்கள் அருளிய முதற் பதிகங்கள் மூன்றும் திருவாசகம் முழுமையாகவும் குருவருள் அதாவது சிவபெருமான் குருவாக வந்து ஆட்கொண்ட தன்மையை, அது சார்பான உணர்வுகளைச் சிவனை நினைதற்கு ஆதாரமாகத் தருபவை. திருநீற்றுப்பதிகம் முழுமையாகவும், “மெய்ப்பால் வெண்ணீறணிந்த.... விடிவதுமே வெண்ணீற்றை.........' நீராண்டபுரோதாய மாடப்பெற்றோம் நீறணியுங் கோலமே நிகழப் பெற்றோம்' எனக் காணும் பாடல் முதலிய திருத்தாண்டகங்கள் ‘மெய்யிலங்கு வெண்ணீற்று மேனியாய் எனக் கூறும் திருவாசகம், முதலிய திருநீற்றின் சார்பிற் சிவனை நினைய உதவுவனவாம். தேவாரத்திற் பஞ்சாக்கரப்பதிகம் நான்கும் திருவாசகம் திருச்சதகத்தில் ‘போற்றி ஓம் நமச்சிவாய எனத்” தொடங்கும் பத்தும் ‘அற்புதத்தெய்வம் இதனின் மற்றுண்டே.. எனுந் திருவிசைப்பா முதலியனவும் பெரிய - புராணத்தில் திருநீற்றுப்பிரகாசத்தைப் போற்றிக் கூறும் பகுதிகளும் முழுநீறு பூசிய முனிவர் புராணம் முழுமையும் விசேடமாகத் திருநீற்றின் சார்பில் சிவனை நினைய வைப்பன. தேவாரத்தில் வரும் க்ஷேத்திரக் கோவைகள் பிரதானமாகக் கோயில்களை நினைதல் சார்பில் சிவனை நினைய உதவுவன.

சிவனது சிரசு, திருமுகம், மார்பு ஆன அங்கங்களையும் மற்றை உறுப்புக்களான பிரத்யங்கங்களையும், அங்கங்களான கரம், செவிகளில் அமையும் மான் மழு குழை முதலிய சாங்கங்களையும், உபவீதம், ஆனைத்தோல், புலித்தோல் ஆதியான உபாங்கங்களையும் பற்றித் திருமுறைகளில் வருவன ஏராளம். ‘வேதமோதி வெண்ணூல் பூண்டு வெள்ளை எருதேறி....' பட்டுடுத்துத் தோல் போர்த்துப் பாம்பொன்றார்த்து என்பன போல் வருந் தேவாரங்கள், ‘திங்கள்வாணுதலார்....... துணைமுலைக் கண்கள் தோய் சுவடு -

பொங்குவான் தழலிற் புள்ளிபோலிரண்டு பொங்கொளி தங்கும் மார்பினனே' என்பது போல் வருந் திருவாசகங்கள் இப்பாங்கில் வரும் திருவிசைப்பாக்களும் பிறவும். 'சடை மருங்கில் இளம்பிறையும்......' பூதியாகிய புனித நீறாடிப் பொங்குகங்கைதோய் முடிச்சடை புனைந்து என்பன போல் வருவனவும் பொதுவில் நாயன்மார்களிடம் எழுந்தருளிய திருக்கோலம் குறிக்கும் செய்யுள்களும் ஆகிய பெரியபுராணச் செய்யுள்களும் 'அருவுருவில்' வைத்துச் சிவனை நினைவிப்பனவாம். அப்பர் சுவாமிகளின் திருவடித் திருத்தாண்டகம், திருவடித் திருவிருத்-தம் முதலாயின சிவன் திருவடியில் வைத்துச் சிவனை நினைவிக்குஞ் சாதனங்களாம். இனி, தேவாரத்திலும், திருவாசகம் முதலியவற்றிலும் பூவும் நீரும் தூவுதல், மஞ்சனமாட்டுதல் குறித்து வரும் பகுதிகளும், பெரிய புராணத்தில் திருக்குறிப்புத் தொண்டர்புராணத்தில் உமையம்-மையார் சிவனைப் பூசித்தமை கூறும் பகுதி என்பவும் 'அர்ச்சனை' அம்சத்தில் வைத்துச் சிவனை நினைவிக்கும் பெற்றியனவாம். எட்டாவதான திருத்தொண்டுக்குச் சைவத் திருமுறைகளில் உள்ள இடம் மிகப்பரந்த அளவிலானதாகும். 'விளக்கினார் பெற்ற இன்பம் ------- சகமலாதடிமையில்லை...' நிலைபெறுமாறெண்ணுதியேல்..' என்பனவாதித் தேவாரங்கள், 'ஆமாறுன் திருவடிக்கே' என்பது போன்ற திருவாசகங்கள், பிரதானமாகப் பெரியபுராணத் திருத்-தொண்டர் செயற்பாடுகள் கூறும் பாக்களை (வைகறை உணர்ந்து போந்து புனல் மூழ்கி வாயுங்கட்டி...... தேரொலிக்க மாவொலிக்கத் திசையொலிக்கும் புகழ்க்காஞ்சி..., புலர்வதன் முன் திருவலகு பணிமாறிப் புனிறகன்ற---- புலரும் பொழுதின் முன்னெழுந்து புனித நீரின் மூழ்கிப் போய்..., சோதி விளக்கொன்றேற்றுதலுஞ் சுடர்விட்டெழுந்தது நோக்கி ------ போன்றவை). ஓதி அவற்றின் சார்பிற் சிவனை நினைதல், திருத்தொண்டு சார்பிற் சிவனை நினைதலாகும்.

உண்மையிற் சிவனை நினைதற்கு உபாயமாக இவ்வெட்டும் அமைந்துள்ளன. சைவத்தில் லௌகிகத்துக்கு வேறு, ஆத்மிகத்-துக்கு வேறு என வழிபாட்டுப் பேதமில்லை. மேற்காட்டிய வகையில் உண்மை தழுவி வழிபாடு நிகழ்தலின் பேறாகவே உண்மையான லௌகிகச் செழிப்பும் நேரும் என்பது எப்பாலோ முடிந்த உண்மை. லௌகிகப் பேறுஞ் சரி ஆத்மிகப் பேறுஞ்சரி அருள்பவன் சிவனொரு-வனே. இரண்டில் ஒவ்வொன்றும் அவரவர் உளப்பண்பாட்டுத் தரத்துக்-கும் தகுதிக்கும் பொருந்த மாத்திரமல்ல, அவரவர் வாழ்வு லட்சியத்-தில் முன்னேறற்கு உபகாரமாம் வகையிலும் சிவனால் தெரிந்தளிக்கப் பெறுகின்றன என்பதே உண்மைநிலை. ஆதலால் ஆன்மாவானது



தனக்கும் சிவனுக்குமிடையிலான தொடர்பை உணர்வுபூர்வமாக வலியுறுத்தற்குப் பொருத்தமான இவ் வழிபாட்டு நெறியை வழுவாமற் கடைப்பிடித்தல் அவசியத்தின் மேல் அவசியம் ஆகும். விஷயம் அறியக் கூடியவர்கள் இதற்கு முன் மாதிரி காட்டுதல் விரும்பத்தகும். வெறும் பிரசங்கங்கள் சொற்பொழிவுகள் விசேட பயன்தரா.

சைவாலயம் ஒன்றுக்குக் கட்டிட வனப்பு, சொத்துச் சுதந்திர விருத்திகளல்ல, வழிபாட்டின் உண்மைநிலை உணர்ந்து வழிபட்டுப் பிறர்க்கும் முன்மாதிரியாயிருக்கக் கூடியவரின் தொகைவிருத்தியே பிரதானம் என்பது மேலோர் கொள்கை.

வாழ்க்கையில் துயிலெழுதலிலிருந்து ஆலய வழிபாடு வரை திருமுறை அநுசரணை இருக்கக்கூடும் விதம் பற்றி இதுவரை கவனித்தோம். இனி வாழ்வில் இடம்பெறுஞ் சுபாசுப கருமங்கள் வாழ்வுக்கின்றியமையாத தொழில்துறைகள் அந்திய காலக்கிரி-யைகள் என்பவற்றில் திருமுறைப்பிரயோகம் அமையக் கூடும் வகை பற்றிக் கவனிப்போம்.

ஆன்மாக்கள் அனைத்தினதும் செயற்பாடுகளும் அவற்றால் அடையும் பெறுபேறுகளும் அவற்றின் பூர்வபுண்ணிய பாபத் தரங்களுக்-கேற்ப அருளும் சிவனாலன்றி ஆவதில்லை என்பது பரமாப்தமான சைவ சித்தாந்த உண்மை. அதற்கிணங்க நமக்கு விளையும் நன்மை தீமைகளும் அவராலன்றி ஆவதில்லை. அதனால், வாழ்வின்போது நன்மை விளைகையிலும் அது அவரால் வந்தது என அவரை நினைத்து பொருத்தமான ஒரு வழிபாட்டு முறையுடன் அதை வரவேற்றலும், தீமை நேர்கையிலும் அதுவும் அவர் தர வந்தது என அவரை நினைந்து பொருத்தமான ஒருவணக்க முறையுடன் அதைச் சகித்தலும் தமிழர் பாரம்பரிய மரபு. அவ்வந்நிலைகளில் சிவனை நினைதற்கும் வழிபாட்டு முறையிற் திருப்தியுறுதற்கும் பொருத்தமான திருமுறைப்பாடல்களும் உள. பொதுவில் தீமைகள் நிகழ்கையில் 'அவ்வினைக்கிவ்வினை யாமென்று சொல்லும் அஃதறிவீர் -----' என்ற திருப்பதிகமும், 'குற்றம் நீ குணங்கள் நீ....' என்ற திருப்பதிகமும் சிவனை நினையும் நினைவுக்கு உறுதி தர வல்லவை. இவை போல்வன பிறவுமுள. இன்ப நிகழ்வுகளில் பிரதானமாக விவாகத்தின்-போது சிவனும் பார்வதியும் தம்பதிகளாகக் காட்சியளிக்கும் தோற்றத்தை நினைவிக்கும், 'பெண்ணின் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததே' என்பதை உள்ளிட்ட 'மண்ணின் நல்லவண்ணம் வாழலாம்' என்னும் பதிகம், திருக்குறிப்புத் தொண்டர் புராணத்தில் உமை

தழுவக் குழைந்த காட்சி தரும் செய்யுள் முதலியன அவ்வின்பக்காலச் சிவ நினைவுக்கு ஊற்றந் தந்து பரிமளிப்பிக்க வல்லனவாம்.

இனி சர்வமுதல்வன் என்ற முறையில் வாழ்க்கைக்குதவும் தொழிலைத் தருபவனும் சிவனே. ஆதலின் தொழில் சார் வைபவங்களின் போது திருமுறைப்பாடல்களை ஓதுதல் அவற்றின் சார்பிற் சிவனை நினைதற்கும் தொழுதற்கும் ஊக்க ஆக்கந் தருவனவாகும். விசேடமாகப் பயிர்த்தொழிலில் ஈடுபடுங்கால் நிலம், நீர், பயிர், விளைவு எல்லாமாய் அவைதோறும் அதுஅதுவாய் நிற்பவர் சிவனே என்றுரைக்கும் கல்லாகிக் களனாகிக் --- புல்லாகிப் புதலாகிப் பூடுமாகி--- நெல்லாகி நிலனாகி நீருமாகி நெடுஞ்சுடராயெம்மடிகள் நின்றவாறே என்னும் நின்ற திருத்தாண்டகப்பாடல், பாரவன் காண் பாரதனிற் பயிரானான் காண் - பயிர் வளர்க்கும்துளியவன் காண் துளியில் நின்ற - நீரவன் காண் என்ற சிவபுரத் திருத்தாண்டகம் என்பவற்றை ஓதுதல் அத்தொழிற் சார்பிற் சிவன் நினைவைச் சீர்மை செய்வதாகும். இத் தொழில் செய்பவரோ செய்விப்பவரோ ஆத்மாநுபவப் பிரியராம் பட்சத்தில்,

"மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாம் களையை வாங்கிப் பொறையெனும் நீரைப் பாய்ச்சித்
தம்மையும் நோக்கிக் கண்டு தகவெனும் வேலி யிட்டுச்
செம்மையுள் நிற்ப ராகிற் சிவகதி விளையு மன்றே"

என்ற அப்பர் சுவாமிகள் பாடலை ஓதுதல் மூலம் சிவனை நினைதல் மகாசிலாக்கியமாம்.

மரக்கலப்பையால் நிலத்தை உழும் உழவுக்குச் சமாந்தரமாக ஞான உணர்வால் உள்ளத்தைச் செம்மைப்படுத்தல் - நெல்லை விதைத்தற்குச் சமாந்தரமாக முத்தி விருப்பை உளத்திற் பதித்தல் - வயலில் நெல்லோடு கிளரும் புல்வகைகளைப் பிடுங்கி அகற்றுதற்குச் சமாந்தரமாகக் காமம், வெகுளி, சினம் ஆதியான பொய்ப் பண்புகளை நீக்கல் - நீர் பாய்ச்சுதற்குச் சமாந்தரமாகப் பொறுமையுணர்வைப் பெருக்குதல் - நெல் அறுவடைக்குச் சமாந்தரமாகச் சிலகதி விளைவைப் பெறுதல் - என்றவாற்றால் லௌகிகம் ஆத்மிகம் என்ற இரண்டுக்கும் ஒன்றே தளமான இச் செய்யுளை நினைதலிலும் ஓதுதலிலுமே வாயும் மனமுஞ் சிவமாம் பேறுண்டாம்.

இனி வாழ்வியலிற் பொறுப்பான கட்டம் ஒருவரின் அந்திய காலம். அத்தருணத்திற் பொதுவில் உள்ள மரணபயப்பீதி தணிதற்கும் சிறப்பாக அவரவர்க்குள சிலேற்பனக் கோளாற்று அவதி சாந்தியாதற்கும் அயலிற்சூழும் உற்றார் உறவினர் துயர் வேகம் தணிதற்கும்



ஈடிணையற்ற பரிகாரமாக நின்றுதவுவனவாய் அவ்வவலத்திலும் அத்தியாவசியமாக இருந்தாக வேண்டிய சிவநினைவைத் திடப்படுத்துவன திருமுறைப் பாடல்கள். பஞ்சாக்கரப் பதிகங்களாகிய தேவாரப்பகுதிகள், கல்லூர்ப் பெருமணம் ---- எண்ணுகேன் என் சொல்லி... தானெனை முன் படைத்தான்----------- என தேவாரமுதலிகள் மூவரும் முத்தி கூடும் நிலையில் அருளிய பதிகங்கள், அப்பர் தேவாரத்திற் திருக்கயிலாயம் சார்பான திருத்தாண்டகம், திருவாசகத்தில் அடைக்கலப் பத்து யாத்திரைப்பத்து என்பன அத்தருணத்துக்கு விசேடமானவையாய் அமையும்.

மேல்நிகழும் மரண வைபவக்கிரியைகளும் சிவநினைவை மிகவும் வேண்டியுள்ளவை. இத்தருணத்தில் பயன்படும் திருப்பதிகங்களில், திருவாசகத்துத் திருப்பொற் சுண்ணப் பதிகத்தின் சேவை ஈடும் எடுப்பும் அற்றதாகும். பிரிந்து போனவர் சிவலோகத்திற் குதூகல ஆரவாரமாக வரவேற்கப்படும் உணர்வலைகளைப் பரப்பி அவர் பிரிவாற்றாது அயர்வுறுவார்க்கெல்லாம் ஓரளவேனும் மன அமைதியை அளிக்கும் அபாரசக்தி அதற்குளதாம்.

இது முற்று முழுதான ஞானப்பநுவல். ஆலயத்திற் சூர்னோற்சவத்தில் ஓதப்படுவது. துக்ககரமான ஆசௌச சூழ்நிலையில் அவை ஓதப்படுவது அபத்தம் எனக் காரணம் காட்டி இதற்கு எதிர்ப்புத் தெரிவிப்பாரும் உளர். அவ்வெதிர்ப்பை நிராகரிக்கவல்ல பொருத்தமான வாதங்களும் உள. சாஸ்திரம் சம்பந்தமான அக்காரணங்களில் எதுவுமே இல்லாவிடினுங் கூட, மேற்குறித்த ஒரே காரணத்துக்காக மரணக் கிரியையில் அவ்வழக்கம் இருத்தல் மிகவும் வரவேற்கப்படலாம். மேல் தொடரும் அந்தியேஷ்டி சிராத்தக் கிரியைகளிலும் சிவ நினைவுகளைக் கொள்ள வைப்பதில் திருமுறைகளில் பங்கு பெரிதாகும்.

## அநுபந்தம்

**வேதோ (அ) கிலோ தர்ம மூலம்**

பிரதம பதிப்பாளர்
சைவ நீதி மாத இதழ்
கொழும்பு.

அன்புடையீர்,

எல்லாம் வல்ல அருள்மிகு ஸ்ரீ ஞான வைரவப் பெருமான் திருவருள் கடாட்சம் கிடைப்பதற்காக மேற்படி சைவநீதி பதிப்பகத்தால் மாதந் தோறும் வெளிவிடப்படும் சைவநீதிப் பத்திரிகையில் கடந்த ஒரு

வருடத்திற்கும் மேலாக நிர்வாகக் குழுவில் எம்மையும் இணைத்துக் கொண்டு எம்மால் இயன்ற சேவை ஆற்றுவதற்கு வாய்ப்பளித்தமைக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

கடந்த சைவநீதி இதழில் (வெகுதானிய ஆடி) 15ம் பக்கம் பிரசுரிக்கப்பட்ட செந்தமிழ்ச் சைவச்சிந்தனைச் செல்வர்களுக்கு என்னும் தலைப்பிலான கட்டுரை ஆனது நிர்வாக ஆசிரியர் என்ற வகையில் எம்மிடம் எந்த வகையிலும் கலந்தாலோசிக்கப்படாமல் பிரசுரிக்கப்பட்டிருந்தது மிகுந்த அதிர்ச்சியினையும் ஆச்சரியத்தினையும் ஏற்படுத்துவதாக அமைந்திருந்தது.

குறிப்பிட்ட கட்டுரை ஆனது சனாதன தர்மம் எனும் இந்து சமயத்தினையும் அதன் போற்றுதற்குரிய மகானாகக் கருதப்படும் ஆதிசங்கர பகவத் பாதாள் அவர்களையும் அவரின் அத்வைத கொள்கைகளையும் முற்றுமுழுதாகத் தாக்குவதாக அமைந்து இருந்ததோடு திட்டமிட்ட வகையில் பிரம்மத் துவேஷத்தினையும் ஏற்படுத்துவதற்காகவும் அமைந்திருந்தது. இக்கருத்துக்கள் முற்றிலும் எமது கண்டனத்திற்கு உரிய கருத்துக்கள் ஆகும். என்பதை உறுதியாகத் தெரிவித்துக் கொள்வதோடு அடியேன் நிர்வாக ஆசிரியராக இருக்கும்போது இப்படியானதொரு கட்டுரை சைவநீதியில் இடம்பெற்றதை இட்டு மிகுந்த மனவேதனை அடைகின்றோம்.

சனாதன தர்மம் காட்டிய ஆதி சங்கர பக்வத்பாதாள் அவர்களின் பாதார விந்தங்களைப் போற்றி அவர்கள் காட்டிய பாதையிற் செல்லும் அடியேனின் இலட்சியக் கொள்கைக்கும் கருத்துக்களுக்கும் எதிரான கருத்துக்களை முன்வைக்கும் பத்திரிகையில் அடியேன் நிர்வாக ஆசிரியராகப் பணியாற்றுவது ஆத்மார்த்தமாகத் திருப்தி அளிக்காத காரணத்தினால் சைவநீதி மாத இதழின் நிர்வாக ஆசிரியர் என்னும் பதவியில் இருந்து இராஜினாமா செய்து சைவநீதியின் நிர்வாகப் பணியில் இருந்து விலகிக் கொள்வதையும் இத்தால் தெரிவித்துக் கொள்கிறேன்.

இங்ஙனம்

சிவ ஸ்ரீ பாலரவிசங்கரக் குருக்கள்
இல 42, டிவா ஸ்லேன்
கிரான்பாஸ்
கொழும்பு.



இந்த அபவாதப்பிரகடனம் மூலம் இக்குருக்கள் ஐயா சைவ உலகுக்கு சவால் விடுகிறாரா?

சிவஸ்ரீ மகுடத்தை முன்னும் குருக்கள் மகுடத்தைப் பின்னுமாகத் தம் பெயரோடிறுகத் தழுவிக் கொள்ளும் இவர் தாம் ஸ்மார்த்த குருபாதார விந்த சேகரர் என்றுஞ் சொல்லிக் கொள்ளுவதன் பொருந்துமாறு யாதோ?

ஒன்றில், ஒரு தேவைக்கு அது, மறு தேவைக்கு இது எனக் கூறும், இரட்டை வேஷமா? அல்லது, இருபக்கத்தையும் ஏய்க்குந் தந்திரமான விலாங்கு வேஷமா? எதுவானாலும் சரி இவ்வாறான இவ்வொழுக்கம் ஐயரொழுக்கத்தில் எப்பிரிவில் அடங்கும்?

சிவாசாரியத்துவம் பெற்றவரே சைவக்குரு. குருவாக்குதற்குச் சிவாசாரிய தீக்ஷை வழங்குபவர் சிவபரத்துவத்தில் அழுந்தி நிற்கும் சிவாசாரியராயல்ல திருக்க முடியாது. அவரே இவருக்கு இலட்சிய புருஷர். இந்தச் சைவ பாரம்பரிய விதியை மீற இவருக்கு உத்தரவாதமளித்தது எந்தச் சிவாகமச் சட்டமோ?

இதை மீறியதன் மூலம் சிவாசாரியத் துவேஷத்துக்கும் சிவத் துவேஷத்துக்கும் நிலைக்களமாகத் தம்மைத்தாமே மறைமுகமாகப் பிரகடனப்படுத்திக் கொள்ளும் இவர் சனாதன சைவத்துக்கு நேர்மையாக அதற்குற்ற குறைபாட்டை வெளிப்படுத்துவார் மேல் பிராமணத் துவேஷமும் பிரமத்துவேஷமும் பாரிப்பது என்ன தோலத்தனமோ? சைவம் என்றால் ஒருவித விளக்கமும் வரொருவரும் பெறமுடியாத முழு நிர்மூடமான ஒரு பிராமணப் பொக்கிஷம் அல்லது பிரமப் பிண்டம் என நிலை நாட்ட முயல்கிறாரோ இவர்? பிராஹ்மண, பிரஹ்மம் என்பன சமஸ்கிருத மூன்றாம் 'ப' வில் தொடங்குவன அல்ல. நாலாம் 'ப' வில் தொடங்குவன *பிரஹ்மம் (மயக்கம்) என மாறிக் கொள்ளும் மயக்கத்துக்காளாகி விட்டாரோ இவர்?

நீங்கள் கேட்டதற்காகச் சிவாசாரியனாகச் செயற்படுகிறேனே அன்றி அந்தரங்க சுத்தியான சிவாச்சாரியனல்லேன் நான், என் வாயும் வயிறும் வேறு, என்னை நம்பாதீர் என இப் பிரகடனத்தின் மூலம் வெளிப்படச் சொல்லாமல் தன்னாலே கசிய விட்டுக் கொண்டும் சைவாலயக் குருக்களாயிருக்கும் இவரது அசட்டுத் துணிச்சலை என்னென்பது? சனாதன சைவத்தைச் தாவி மடிக்கும் விஷம

* வடமொழியில் வரும் பகரம் நான்கு.
இவை ஒவ்வொன்றும் வேறு வேறு ஒலியுடையது; வேறு வேறு பொருள் தரும்.

முயற்சியாகச் ஷண்மதத் தாபனஞ் செய்தவர் எனப் பிரசித்தமாக அறியப்படும் ஆதிசங்கரர் பாதையிற் செல்லும் (இவர் வாக்கின்படி) இலட்சிய வீரனான, இக்குருக்கள், சனாதன சைவத்திற்ஷண்மதக் கலப்படம் விளைக்கச் சகலவிததந்திரங்களையும் பண்ணிக் கொண்டே இருப்பதாகச் சரித்திர மறியும் சங்கர (ஸ்ரீ) மடத்தின் ஏஜென்ற் ஆகச் செயற்படுபவர் என்பதில் தவறேதும் உண்டாமோ?

இந்த இவருக்கும் ஆத்மார்த்தம் என ஒன்றுண்டா? என்ன புரளி இது?

இங்ஙனம் அலைமேல் அலையாக எழக்கூடும் பல வேறு சந்தேகங்களுக்கும் ஆமாளாக விளங்கும் இவர்,

சைவத்துள் ஸ்மார்த்த ஊடுருவல் பற்றி அகில சைவ உலகத்தில் கிளப்பப் பட்டிருக்கும் முறைப்பாட்டுக்குத் தமது இப்பிரகடனம் மூலம் எழுத்து மூலமான சாட்சியம் வழங்கி இருக்கிறார் என்பதே முடிவான உண்மை. இதன் மூலம் தமது இலட்சிய புருஷனாகத் தாம் புளுகும் தமது மகான்பேரில் உள்ள முறைப்பாட்டுக்குத் தாமே சாட்சியாய் விட்டார் குருக்கள் பாபம்.

சமயம் என்றால் ஏதோ வில்லங்கமான ஆக்கினையோ? தலை போகிறவிஷயமோ? சும்மா கும்பிடுவதற்கும் அர்ச்சனை செய்வதற்கும் இலகுவசதி இருந்தாற் போச்சு, மற்றும் படி எது நடந்தாலும் பரவாயில்லை என்று சொல்லிச் சுத்த வெளிச் சோம்பர்களாக நடிக்கும் நம் சைவர்களுக்கு இது சமர்ப்பணம்.

சமயம் என்றால் சாதாரணத்தில் சாதாரணமாகவோ அலட்சியத்தில் அலட்சியமாகவோ கருதிக் கொள்ளுதல், அது அசாதாரணத்தில் அசாதாரணம், இலட்சியத்தில் உயர்லட்சியம் என்ற அதன் இயல்பு நிலைக்கு நேர் விழுக்காடானது. அதனால்,அதன் உண்மை இயல்பு மலினமுறாது என்றும் மிளிர வைப்பது உண்மைச் சமயிகளின் தர்மக் கடனாகும். திருஞானசம்பந்த சுவாமிகள் வரலாறு இருக்கு மட்டும் நல்லை நகர் ஆறுமுகநாவலர் சரித்திரம் இருக்குமட்டும் அதற்கு அத்தாட்சி வேறு வேண்டப்படுவதன்று. தன் சமயநிலை மலினமுறக் காண்கையில் தன்னலங் கருதாது லோகோபகாரமாக அதன் நலங்கருதிப் பேச்சாலும், எழுத்தாலும், செயலாலும் பிறரையும் ஊக்குவிப்பது சமயி ஒருவனுக்குரிய சுதந்திரம். நேர் முகத்திலோ மறை முகத்திலோ அவன் முயற்சியை அடர்த்துக் கெடுக்க முயல்வது லௌகீக அரங்கில் மனித உரிமை மீறலும் ஆத்மீக அரங்கில் பாபகர்மமும் ஆம்.



மற்றையச் சமயங்களில் இல்லாத அளவுக்கு நம் சைவத்தில் மட்டும் அப்படி முயல்வார் மேல் அடாப்பழி போட்டு அடாசிவிடும் ஆண்மாரித்தனம் நிலவி வருதல் கண்கூடு. இது சைவத்துக்கொரு சாபக்கேடெனத் தகும்.

சைவசமூகத்தில் 'இந்து' பெயர் வழக்கமும் அதன் போர்வையில் ஸ்மார்த்த ஒழுகலாறுகளும் புகுந்து விளைவிக்கும் தீங்குகளும் ஆதாரபூர்வமாகச் சுட்டிச் காட்டப்பட்ட போது மேற்குறிப்பிட்ட குருக்கள் சூ, சூ பிராமணத்து வேஷம் என அடாப்பழி சுமத்தி ஆண்மாரித்தனமாக அடாசி விடக் கூசாமல் துணிந்திருக்கின்றார்.

இதே பாங்கில் சமய சேவையில் முன்னனியை எட்டிவிட முயலும் மற்றொருவரும் சூ சூ உதுமாதிரிச் சீ. ஐ. ஏ வேலைகள் இந்துக்களின் ஒற்றுமையைக் கெடுத்துவிடுமெனக் காருண்ணியத்திரங்குவதாகக் கேள்வி. சைவத் தூய்மையைப் பேண மேற் கொள்ளப்படும் முயற்சி இந்துக்களின் ஒற்றுமையைக் குலைத்து விடும் என இவர் ஆதங்கப்படுதற்கு நியாய பூர்வமான விளக்கம் எதுவுமே இருக்க முடியாது.

இவைகளை உற்றுணர்ந்து பார்க்குங்கால், பிராமணசுய நலத்தையும் பிரமவாத மதத்தையும் மதித்துப் பேணுதலும் இந்துக்களிடை ஒற்றுமையைப் பேணுதலுந் தான் தங்கள் தர்மக் கடமைகளாக இவர்கள் மேற்கொண்டிருத்தல் புலனாகின்றது.

இது சனாதன சைவத்தின் ஆக்கத்துக்கு வழி, அழிவுக்குக்குழி என்ற இரண்டில் எது சமைக்க உதவும்? இது சைவசமூகத்தின் தீர்ப்புக்கு.

*வெகுதானிய — கார்த்திகை 25.11.1998*

## பிரசுரம் — ஏழு

பாருமேன் துணிவைநங்கள் சிவாசார் யர்கள்
    பரமசிவா கமவிதிக்கு "டிமிக்கி" விட்டுச்
சீருலாஞ் சிவஞான மணமே தட்டா
    ஸ்மார்த்தகுரு பாதஞ்சே விக்கின் றார்கள்
பேருலாஞ் சிவாசார்ய விருது மங்கே
    பெற்றுவரப் புதல்வரையுஞ் சேர்க்கின் றார்கள்
ஆருளார் கேட்கவென அலெர்ஜிச் சைவர்
    ஆளுக்காள் முனகிவிட்டிங் கமைந்தாற் போச்சோ

### இலங்கையிற் சைவசமயக் குருபீடங்களின் ஒழுங்கீனநிலை.

"இராவணன் அரசனாக இருந்த காலந் தொடங்கியே இலங்கை-வாழ் தமிழரின் சமயமாக இருந்து வருகிறது சைவம். ஆனால் அது இன்று மிகச் கவலையளிக்குமளவுக்குப் பிற்போக்கான அனுசரணை நிலையை எதிர் கொள்வதாயிருக்கிறது. இன்று சைவாசாரியர், பூசகர் என்றிருப்போர் தமக்கு இன்றியமையாப் பண்பாகிய ஆத்ம ஞான விளக்கமற்று - வெறுந் தொழில் மனப்பான்மையுடன் இயங்கி வருதலே அதற்குரிய காரணமாகும்". இங்ஙனம் உணர்வு உத்வேகமெழ எடுத்து மொழிகின்றார் நல்ல சைவ பாரம்பரியத்தில் வந்தவரும் - சட்டத்தரணி-யும் - பாடல் பெற்ற சிவத்தலமாகிய திருக்கேதீச்சரத்துத் திருப்பணிச் சபைத் தலைவரும் ஆகிய திருவாளர் இ.நமசிவாயம் அவர்கள். இப்படிக் கூறித் தொடங்குகிற ஆங்கிலக் கட்டுரையொன்று (THE WEEKEND EXPRESS) இன் 28, 29.11.98 இற்கான வார இதழில் வெளி-வந்துள்ளது. அதன் மொழி பெயர்ப்பு வருமாறு.

இன்றைய எமது கல்விமுறை நாம் எமது சமயநெறிப்பிடிப்பும் பண்பாட்டநுசரணையுமற்றவர்களாய்த் தளம்பும் நிலையை வருவித்-திருக்கின்றது. இக்கல்வி பெற்ற நமது மக்கள் ஆலயதரிசனஞ் செய்கிறார்கள். கிரியைகள் சடங்குகளையுஞ் செய்விக்கிறார்கள், விபூதி அணிகிறார்கள் என்னும் அளவுக்கன்றி, அவை குறிக்குஞ் சைவ ஞான உண்மை விளக்கங்களை அறிந்து அநுசரிக்குஞ் சைவர்களாக இல்லை. இவர்கள் அநுசரணைகளெல்லாம் அவரவர் குடும்ப பாரம்பரி-யத்தில் வந்த நடைமுறை வழக்கங்களாகக் கண்ட பாவனையில் அமையுமளவில் அன்றி, உண்மை நோக்கத்தைத் தெரிந்து அநுசரிக்-கப்படுவனவாக இல்லை. அதன் சார்பில் "இந்து" சமயம் எனப்படு-வதற்கும் 'சைவம்' எனப்படுவதற்கும் இடையிலான வித்தியாசம் கூட அவர்களறியார் (சைவ சமயம் இந்து சமயந்தான் என்றால் அப்படியே நம்பி விடுகிறார்கள்). 'இந்து' சமயம் எனப்படுவது தனிப்பட்ட ஒரு சமயப் பெயரன்று. சைவம், சாக்தம், வைணவம் என்பன ஆதியாக இந்தியாவில் வழங்கும் பல சமயங்களைச் சுட்டும் ஒரு தொகுதிப் பெயர் அது என்ற விளக்கம் அவர்களுக்கில்லை. இத்தொகுப்பில் அடங்கும் வைணவம் சாக்தம் போல்வன சநாதன சைவத்தின் பிறழ்வுகளாகப் போயிருக்கும் அர்த்தநிலைப்பேறற்ற சாவிச்சமயங்கள் சைவத்தினெதிர் வெவ்வேறளவிலான கானல் நீர்கள்; அவைகள். பின்வரும் பிறழ்வுச் சமயங்களில் ஒன்றுக்கோ மற்றதற்கோ உறவுரிமை பூண்டவைகள் என்ற விளக்கமும் அவைகளுக்கில்லை.

1. சத்திய சாயி பாபா சமித்தி
2. வடலூர் இராமலிங்க சுவாமி பீடம்
3. திவ்ய ஜீவன் சைவம்
4. ஐயப்பசாமி பீடம்
5. சாக்த சைவம்
6. எல்லாம் தமிழ் இயக்கச் சைவம்.

வகை வேறுபடும் இப்பிரிவினர் ஒருவர் போலொருவராக அனை-வருமே சைவ இலக்கணமறியார். அதன் தத்துவங்களை அறியார், அதன் மெய்ஞ்ஞான விளக்கமு மறியார். அதனால்தான் இவர்களில் ஒரு பகுதியார் கோயிற்கிரியைகள் எல்லாவற்றையும் தமிழிலே நடத்தி விடலாம் எனக் கர்ச்சிக்கிறார்கள்.

எமது குருமாரிற் பலர் முறைப்படி தீட்சை கொடுத்துப் பயிற்றிக் குருத்துவ நிலைப்படுத்தப்படாதவர்களாய்த் தம் தொழிலுக்கேற்ற தகுதியற்றவர்களாய் இருக்கிறார்கள். உச்சரிக்கும் மந்திரத்தையே அர்த்த விளக்கச் சாயல் இல்லாது இயந்திர இயக்கப் பான்மையில் வாய் மீட்கிறார்கள்.

தமது சைவ சமூகத்தில் நிலவும் நொய்யனவும் நொடியனவுமான இத்தகைய குறைபாடுகளை வெளிப்படுத்துதல் மூலம் நான் குளவிக்-கூட்டைக் கல்லெறிந்து குழப்பம் விளைவிப்பவனாகச் சிலரால் கருதப்படுவேன் என்பதும் உண்மைதான். ஆனால் எமது சைவசமய மகிமையிலும், அதன் தத்துவ ஞானமேன்மையிலும் விசேட கரிசனை கொண்டிருப்பவன் என்ற முறையில், அதன் நன்னிலைமைக்குக் குந்தக-மாயிருக்கும் இக்குறைகளை வெளிப்படுத்தல் என் புனித கடமை என்றிருக்கின்றேனாதலால், அவ்வுணர்ச்சி என்னை எவ்விதத்திலுந் தடுக்கமாட்டாது. இதனைச் செய்ய எந்த விதத்திலும் யான் தயங்கப் போவதுமில்லை. ஆன்ம சக்தி எனக்கு இவ்விடத்தில் பெருந் துணை-புரியும் என்பதில் முற்றுமுழுதான திடமான நம்பிக்கை எனக்குண்டு.

## சைவாசாரியர் இலட்சணம்.

சைவ ஆசாரியர்கள் மிக்க நன்மதிப்பிற்குரியவர்களாவர். இவர்கள் ஏனையோர்க்கு உதாரண புருஷர்களாக வாழ்ந்து காட்ட வேண்டிய-வர்கள். இவர்கள் வடமொழி வேதத்திலும், சைவ ஆகமங்களிலும், பத்ததிகளிலும் பதினெண்புராணங்களிலும், பதினான்கு மெய்கண்ட சாஸ்திரங்களிலும், பன்னிரு திருமுறைகளிலும், ஆலய - கட்டட நிர்மாணச் சிற்ப சாஸ்திரங்களிலும் சோதிடத்திலும் நல்ல புலமை பெற்றிருக்க வேண்டும்.

இவர்கள் பூணூல் அணிதற்கு மேலாகச் சமய தீட்சை, விசேட தீட்சை, நிர்வாண தீட்சை ஆகிய சகல தீட்சைகளும் பெற்றவர்-களாகவும், தக்க ஆசாரியரிடம் ஆசாரியபிஷேகம் பெறுமுன்னர் திருமணஞ் செய்தவர்களாகவுமிருக்க வேண்டும்.

ஆசாரியபிஷேகத்தின் பின் நாளாந்தம் இவர்கள் கிரமந்தவறாது ஆன்மார்த்த சிவ பூசை செய்து வர வேண்டும். தான் சேவிக்கும் பெருமானைத் தவிர வேறெவரையும் வணங்கவோ வந்தனஞ் செய்யவோ கூடாது. கற்றைக் (பின்) குடுமி வைத்திருக்க வேண்டும். சிவாகம மொழி அறிவில்லாத பாமர மக்கள் கூட திருமூலர் திரு-மந்திரத்தில் இதன் அர்த்தத்தை அறிந்து கொள்ளலாம்.

மேற்காட்டப்பட்ட இலட்சணங்கள் பொருந்திய நிறைவான சிவாசாரியர் ஒருவரினாற்றான் கீழ்காணும் ஆலயங்களிற் பூசனை புரிய முடியும்.



1. சிவசக்தியுடன் இணைந்திருக்கும் சிவன் கோயில்கள்
2. விநாயகர் ஆலயங்கள்
3. சுப்பிரமணியர் ஆலயங்கள் ஆயவை அவையாகும்.

சிவாசாரியரானவர் சிறுதெய்வங்களுக்கும் மற்றும் கிராம தேவதைகளுக்கும் பூசனை செய்யக் கூடாது. அந்தியேட்டி திவசம், மரணக்கிரியைகள் முதலியன செய்ய வொண்ணாது. அரசு பீடத்திருப்-போர் அபிலாசைகளுக்கு ஆதரவாளர்களாயிருக்கக் கூடாது. முகமன் வார்த்தைகள் பேசக் கூடாது.

இன்று எங்கள் சமய குருபீடத்தில் இருப்போர் தாம் யார். தம் செயற்பாடு என்ன, தம் தகுதிப்பாடு மகத்துவம் எப்படியானது என்ப-வற்றை முற்றாக அறியாதும் மறந்தும், தெய்வநலம் இல்லாத சமய ஒழுங்குக் கட்டுப்பாடற்ற குழப்பமான நிலையில் ஆலயங்களுக்கு வழிபட வருவோரை எதிர்பார்த்து விசுவசிப்பதிலும், சிலர்க்கு மேலதிக அக்கறை காட்டுவதிலும் உலகப் பிராந்திகளில் கரிசனை கொள்-வதிலும் காலத்தைக் கழித்து வருகின்றனர், என்பதை மிக்க வருத்தத்துடனும் வேதனையுடனும் இங்கு எடுத்துக் கூறுகின்றேன். ஆலய சேவையை இவர்கள் முற்று முழுதாக ஆன்ம ஈடேற்றத்திற்-குரிய தெய்வத்தன்மை இல்லாத பண வருவாய்க்குரிய ஒரு வெறுங் கைங்கரியமாக்கி விட்டனர்.

சிவாசாரியாபிஷேகம் பெற்றோரிற் பெரும்பாலானோர் அடிப்படைத் தகுதியற்றவர்கள். இவர்களுக்குச் சாத்திர அறிவோ, வேதசிவாகம அறிவோ கிடையாது. இவர்களிற் சிலருக்கு அற்ப சமஸ்கிருத அறிவு இருந்தாலும், இரங்கத்தகும் அறிவுத் தரத்தினராகவே இருக்கின்றனர்.

## ஐந்து வகை ஆசாரியர்

ஆலயங்களில் நித்திய நைமித்திய கைங்கரியங்கள் செய்வதற்-குரிய சைவக் குருமாரை ஐந்து பிரிவாகச் சைவாகமங்கள் வகைப்-படுத்தியுள்ளன. அவ்வகையோர் விபரம்:

1. ஆசாரியன்
2. அர்ச்சகன்
3. சாதகன்
4. அலங்காரகன்
5. வாசகன்.

**கடமைகள்.**

| | |
|---|---|
| ஆசாரியன் | - சிவாகம விதிப்படி நைமித்திய கிரியைகள் செய்பவன். |
| அர்ச்சகன் | - நித்திய பூசைக்கருமங்கள் செய்பவன் |
| சாதகன் | - இருவகைப் பூசைகளுக்கும் வேண்டிய திரவியங்களையும் சாதனங்களையும் ஒழுங்கு நிரைப்படுத்தி குருமாருக்கு வழங்குதல், கிரியை ஒழுங்கு பிறழா திருக்க வைத்தல் போன்றவற்றைக் கண்காணிக்கும் அனுபவ மேலாதிக்க மிக்கவர். |
| அலங்காரகன் | - திருப்படிவங்களுக்கு அலங்காரஞ் செய்பவன் |
| வாசகன் | - வேதத்தையும் மற்றும் மந்திரங்களையும் கிரியா காலங்களில் தொடர்ச்சியாகச் சொல்லுபவன். திருமுறைகள் ஓதும் பண்ணிசையாளர் ஓதுவார்களும் வாசகன் வகையில் அடங்குவர். |

## தொழில்முறை ஆசாரியாபிஷேகம்

இன்று ஆசாரிய அபிஷேக கைங்கரியங்கள் ஒழுங்காக நியமப்படி நடைபெறுவதில்லை. குருகுல வாசம் என்பது மருந்துக்குமே இல்லை. அறிவாசார, அனுட்டான ஒழுங்கு நெறி முறைத்தகுதி கண்டு ஆசாரியர்கள் நியமிக்கப்படுவதில்லை. சிற்சில உடனடித் தேவைகளுக்காகத் தொழில்முறை என்ற கணிப்பிலேயே நடைபெறுகின்றது. இதில் உள்ள பழுது என்னவென்பது தெரியாது. பெயர்தான் சிவாசாரியன். இதனால் நேரும் தோஷமும் பழியும் பெற்றவனைக் காட்டிலும் கொடுத்தவனுக்குக் கூடிய பங்காகும்.

## நெறியல்லா நெறிக்கிரியைகள்

சிவாசாரியர்களது திருமண மரணக் கிரியைகள் கூட ஒழுங்கில்லாத நெறியல்லா நெறிமுறைகளில் தவறாகவே நடைபெறுகின்றன. சிவாசாரியர்களுக்கான இவ் வைதிகக் கிரியைகள் கூடச் சிவாசாரியரைக் கொண்டே செய்விக்கப்பட வேண்டும். சைவ தீட்சையோ, ஆசாரியபிஷேகமோ பெறாத சுமார்த்தச் சாஸ்திரிகளைக் கொண்டு செய்விக்கக் கூடாது. பெரிய சிவப் பிராமண



வம்சத்தவர் நாம் என்று தம்பட்டமடிக்கும் குடும்பங்களின் திருமண அபரக்கிரியைகள் சுமார்த்தர்களாலே செய்யப்பட்டு வருகின்றன. வழக்கிழந்த நிலையில் நடைபெறுகின்றன. பரிதாபப்பட வேண்டிய நிலை. ஏதோ நடந்து முடிந்தாற் போதும் என்ற அளவில் கருமங்கள் நடை பெறுகின்றன. எல்லாம் போலித்தனமும் பம்மாத்துமே.

மேலும் சிலர் தங்களைத் தாங்களே சிவாசாரியார்களாக்கிக் கொண்டு மேலும் கெடுதிகளைச் செய்து வருகின்றனர். ஒழுங்கு முறையில் நிலைப்படுத்தப்பட்ட தகுதி வாய்ந்த சிவாசாரியர்களிற் சிலர் கூடச் சைவாகமக் கோட்பாடுகளையும் - பத்ததிகளின் நிர்ணயங்களையும் பரிகசித்து உதறித்தள்ளி ஒதுக்கிவிட்டு, தம் வசதிக்கு ஏற்ப மாரியம்மனுக்கும் மற்றும் கிராமச் சிறு தெய்வங்களுக்கும் கும்பாபிஷேகம் போன்ற புனித கைங்கரியக் கிரியைகளைச் செய்து வருகின்றனர். இந்த அளவில் எங்கள் ஆலயக் கிரியைக் கைங்கரியங்கள் அற்பர்களினால், ஒரு பாசாங்கான குறைந்த தர - கேலிக்கிடமான மட்டத்திற்குக் கொண்டு வரப்படுகின்றன. இவற்றைத் தட்டிக் கேட்பதில் தவறுண்டா? இவை தொடரத்தான் வேண்டுமா? சைவ மக்களே நன்றாகச் சிந்தியுங்கள். "கோயிற் பூனை தேவனை மதிக்காது" என்றனர் நம் முன்னோர். உண்மையில் யாம் இன்று பிரத்தியட்சமாக அதனை காண்கின்றோம்.

## குருகுல பாடசாலை மீளமைப்பு.

பெரும்பாலான ஆலயங்களின் - ஏன் தலையாய பெருங் கோயில்களின் அறங்காவலர்கள் உட்பட இக்காலத் தப்புத்தவறான விவகாரப் போக்கைப் பற்றிக் கண்டுங்காணாதவர்கள் போல் அலட்சியப் போக்கில் இருந்து வருகின்றனர். பெரும் பாலும் இவர்களுக்குச் சைவக் கோட்பாடுகள் பற்றிய அறிவின்மையே இதற்குக் காரணமாகும். இன்றைய இந்நிலைகளை நிவர்த்தி செய்யக்கூடிய நேரிய சரியான ஒரே வழி:

1. ஆற்றல்மிக்க நல்ல குருமூலம், நல்ல சீலமான தகுதிப்பாடான சிவாசாரியர்களை உருவாக்குவதற்கான கற்பித்தலும், பயிற்சியும் குருகுல வாசமுறையில் இடம்பெற வேண்டும். இதற்கான வகையில் சகல வசதிகளும் அமைந்திருந்ததும், இப்பொழுது வடக்குக் கிழக்கை மூழ்கடித்துக் கொண்டிருக்கும் போர்ச்சூழலினால் தற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டிருப்-

பதும் ஆன திருக்கேதீச்சரம் வேதாகம குருகுல பாடசாலையை மீளமைப்புச் செய்தல் வேண்டும்.

2. இதனைப் பரிபாலனம் செய்ய நல்ல சிவாசாரியர்கள், சீலமான ஆலய அறங்காவலர்கள், சைவசமய நெறிமுறையில் வாழும் சைவசமயப் புலமைமிக்க சாமானியப் பெரியோரை அங்கமாகக் கொண்ட, வரையறைக்குட்பட்ட பெருஞ்சக்தி வாய்ந்த ஒழுக்கக் கட்டுப்பாடான தாபனம் ஒன்றை உருவாக்கி, அதன் மூலம் ஏனைய சமயத் தாபனங்கள் நடத்தும் குருமார் பயிற்சி நெறி போன்ற ஒழுங்கு முறையில் கற்பித்துப் பயிற்சியளித்தல் வேண்டும்.

3. இப்பந்தியின் 1. ஆம். 2 ஆம் பிரிவிற் காட்டப்பட்ட ஒழுங்குமுறைகள் உடனடியாகச் சாத்தியப்படாதிருப்பதானால், அவற்றிற்கான ஆக்க பூர்வச் செயற்பாடுகளைச் செய்து கொண்டு, இவற்றின் ஆரம்பத்திற்கு முன்னர் இடைக்காலச் செயற்பாபாடாகத் தமிழ்நாட்டிலுள்ள தருமபுர ஆதீனம் நடத்தி வரும் சிவாகம பாடசாலைக்குச் சிவப்பிராமண மாணவர்களைச் சிவாசாரிய பயிற்சிப் படிப்புக்கு அனுப்பலாம். பயிற்சிக்குகந்த தலை சிறந்த இடம் அதுவாகும். விரும்புவோர்க்கு வேண்டிய ஏற்பாட்டு ஒழுங்குகளைத் திருக்கேதீச்சரம் ஆலயத் திருப்பணிச்சபை செய்து கொடுக்கும். மேலும் எங்கள் நாட்டுப் பெரும் ஆலயங்களுக்கான சிவாசாரியர் பற்றாக்குறைகளை நிவர்த்தி செய்யத் தகுதியான சிவாசாரியர்களைத் தமிழ் நாட்டிலிருந்து தருவிக்கலாம். நித்திய பூசைக் கைங்கரியத்திற்கு இறைபடி சேர்ந்த தருமபுர ஆதீன சிவாசாரியராகிய ஆகம சிரோன்மணி ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாத சிவாசாரியரினால் எழுதப்பெற்ற நித்திய பூஜா லக்ஷண சங்கிரகம் என்ற நூலைக் கைக்கொள்ளல் நன்று. இது இங்கு குறிப்பிடத்தக்க ஒன்று.

4. இப்பொழுது சிவாசாரியர்களுக்கு அற்பமான கொடுப்பனவே வழங்கப் படுகின்ற தென்பதையும் நாம் கருத்திற் கொள்ள வேண்டும். இவர்கள் பஞ்சப்பாடில்லாது ஆலய சேவை தவிர்ந்த பிற பிரத்தியோக வருவாய்களை எதிர்பார்க்காது உன்னதமான மதிப்பு மரியாதைகளுடன் ஆன வாழ்க்கைக்குப் போதுமான அளவு வாழ்க்கைப்படி வழங்க வேண்டும். அதிவருமானமுள்ள பெருங்கோவில்கள் இயல்பற்ற சிறு கோவில்களுக்கும் உதவி இதற்கு முன்னுதாரணமாக நடக்க வேண்டும். இந்த வகையில்



கிறிஸ்தவ சமயச் சபைப் பணியாளர்களின் கொடைகளைப் பற்றிச் சிந்தித்துச் செயற்படல் நன்று. ஆயின் அவர்களின் சமய ஞானத்தரத்தளவிற்கு இவர்களின் சைவ ஞானமும் உயர வேண்டுதல் அவசியம்.

## சைவக் குருக்கள்

பிராமணர் தவிர்ந்தோரின் மரணக்கிரியைகள் சைவக் குருக்களினாற் செய்யப்படுகின்றன. இவரிடம் ஒரு பிராமண சிவாசாரியருக்குரிய இலட்சண குண இயல்புப் பண்புகள் இருக்க வேண்டும். இவரும் வேதம், ஆகமம் சித்தாந்த சாஸ்திரம் முதலான இன்ன பிறவும் கற்று ஒரு சிவாசாரியர் போன்று பயிற்சியும் பெறவேண்டும். இவர் பரம்பரையான சுத்த தாவர போசன நியதி உள்ள சைவக் குடும்பத்துப் பிறப்பாளராக இருக்க வேண்டும்.

மரணக்கிரியைகள் செய்பவராயிருக்கும் வரை சைவக் குருக்கள் ஆலய கைங்கரியங்களில் ஈடுபடக்கூடாது. கிரியைகள் தமிழிலும் சமஸ்கிருதத்திலும் செய்யப்படும். இவற்றிற்கான கிரியை நியதிகளும், மந்திரங்களும் பத்ததிகளில் கூறப்பட்டுள்ளன. சிவாசாரியர் ஒருவர் அனுபவிக்கும் அந்தஸ்தளவு மதிப்புக்குரியவர் சைவக்குருக்கள்.

## ஓதுவார்

ஓதுவார் ஒருவர் நிர்வாண தீட்சை பெற்றுத் தீட்சா நாமத்துடன் நாளாந்தம் ஆன்மார்த்த பூசை செய்து கட்டுப்பாடான நெறியில் மற்றவர்கட்கு முன்மாதிரியாக வாழ்ந்து வந்தால், ஒரு சிவாசாரியரதும் - சைவக்குருக்களதும் அந்தஸ்தில் வைத்து மதிக்கப்படுவார். சில ஓதுவார்கள் தங்களைத் தாங்களே இறக்கிக் கீழ்நிலைப்படுத்துகின்றனர்.

கும்பகோணத்திற்கு அண்மையிலுள்ளது தாராசுரம் என்னும் திருக்கோயில், கண்ணைப் பறிக்கும் கலையழகுச் சிறப்பு மிக்க பெருங்கோயில் இது. இதனைக் கட்டியவன் இரண்டாம் இராசராச சோழப் பெருமன்னன். அவன் தனது ஆட்சிக்குட் பட்ட இடப்பரப்பிலிருந்த திருக்கோயில்களில் ஓதுவார்களாகச் சேவகம் புரிந்த 100 ஓதுவார்களுக்குத் தீட்சா நாமங்கள் கொடுத்துக் கௌரவித்ததோடு, தாராசுரப் பெருங்கோயிலில் அவர்களது வடிவங்களைக் கற்களில்

பொறித்துக் கௌரவித்துமுள்ளான். இவன் வடமொழி வேத மந்திரங்களுக்கு ஒத்த மதிப்பை - அந்தஸ்தைத் தமிழ் வேதங்களாகிய திருமுறைகளுக்குங் கொடுத்து வந்தான்.

### சங்கராசாரியம் சைவத்திற்குச் சம்மதமன்று

காஞ்சி காமகோடி ஸ்ரீசங்கராசாரிய மடத்தில் பயின்று சிவாசாரியர்களாக வரவிரும்பும் மாணவர்களிடமிருந்து விண்ணப்பம் கோரிய விளம்பரமொன்று, இந்நாட்டுத் தமிழ் நாளிதழ் ஒன்றில் அண்மைக் காலத்தில் வெளியாகியிருந்தது. இது கௌரவ அமைச்சர் தொண்டமான் சார்பில் வெளி வந்தது. காஞ்சிபுரம் காமகோடி ஸ்ரீசங்கராசாரிய மடம் இந்து சமய வேதாந்த நெறிக் கோட்பாட்டுக்கு உரிமை கொண்டாடி அதன் வளர்ச்சிக்கும் மேம்பாட்டுக்குமாக உழைத்து வரும் இடமாகும். சைவ ஆகமங்களும், அவற்றின் கிரியைகளும் அவர்களுக்கு அயலானவை - அந்நியமானவை தொடர்பற்றவை.

சிவாகமங்களில் கூறப்படும் சரியா - கிரியாபாதங்கள் சகல சைவ ஆலயங்களிலும் சிவாசாரிய அர்ச்சக கைங்கரியங்களில் ஈடுபடக் கற்கின்ற - பயிற்சி பெறுகின்ற - மாணவர்களுக்கு முக்கிய பாடப் பகுதியாகும். உயிர்நாடியான ஆகமக் கிரியைகளுக்கு இடமில்லாத சங்கராசாரிய மடத்தில் என்னவித சிவாசாரிய பயிற்சி நடைபெறும்? இது விபரீதமான பயிற்சியாகவே முடியும். சைவத்தை முழுமுதற் சமயமாகக் கொள்வதைச் சகிக்காது ஷண்மதம் வகுத்த இவர்களா அது செய்ய வல்லுநர்?

### ஆதிமன்னன் இராவணன் சமயம்

இந்நாட்டுப் பெருமன்னனாகிய இராவணன் காலந்தொட்டு, சைவ சமயமே இந்நாட்டுத் தமிழ் பேசும் மக்களது சமயமாகும். இவன் ஆதித் திராவிடன் - சிறந்த சிவபக்தன். தாயாரின் சிவவழிபாட்டிற்காகக் கைலைமலையைப் பெயர்க்க முற்பட்டவன். சாமகான வித்தகன்.

இந்நாட்டுச் சைவ பாரம்பரியத்திற்கு ஒத்த முறையில் விரிவான முறையில் வேண்டிய அனைத்தையும் உள்ளடக்கிச் சிவாசாரிய பயிற்சியாளர்களுக்கு நன்றாகக் கற்பித்துப் பயிற்சியளிக்கும் தகுதிப்பாடும் - தரமும் சைவ ஆதினங்களுக்கு மட்டுமே உண்டு. சங்கராசாரிய மடம் சைவசம்பந்தமற்றது. அங்கு பெறும் பயிற்சி இந்நாட்டிற்கு ஒவ்வாததாகும். சைவ சிவாசாரியர்களைப் பயிற்றும் பக்குவமோ, இயல்போ இம்மடத்திற்கு இல்லை. எம் நாட்டுச் சைவ பாரம் பரியத்திற்கு ஏற்ற பயிற்சி கொடுக்க இவர்களால் முடியவே முடியாது. மேலும் சங்கராசாரிய மடம் பிராமணர் தவிர்த்த ஏனையோரைச் சிவாசாரிய, அர்ச்சகப் பயிற்சிக்கு அனுமதிக்கமாட்டாது. இதுவுங் குறிப்பிடத்தகும்.

தமிழ் நாட்டிலுள்ள திருவாவடுதுறை, தருமபுரம் ஆகியன சிறந்த சைவ ஆதீனங்களாகும். தருமபுரத்தில் நேர்த்தியான - தலை சிறந்த வேதாகம பாடசாலை உள்ளது. இன்று இவ்வாதீன அருளாட்சிப் பீடத்தில் இருக்கும் குருமகா சந்நிதானம் பெரும் புலமைமிக்கவர், நல்ல ஆசாரசீலர் பார்வைக்கும் பழகுவதற்கும் எளிமையானவர், ஆனால் கண்டிப்பானவர். ஏனையோர்க்கு முன்மாதிரியான தூய துறவு வாழ்வு வாழ்பவர். இலங்கைக்குத் தரமான சீலமான சிவாசாரியர்களைப் பயிற்றிக் கொடுப்பதில் பெரு விருப்புடையவர். இங்கு சில இடங்களிற் சிவாசாரிய கைங்கரியங்களில் ஈடுபட்டிருப்போர், முன்னர் அங்கு சென்று பயிற்சி பெற்று வந்த கூட்டத்தினரேயாவர்.

தருமபுர ஆதினம் 29 சிவாலயங்களைப் பரிபாலனஞ் செய்து வருகின்றது. இவற்றுள் பெரும்பாலானவை பாடல் பெற்றவை. புள்ளிருக்கு வேளூர் வைத்தீஸ்வரன் கோயில், திருக்கடவூர், திருவையாறு, திருநள்ளாறு, திருச்சி தாயுமானவர் கோயில் முதலானவை இவற்றுட் சிலவாகும். இவை யாவற்றிலும் கண்டிப்பாகச் சிவாகம நெறி முறைகளுக்கமைந்த நியமப்படி கைங்கரியங்கள் நடைபெற்று வருகின்றமை சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாகும்.

தருமையாதீன வேதாகம பாடசாலையில் குருகுல வாசஞ் செய்து, துறைசார்ந்த கோட்பாடுகளையும் விளக்கங்களையும் கற்றுத் தேறியோர், மேற்கூறிய ஆலங்களில் ஓராண்டு காலச் செயல்முறைப் பயிற்சி பெறச் செல்வர். அருள்மிகு வைத்தீஸ்வரன் கோயில் கைங்கரியத்துக்குரிய முதிர்ந்த சிவாசாரியார்கள், எங்கள் திருக்கேதீச்சரம் திருக்கோயில் கால நியம கைங்கரிய ஆலோசர்களாக இருந்து வருகின்றனர். இவர்களில் ஒருவர் வருடாவருடம் திருக்கேதீச்சர மகோற்சவத்திற்கும், மகா சிவராத்திரிக்கும் சர்வசாதக கைங்கரியக்கிரியைகளாற்றுவதற்குந் தவறாது வருகை தருவார். 1976 இல் நடைபெற்ற பெரும் சிறப்பு வாய்ந்த திருக்கேதீச்சர மகோன்னத மகா கும்பாபிஷகம் திருக்குடத் திருமஞ்சனப் பெருவிழா இறையடியணைந்த தருமபுரம் ஸ்ரீலஸ்ரீ சுவாமி நாத சிவாசாரியரின்

மேற்பார்வையிற்றான் நடைபெற்றது. அதே போன்று பெருமான் திருவருள் துணையோடு இனி நடக்கவிருக்கும் பெருஞ்சாந்தி விழாவும் இப்போதுள்ள முதிர்ந்த தருமபுர ஆதீன சிவாகமவித்துவானாகிய சிவாசாரியரின் மேற்பார்வையிலும் வழிகாட்டல் மூலமுமே நடைபெறத் திருவருள் பாலிக்கும்.

## உண்மைச் சிவாசாரியர் வணக்கத்திற்குரியவர்

உத்தம சிவாசாரியர் பதவி மகா புனிதம் வாய்ந்தது; மிக மேன்மையானது. சிவஞான வாசனை கமழ்வது; சிவப் பேற்றிற்கு ஏதுவானது; மனித மட்டத்தில் சகல விதத்திலும் மேன்மையான உயர்நிலை இதுவாகும். இப்படியான ஞானவான்கள் எந்நாளும் எல்லோரினதும் வணக்கத்திற்கு உரியவராவர். இவர்களே சைவத்தின் ஆதாரக் கயிறுகள் ஆவார்கள். அக்கயிற்றின் இறுக்கத் தளர்ச்சியே இன்றைய இளக்கடி நிலைக்கு காரணமாயிற்று. உண்மைச் சிவாசாரியர்கள் மேன்மையான வணக்கத்திற்கு உரியவர்கள் என்பதற்கு அடியெடுத்துக் கொடுத்தவர் நமது சமயாசாரியருள் ஒருவராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள். அவர் தமது தொண்டத் தொகைப் பதிகத்தில் " முப்போதும் திருமேனி தீண்டுவார்க்கடியேன்" என்ற அருள் வாசகத்தைப் பொறித்திருக்கிறார்.

கோலம், குறி , அறிவு, ஆசாரம், அனுட்டானம் போன்ற உயர்நல இயல்புகளில் பொதுமக்கள் எதிர்பார்க்குமளவுக்கு உத்தமர்களாயும் திரிகரண சுத்தி உள்ளவர்களாயும் சிவாசாரியர்கள் வாழக்கற்றுப் பழகிக் கொண்டால், மேற்கூறப்பட்டவாறான பணிவும் வணக்கமும் பக்தர்களிடம் தானாகவே வந்துதிக்கும். இந்நோக்கில் சிவாசாரியர்கள் தங்கள் சேவை தொழில் நோக்குள்ளது என்ற எண்ணத்தை அறவே நீக்க வேண்டும்.

அரசியல் பெரியார்களுடனும் பட நடிகர்கள் போல்வாருடனும் கூடிக்குதூகலித்துக் களிக்கும் ஈனமான செயல்களில் சிவாசாரியர் யாரோ ஈடுபட்டது பற்றிய குற்றச்சாட்டு அண்மையில் வெளிவந்துள்ளது. இது சமய மகிமைக்கும், ஆசாரிய இலட்சணத்திற்கும் ஒத்ததாகாது. எக்காரணம் பற்றியும் சிவாசாரியர்கள் தமக்குரிய உயர்நிலையில் இருந்து ஒரு அடிகூடக் கீழிறங்கி வருதல் கூடாது. லௌகிகத்தில் எவ்வளவு பெருமைக்கும் கௌரவத்திற்கும் உரியவராயிருந்தாலும் சிவாசாரியர் ஒருவர் அவரைத் தேடிப் போதல் கூடாது.



தேவை ஏற்படின் இவரிருக்கும் இடத்திற்கு அவராகவரும் நிலை நடைமுறையிலிருக்க வேண்டும். அது ஒழுங்கும் முறையுமாகும்.

இது பற்றிய விளக்கம் சற்றேனும் இல்லாக்குறையால், ஆலயஞ் சம்பந்தப் பட்ட சிலர் தாம் விரும்புவதெல்லாம் தமது அபிப்பிராயப்படி சிவாகமவிதி நோக்காதே சிவாசாரியர் செய்ய வேண்டும் என்று வற்புறுத்தும் நிலையும் ஒன்றுண்டு. இந்நிலை மிகப் பரிதாபகரமான பாவச் செயல் என்றே கருதப்பட வேண்டும். இத்தொடர்பில் இரணியன் வரலாற்றை நினைவுகூருதல் தகும். மேலும் சிறு தெய்வங்களுக்கும் கிராம தேவதைகளுக்கும் பூசையோ சாந்தியோ செய்வதற்குச் சிவாசாரியர்கள் உடன்படுதலாகாது. அச்செயல் சிவலிங்க சேவைக்கு யோக்கியமற்றவர்களாக்கி மேற்கொண்டு இவர்கள் சிவலிங்க பூசைக்கு அனுமதிக்கப்படக் கூடாத நிலையை உருவாக்கிவிடும். அத்தகையவர்கள் கோயிற்கருவறையின் வாயிற்படியினும் ஏறவிடாமல் தடுக்கப் படவேண்டும். சிவாசாரியத்துவத்தில் இருந்தே விலக்கப்பட வேண்டும். படநடிகரோடு சிவாசாரியர் யாரோ சம்பந்தப்பட்ட செய்தியையும் முன்குறித்துக் காட்டினோம். நடிகர் வேறு யாருமல்ல. நாத்திகப் போக்கு மிக்க சுயமரியாதை இயக்கம் என்ற திராவிடக்கழக இயக்கத்தை உருவாக்கிய ஈரோடுவே. இராமசாமிப் பெரியாரின் பண்ணையில் வளர்ந்த காழ்ப்பேறிய தலைவரும். மக்கள் செல்வாக்குப் பெற்ற பட நடிகருமாகிய எம்.ஆர்.ராதாவின் மகள் என்பதும் குறிப்பிடத்தகும்.

ஏதோ நாளாந்தம்

வான்முகில் வழாது பெய்க மலிவளஞ் சுரக்க மன்னன்
கோன்முறை அரசு செய்க குறைவிலாது உயிர்கள் வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மை கொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம் .

என்று அவசர அவசரமாகப் பாடுவதால் மட்டும் சைவநீதி உலகெங்கும் விளங்கி விட மாட்டாது. அதற்கு வேறாகவும் பலவழிகளில் அதற்கென்று நாம் பாடுபட வேண்டும்.

சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுமளவிற்கு அறிவு விளக்கம் உள்ளவராயும், அதற்குப் பொருத்தமான வாழ்க்கைத் தூய்மை உடையவராயும் வாழப்பழக வேண்டும். இப்பாடலில் அரசர், அந்தணர், குடிமக்கள் என்பார்க்குரிய அறங்கள் சொல்லப்பட்டுள்ளன. இதற்கிணங்க ஒவ்வொருவரும் தத்தம் அறங்களில் வழுவாது நிற்பாராயின், கற்றவன் கருணை சுரக் கலந்துயிர் சிவமாய் வாழப்

பற்றவன் பரமேயாகப் பரிவினால் சிவப்பிரகாசம், என்றபடி சைவநீதி உலகெலாம் தானாகவே பரவும். அதிலோ இதிலோ சுவையென்று ஆடு அங்குமிங்கும் வாய்வைக்குமா போல், அதிலோ இதிலோ நயம் என்று அங்கலாய்த்து அலையும் நமது அலைவும் அதனால் தணியும். இதனை தமது அருள் நோக்கால் எம்மவர்க்குப் புரிய வைக்கும் வண்ணம் திருவார் திருக்கைலைப் பெருமான் திருவடிகளைச் சென்னி வைத்து இடையறாது சிந்திப்போமாக. சைவமாம் சமயஞ்சாரும் ஊழ்பெறல் அரிது.

சிறப்பெனும் செம்பொருள் காண்பதறிவு

— *தமிழாக்கம் சி.கந்தசாமி.*

## சைவத்திரு. இ. நமசிவாயம் அவர்களின் கட்டுரை பற்றிய மதிப்பீடு.

தமிழாக்கஞ் செய்து தரப்பட்டுள்ள இக்கட்டுரையின் முக்கியத்துவம் மிக மேலானதாகும். "ஆள்தான் நூல்" என்றதற்கு முற்றிலும் ஒத்தபடி ஆக்கியோனின் சைவ உணர்வூற்றுப் பிரபாவத்தை அலாதியாக வெளிப்படுத்துகிறது இது. இக் கட்டுரையாளர் திரு.இ.நமசிவாயம் குலப்பிறப்பின் சார்பினாலும், தேடிய தேசியக் கல்வி கலையறிவினாலும் ஆன்றோரை அணைந்து ஐயந்தீரப் பெற்றுக் கொண்ட உன்னத கேள்வி விசாரணைகளினாலும் - சைவ ஞானம், சிவலாய நிருவாகம் என்பவற்றில் தரங்கடந்த உள்ளறிவு நிலைபெற்றவர். திருக்கேதீச்சரப் பெருங் கோயிற்றிருப்பணிச் சபையின் முன்னாள் செயலாளராகவும், இந்நாள் தலைவராயும் இருந்து தமது உயர் கல்வி கேள்வி அனுபவச் சிறப்புக்களைக் கோயில் நிருவாகத்திற் செயன்முறைப்படுத்துபவர். சிவாசாரியர்கள் பற்றி அவர் சொல்லும் ஒவ்வொரு பதமும் ஐயத்துக்கு இடமில்லாதபடி அர்த்தபுஷ்டியுள்ளதாகும்.

### நேர்மையும் துணிச்சலுமான வெளிப்பாடுகள்

இப்போது இருதலைமுறைகளாக உண்மையுணர் சைவரிற் பலர், சைவக்கோயிற் பூசகர் பேரில் சொல்லக்கூசி, விக்கி விழுங்கிக்



கொண்டிருந்தனவும், மற்றொரு சிலர் நெஞ்சின் மிக்கது வாய் சோர்ந்து மறைவாகத் தத்தமக்குள் முணுமுணுத்துக் கொண்டிருந்தனவுமான குறைபாடுகள் பலவற்றைப் பட்டவர்த்தனமாக வெளிப்படுத்தி இருக்கும் இவர் நேர்மையும், துணிச்சலும் போற்றத்தகும்.

இது குளவிக் கூட்டுக்குக் கல்லெறிவது போன்ற ஒரு செயலென நான் அறிவேனாயினும், நான் அதனாற்றடுக்கப்பட மாட்டேனென்றும், தயங்கமாட்டேனென்றும் அவர் கூறுவது சமயப் பண்பாட்டின் உண்மை தொனித்தல் நயக்கத்தகும். நாவலர் பெருமான் போன்ற சைவச் சான்றோர்களின் உளப்பாங்கை அடியொற்றி நிற்கும் சைவ நேர்மை இதிற் பிரதிபலிக்கின்றது. குழப்பப்பட்ட கூட்டிலிருந்து வெளிவருங் குளவிகளின் தாக்கம் தவிர்க்கமுடியாத ஒன்று. அதேபோல் இதனாற் சினப்பிக்கப்படுவர்களால் நேரும் பாதிப்பு இவருக்கும் இருந்தே ஆகும். ஆயின் சமயத்தின் உண்மைப் பெறுமானத்தை உணர வல்லார்க்கு அது பொருளன்று. ஏனெனின் ஆஸ்தீக நோக்கில் இவ்வகைத் தாக்கங்கள் உடல் சம்பந்த மட்டிற் பட்டுக் கழிபவை. அதைப் பொருள் செய்யாது இவற்றுக்கு எதிர்முகங் கொடுத்து நிற்றல், உயிர் சம்பந்தப்பட்ட மெய்யுணர்வுறுதிக்கு ஊற்றங் கொடுத்து ஆன்மிக நலனுக்கு உறுதுணையாய் அமைவது. சைவ உண்மை நோக்கில் ஆன்மிக நலனுக்காக உடல்சார் தாக்கங்கள் எத்தனையும் சகிக்கத்தகும். ஆதலினால் இவ்வகைச் சைவ உறுதிப்பாட்டைத் தவறாமல் மேற்கொள்ளலை அவசியமாக்கும் காலச் சூழ்நிலை இப்பொழுது இருந்து கொண்டிருக்குமாற்றை அறிதலும் அவசியமாகிறது.

ஐயோ சைவம் அயலார்க்கு அடிமையாகிறது. சைவக்குருமாரின் நேர்மையைப் பேணும் நோக்கில் அவர்களால் நேரும் பெரிய தவறுகளையுஞ் சிறியனவாகக் கண்டு சகித்து வந்திருக்கும் சைவமக்களின் நேர்மைக்கு அறைகூவல்விடுதல் போன்ற செயற்பாடுகள் தற்பொழுது அவர்களால் அதிகரித்து வருகின்றன. அவை பத்திரிகைப் புதினங்களாகித் தாமாகச் சந்திக்கு வந்து கொண்டுமுள்ளன. தம்வாயாற் சொல்லத்தாமே கூச வேண்டிய விஷயங்களை அவர்களே அபாரத் துணிச்சலுடன் பிரகடனப் படுத்துகிறார்கள். அதன் மூலம் சனாதன சைவத்தை அயற் சாதியாகிய ஸ்மார்த்தத்திற்கு அடிமைப்படுத்திவிடக் கங்கணங்கட்டி நிற்கிறார்கள். ஐயோ இதென்ன விபரீதம்.

## கொண்டவனை விட்டுக் கண்டவனுக்கு மையல்.

சைவ அந்தணர் பிள்ளைகளுக்குச் சைவ ஆதினங்களுக்குப் பதில் ஸ்மார்த்த ஸ்தாபனமாகிய காஞ்சிமடத்திற் சிவாசாரியப் பயிற்சியும் தீக்ஷையும் பெற்றுக் கொடுக்கப் பத்திரிகைப் பிரகடனமே பண்ணி-யிருக்கிறார்கள். தமக்குச் சிவாசாரிய தீக்ஷை வழங்கி உய்யக் கொண்ட சிவாசாரியருக்குக் குருவணக்கஞ் செலுத்துவதற்குப் பதில், ஸ்மார்த்த மடத்துக் குருவுக்குப் பகிரங்க விளம்பரம் பண்ணிக் குருவணக்கஞ் செய்கிறார்கள். இது கொண்டவனை விட்டுக் கண்டவனுக்கு மையல் கொள்வதற்குச் சமமாகும்.

இக்காலச் சூழ்நிலையில் சைவலாய அர்ச்சகர்க்குப் பயிற்சி கொடுத்தற்கோ, சிவாசாரிய தீக்ஷை வழங்குவதற்கோ காஞ்சிமடத்-திற்கு எவ்விதத் தகுதிப்பாடோ உரிமையோ இல்லை என நமசிவாயம் அவர்கள் அடித்தழுத்தி உரைப்பது ஆணித்தரமான ஓர் உண்மை. சிவாசாரிய தீக்ஷை வழங்குபவர் தாமும் சிவாகம் ரீதியான சிவாசாரிய தீக்ஷை பெற்றுச் சிவாலயக்கிரிய விற்பன்னராய் சிவபூஜைதுரந்தரரா-யிருக்க வேண்டியதுடன் பிராசாத மந்திரவலுவுடனான சிவோஹம் பாவனையிற் சிறந்தவராயுமிருத்தல் வேண்டும். சைவசித்தாந்த ஞான விளக்க பரமாகமப் பஞ்சாட்சார சாதனை பயின்றவராய் இருக்க வேண்டியவர், அவர் சிவன் அல்லாத பிறதெய்வ அனுசரணை எதுவுமில்லாத சிவானுபூதிமானாக இருக்க வேண்டியவர் அவர். காஞ்சிமடஞ் சார்ந்த குருவுக்கு இவற்றில் எத் தொடர்புங்கிடையாது. அதற்கெதிர் ஸ்மிருதி வழக்கம், அஹம் பிரம்மாஸ்மி பாவனை, சூரிய காயத்திரி உபாசனைகளில் மட்டுமே அவர்களுக்குப் பயில்வும் செறிவும். சிவன் முழுமுதல்வன் என்ற கருத்தை உள்வாங்கிக் கொள்ளமாட்டாது, விஷ்ணு சூரியன் எல்லாம் முழுமுதற் கடவுள் என்ற கொள்கையில் வலுத்திருக்கும் காஞ்சி காம கோடி மடத்துக்குச் சிவபாவனை எங்ஙனம் பலிக்கும். தானே சிவபாவனைக்கு இலாயக்-கற்ற அம்மடம் சிவபாவனையில் அழுந்தி நிற்கும் சிவாசாரியரை உருவாக்குதல் பொய்யேயாதலன்றிச் சற்றும் மெய்யாகாதே.

விபூதி அணியும் வழக்கமற்ற சமய முகவர் ஒருவர். தங்கள் சமாதியைத் தாண்டிச் சபரிமலைக்குப் போகும் ஐயப்ப யாத்திரி-கர்களுக்கு, உள்நோக்குடன் விபூதி கொடுத்து வரும் செய்தியொன்று சிலகாலங்களுக்கு முன் பிரசுரமாயிருந்தது. அதற்கும் இதற்கும் எவ்வித பேதமும் தோன்றவில்லை.



## பொருந்தாப் பேச்சு

இனி அறிவுலகம் நன்கறியத்தக்க தமிழர் சமயமாகிய சனாதன சைவத்தின் அடிப்படை இலட்சியம் முத்திதரும் முதல்வனை ஐயமறத் துணியப்பட்ட சிவனை வினை நீங்கி மோட்சம் பெறும் நோக்கிற் சிவாகம விதிப்படி வழிபடுதல், அந்நோக்கில் அவர்களை இலௌகிக பேறுகளைத் தெய்வ வழிபாட்டனுசரணையில் பிரதானப்படுத்து வதில்லை. அவை வேண்டாமலே அமையும் என்பது அவர்கள் நிலை எனில், முத்தியும் வேண்டாமலே அமையும் எனல் ஆகாது. ஏனெனில் லௌகிகப் பேறுகள் முத்தி நோக்கை முன்னேற விடாது பின்னி-வைக்கும் விஷமிகள் என்பது அனுபவசித்தம். ஆதலால் அவற்றின் நாட்டாண்மைக்கு இடம் கொடாது விலகி முன்னேறுதற்காக ஆன்மா முத்தியை வேண்டி வழிபட்டே ஆதல் வேண்டும். முத்தி என்பதும் பாமரர் சபைகள் வழங்கும் கௌரவப்பட்டம் போல்வது ஆகாது. மாணவன் ஒருவன் வருந்தி முயன்று படித்து உரிய அறிவுத்தகுதி பெற்ற பின் பரீட்சைக்கு முகங் கொடுத்துப் பெறும் கலாநிதிப்பட்டம் போன்றது என்பதும் குறிப்பிடத்தகும். இது இவ்வாறாக காஞ்சி மட ஆதிக்கத்திலுள்ள ஸ்மார்த்தத்தின் நிலை இதற்கு நேர் எதிரானது. அதன் நோக்கில் சிவன் முழுமுதற்றலைவனுமல்ல, வழிபாட்டு நோக்கு முத்திப்பேறும் அல்ல. முத்தி சிவன்தர வருவதல்ல. நானே பிரமம் என ஒருவன் தன்னைத் தான் உணர்வதால் வரும் பேறு அது என்ற கோட்பாடுள்ள வேதாந்த மடமான காஞ்சிமடத்திற்கு அது பொருந்-தாது தானே. அதனால் லௌகிகப்பேறே வழிபாட்டு நோக்கு என்பதே அம்மடத்தின் நிலை. சிவனைவிட லௌகிகப்பேறுகளை இலகுவில் கூடுதலாகத்தரவல்ல விஷ்ணு, இராஜராஜேஸ்வரி, சூரியன் - ஏன் இராமர் ஆஞ்சநேயர்கூட முழுமுதற் கடவுள்களாக வணங்கப்படலாம் என்பது ஸ்மார்த்த நிலை. ஆதலின் இம்மடத்தார் சிவாசாரியப் பயிற்சியும் பட்டமும் வழங்குவது என்ற விஷயம் குறித்த மசூதிச் செய்தி போல விபரீதமன்றி வேறில்லை. அந்த விபரீதச் செயலால் நேரும் அவமானத்தைச் சகிக்கலாற்றாது, ஐயப்பன் கூட்டம் ஒரு நாள் எதிர்த்து மோதி மேல் அவ்விபரீதம் நிகழாமற் பண்ணிவிட்டதாகச் செய்தித் தொடர்ச்சி, இப்படி ஒரு மான உணர்ச்சி எங்கள் சைவர்-களிடை எழுமோ இல்லையோ அது அவர்கள் சுரணையைப் பொறுத்த விஷயம். அது வேறு உண்மைச் சைவாபிமான உயர்நோக்கில் அன்பர் நமசிவாயம் இக்கருத்துக்கும் இடங்கொடுத்திருப்பது இக்கட்டுரை-யின் மகாமுக்கியத்துவமாகக் கொண்டு போற்றத்தகும்.

### எங்களை ஸ்மார்தர் எனலாமா?

இவ்வாறான ஆட்சேபங்கள் பிரசுரமாகும் வழக்கம் நாட்டிற் சில காலமாக இருந்து வருகிறது. இவற்றின் தாக்கத்திற்கு நசிந்துள்ள சிலர் எங்களைச் ஸ்மார்த்தர் எனலாமா? எனக்கூறி நீலிக்கண்ணீர் விட்டு அறிவாளியாஞ் சைவமக்கள் சிலரின் அனுதாபத்தைப் பகிர்ந்து கொள்வதாகக் கேள்வி. இதற்குப் பதிலை அக்கேள்வி கேட்டோர் நாவலர் கோட்டம் ஆ.முத்துத்தம்பிப்பிள்ளையின் யாழ்ப்பாண வரலாற்று நூலைப்படித்தால் தெளிவு பிறக்கும். இரகசியமும் அப்பலத்திற்கு வரும்.

உண்மை உணர்வு உண்டேல் பின்வரும் நியாயபூர்வமான ஆட்சேபங்களுக்குச் சந்தேக விபரீத மறப் பதிலளித்தல் மூலம், தம் உண்மையை நிரூபித்து ஏனையோர் மதிப்பையும் ஆசீர்வாதத்தையும் அவர்கள் பெற்றுக் கொள்ளுமாறு வேண்டுகின்றோம்.

- ஸ்மிருதி வழிநிற்பவர் ஸ்மார்த்தர் என்பது உண்மையா? அல்லவா?

- சிவாகம விதிவழி தமது திருமணக்கிரியை, அந்தியக்கிரியைகளை நடத்த வேண்டிய சிவப்பிராமணர்கள் கூட அதற்கு மாறாக ஸ்மிருதி விதிப்படியே அவற்றைக் கைக்கொள்ளும் வழக்கம் அண்மைக்காலந் தொடக்கம் நடந்து வருகின்றதல்லவா? இல்லையா -

- சைவத் தாபனத்திற்கும் அபிவிருத்திக்குமெனறே திருக்கைலாய பரம்பரையில் உற்பத்தியாகிப் பல்லாண்டுகளாகப் பிரசித்தி பெற்றிருக்கும் சைவாதீனங்களின் பக்கம் நாடாது, ஷண்மத பரிபாலனக் கோட்டையாக விளங்கும் காஞ்சிமடமோ தமக்கு ஜீவரக்ஷகமான சரணாகக் கொண்டு இவர்கள் குலாவி உலாவி மகிழ்தல் உண்டா? அல்லவா?

- மேற்கூறிய மடக்கொள்கையின் மூல முதல்வராகிய சங்கராசாரியரே தமக்குக் குரு என்றும் இவர்கள் கொண்டாடுவதும் அம்மடத்துத் தற்போதுள்ள பச்சிளங் குருவுக்குக் கூட அவரது வாரிசாக வருடாந்த நிறைவு வடிவங்களை இவர்கள் விழாவாகக் கொண்டாடி குருவணக்கமும் பாராட்டும் செய்து வருதல் உண்டா? அல்லவா?



- சிவாகம விதி விரோதமாகச் சைவாலயங்களில் சாக்த, வைஷ்ணவ மூர்த்தங்கள் ஏன் ஆஞ்சநேயர் மூர்த்தங்கூடப் பிரதிஷ்டை ஆகி நித்திய நைமித்தியங்கள் நிகழ உள்ளாளும் கள்ளாளுமாக இருந்து ஊக்கிவரும் வழக்கம் உண்டா? அல்லவா?

- சைவாலய பூசைகளில் பத்ததிக் கிரமப்படி வேதமோதி முடிந்ததும் திருமுறைகள் ஓதுமுன்னர் சங்கர கிருதிகளுக்கு முன்னுரிமை கொடுக்கும் நப்பாசையால் அவரது லிங்காட்டகம் முதலியவற்றை இடைச்செருகல் செய்வது உண்டா அல்லவா?

- சிவாகம விதிப்படி சிவாசாரிய தீட்சையும் பயிற்சியும் சிவாசாரியரிடத்துப் பெறுதற்குரிய தமது இளைஞர்களை அத்தேவைகளுக்காகவே அனுப்புவதாகச் சொல்லி காஞ்சிமடத்திற்கு அனுப்புவது உண்டா? இல்லையா?

மேற்கூறிய இவ்வாட்சேபங்கள் ஆதாரபூர்வமானவை ஆதலின் இவை சான்றோரதும் ஏனையோரதும் கவனத்திற்குரியனவாக வேண்டும்.

*வெகுதானிய தை — 20.01.1999*

## பிரசுரம் — எட்டு

கடந்த நாற்பது வருடங்களாக அகிலம் வியக்கும் வகையில் தீவிர எழுச்சி பெற்றுவரும் சைவாலயமொன்றின் பிரதம சிவாசாரியரொருவர் சிவாகம அநுசரணையற்றதும், பொருந்துமாற்றுக் கொவ்வாததுமான ஆஞ்சநேய வழிபாட்டுக்குப் பிரசாரஞ் செய்து வருகிறார் என்றால்,

புராதனப் பெருமை பெற்று மிகச் சமீப காலத்திலேயே பெரிய மெய்ஞ்ஞானி ஒருவரைத் தோற்றுவித்து சைவ கலாசாரத்தில் ஒப்புயர்வற்று விளங்கும் கிராமமொன்றில் சிவாகம விரோதமானதும், ஸ்மார்த்தருக்குப் பிரதானமாக இருப்பதுமான காயத்ரி ஹோமம் பிரசித்தமாக நடைபெறுகிறது. அது நமது உயர் பீடங்களாலும் ஆசீர்வதிக்கப்படுகிறது. அங்கே தான் ஸ்மார்த்தகுரு வணக்கமும் நடைபெற்று வருகிறது என்றால், அதே ஊரிற் தான் ஆஞ்சநேயர் கோயிலெழுப்ப ஆயத்தமிருப்பதாக வதந்தி கிளம்புகிறது என்றால்,

மற்றொரு சைவக் கிராமத்தில் கந்தசுவாமி தூதராகப் பிரசித்தி பெற்ற வீரவாகு தேவருக்கே இடங்கொடுக்காத கந்தசுவாமி கோயிலில் இராமதூதருக்குப் பிரதிட்டை. ஆயிருக்கிறது என்றால்,

யாழ்ப்பாணத் தமிழ் மன்னரின் சைவராசதானியாய் இருந்து ஸ்ரீலஸ்ரீ நாவலர் பெருமான் திருவவதாரத்தால் புனிதமுற்றதான ஊரொன்றில் சிவப்பிராமணப் பிள்ளைகள் பகிரங்க அறிவித்தல் மூலம் சேர்க்கப்பட்டு ஆசாரியப் பயிற்சிக்காக ஸ்மார்த்த மடத்துக்கு அனுப்பப்படுகிறார்கள் என்றால்,

பாடத்திற் கவனஞ் செலுத்த முடியாமையால் கொப்பியில் விகடப் படங்கள் கீறிச் சக மாணவர்களையும் பராக்குக்காட்டும் மாணவர்கள் சிலர் போல, தமக்கு இயல்பாக இருக்க வேண்டிய சைவஞான விளக்கம் பற்றிப் பேசுவதிலோ, எழுதுவதிலோ கருத்துச் செலுத்தாது சைவ சம்பிரதாயத்துக்கு வேறான ஆஞ்சநேயர் மகிமை முதலியன



எழுதிப் பிரசுரிக்கும் நிலையில் சைவவுயர் மட்டத் தரப்பில் சிலருள-ரென்றால்,

புராதனப் பழமை வாய்ந்த முது சைவ பூமியாகிய நமது நாட்டில் சைவ ஞானம் பூச்சியத்தை நாடி விரைவில் சரிந்து கொண்டிருக்கிறது, என்பதில் ஐயத்துக்கு இடமில்லை.

சமயம் என்பதன் சாதாரண தன்மைக்கு மேலாகச் சைவசித்தாந்த ஞானமே தன் பண்பும் பயனுமாகக் கொண்டுள்ள சிறப்பினது சைவம். சைவ சமூகத்திற் சைவ ஞானம் சரியும் நிலை ஏற்படுமானால் மேற் கொண்டு எவ்விதத்திலும் அது சைவமாயிருக்க முடியாது. திரிந்து திரிந்து அது என்னாகுமோ எனக் கவலுவதில் தவறில்லை. ஆதலால் சைவ சமூகத்தின் இன்றைய அத்தியாவசிய தேவை சரிகின்ற சைவஞான விளக்க நிலையை நிமிர்த்தி சைவத்தை உரிய நிலையில் நிறுத்தும் ஒன்றே தமிழர் பொறுப்பாயுள்ள பண்புகளில் உயர்ந்தது. தமது குடிக்கு வரும் அவமானத்தை நீக்கி அதனை மேன்மேல் உயரச் செய்வதாம் என்பதைத் திருவள்ளுவர் அறம், திடமாக வற்புறுத்து-கிறது. திருவள்ளுவர் அறம் முதற் பட்சமாகத் தமிழர் அநுசரணைக்-குரியது. அது மனிதகுலம் முழுவதற்கும் பொதுவென்பது இரண்டாம் பட்சம். தமிழராகிய நமக்குத் தமிழ் சைவம் நாம் பிறந்த குடி. அதை நாம் நன்னிலையில் வைக்க முயல வேண்டுமென்பது, ஆலோசித்துத் தீர்க்க வேண்டியதொரு அலுவலல்ல.

குடியையுர்த்தும் விஷயத்தில் நமக்கு இயலுமோ? இயலாதோ? என்ற சிந்தனையை முன் வைத்தல் அனாவசியம் என்கிறார் திரு-வள்ளுவர்.

"முயல்வது முயன்றேயாக வேண்டும்
முயல்பவர் நேர்மையும், அர்ப்பண புத்தியும்
நன்னிலையிலிருப்பின் தெய்வம் கொடுக்குக் கட்டிக்
கொண்டு முன்னின்றுதவும்" - என்றுள்ளார் வள்ளுவர்.

நம்மிற் பெரும்பாலோர் இத்தகு முயற்சிகளில் ஈடுபடாதிருப்-பதற்கான காரணத்தையும் நாடி பிடித்துப் பார்த்து, அதன் விளை-வையுங் கூடத் திருவள்ளுவர் சொல்லியேயிருக்கிறார்.

"குடி செய்வார்க்கு இல்லை பருவம்
மடி செய்து மானங்கருதக் கெடும்."

பருவம் பார்த்துச் சோம்பியிருத்தல், அதையென்னவோ கௌரவப் பிரச்சனையாக்கல் என்பன காரணம், குடியின் அழிவே அதன் விளைவு என்கிறார். மடி செய்தல், மானங்கருதல் இரண்டுக்கும் பரிமேலழகர் தந்துள்ள விளக்கம் ஆருமறியத்தகும். இந்த உணர்வூக்கத்தின் பேரில் நம்மத்தியில் இன்று நிலவும் சைவ ஞானச் சோர்வு தழுவிய சீர்கேடுகளைப் பலருமறிய எடுத்துரைத்து அங்கங்குள்ள பொறுப்புக்குரியவர்களை உற்சாகப்படுத்தி உரிய பரிகாரங்காண வேண்டியது நம் தலைக் கடனாகும்.

இப்போது யாம் செயத்தகுவான யாவை?

1. பலருமறிய இடம் பெறும் சைவ அவமதிப்புச் சீர்கேடுகளைத் தனிப்பட்ட முறையிலும், சங்கஞ்சங்கமாகவும் சைவ நம்பிக்கையுள்ள மகாஜனங்களுக்கு எடுத்து விளக்குதல், அவர்களிடத்தில் சைவஞான விளக்க விழிப்புணர்வை உதிக்கச் செய்தல் - இதன் விசேடபலனுமாம்.

2. எப்படியாவது பொறுப்புக்குரியவர்களுக்கு நிலைமையை உணர்த்தி அவர்கள் மூலம் உள்ள சீரழிவுகள் திருத்தமுறச் செய்வித்தல்.

முற்றுமுழுவதாக இது ஒரு சாத்வீக நடவடிக்கை. இதனால் நமக்கும் தாக்கமில்லை. பிறர்க்கும் தாக்கமில்லை. தேகக் கஷ்டமுமில்லை, பண நஷ்டமும் பெரிதாக ஒன்றுமில்லை. சகலர்க்கும் எளியதோர் காரியமிது. ஆதலால், ஒவ்வொருவரும் இப்புனித கைங்கரியத்தில் உடனடியாக ஈடுபட்டுச் சைவம் வாழ உதவுவார்களாக.

இதனைத் துடியாகவுணர்ந்து வட்டுக்கோட்டைப் பகுதிச் சைவத் தமிழ் மக்கள் சங்கங்கள் மூலம் இம்முயல்வைத் தாமாகவே முன்னெடுக்கவிருப்பதறிந்து அவர்களை போற்றுகிறோம்.

*வெகுதானிய மாசி — 20.02.1999*



## பிரசுரம் — ஒன்பது

### *எங்கே போகிறது சைவம்?*

சிவன் சிவனாக அறியப்பட்ட காலத்தில் இருந்து சைவர் மேற்கோளாய் இருந்தது ‘எல்லாம் சிவமயம்’ அது மெல்ல மெல்லத் தலை மறைவாகி எல்லாம். சங்கரமயம் என்றாகிறது இப்போது.

மலேசிய சைவகுரு ஒருவர் மலேசிய நண்பன் என்னும் தேசிய தினசரியில் “எல்லாம் சங்கர மயம்” எனக் கொட்டை எழுத்தில் பட்டை தீட்டிப் பட்டவர்த்தனமாகப் பிரகடனம் பண்ணி இருக்கிறார்.

நம் நாட்டுத் தலை நகரிலும் சிவஸ்ரீ ஒருவர், சங்கர பகவத் பாதாள் அவர்களின் சண்மத நெறியில் அவருடைய அத்துவைத ஞானப்பேறே என் ஆன்மாத்தம் அதுவே என் இலட்சியம் என, எழுத்தில் வடித்துக் கொடுத்திருக்கிறார் கொழும்புச் சைவ சஞ்சிகை ஒன்றுக்கு. யாழில் சிவாசாரிய பீடமொன்று காயத்திரி பீடம் என்ற பெயரில் வழங்குகிறது. காம கோடி பீடத்துக் குருபரம்பரை வழிபாடும் காயத்திரி ஹோமமும் அதன் சிறப்பு நிகழ்ச்சிகளாம். பிராமணர் பயிற்சி நிலையம் ஒன்று சைவப் பிராமணப் பிள்ளைகளைச் சேர்ந்து குருமார் பயிற்சிக்கென்று காமகோடி பிடத்திற்கு அனுப்பி வருகிறது.

இவைகளும் எல்லாம் எழுதப்படாத எல்லாம் சங்கரமயம் தான்,

இச் சங்கரர் என்பார் சைவ நாட்டில்தான் பிறந்தவர். ஆனால், தன் போக்கில் நிலை மாறிச் சுமார்த்த முதல்வர் ஆகிச் சண்மத ஸ்தாபகர் என விருது பெற்றவர். சைவ சித்தாந்தத்து விரோதியாய் உருத்த இவர் உண்மை வேதாந்தியும் அல்லர். மாய மயக் கந்தரும் மாயாவாதி ஆவர்.

சைவ மகிமை மட்டம் தட்டுவதற்கும் சைவ சித்தாந்தச் செல்வாக்கை ஒழித்துக் கட்டுதற்கும் குயுத்தியாகத் திட்டமிட்டுக் கடந்த எட்டாம் நூற்றாண்டில் அன்றிருந்த சைவ அமைப்பை இட்டம் போல் உருக்குலைத்துச் சண்மதமாக்கிச் சுமார்த்த மதம் என நாமகரணமும் சூட்டி வைத்தவர் அவர். சண்மதத் தலைவர் நாம் என்ற கோதாவில்

ஆறில் ஒன்றாகத் தாம் அமைத்துக் கொண்ட சைவத்திற்கு மட்டுமன்றி அவர் காலத்திற்கு முன்னமே பல்லாயிர ஆண்டு காலம் இருந்து வந்த இயல்பு சைவத்திற்கும் தாமே முதல்வர் எனக் கொண்டு தமது வாரிசுகளே என்றும் சைவ பரிபாலகர் என்ற நிலையை உறுதி பண்ணிவைக்கப் பகீரதப் பிரயத்தனங்கள் செய்தவர். என்றாயினும் பிறப்பறியாத சிவனது அவதாரமே தான் எனத் தன்னவர்களிற்கு அடித்து உணர்த்தி வைத்த அவர் முயற்சி பிரமாதமானது. இவரது ஆக்கமாக அமைந்த காஞ்சி காம கோடி பீடம் என்றென்றும் இந்நாட்டுச் சைவத்தை ஆக்கிரமிக்கும் நிலையையே கடைப்பிடித்து வந்திருக்கிறது. ஆனால் நால்வரையும், நாவலரையும் நன்குணர்ந்து அனுசரித்து வரும் எமது சைவர் விழிப்புணர்வுடன் இருந்து வந்ததனால் சென்ற தலைமுறையின் இறுதிவரை அதன் தந்திரங்கள், வேஷம் கொண்டு ஆடியதில்லை..

மலேசிய சைவகுரு காஞ்சி மடத்தில் குருப்பட்டம் பெற்றவராம். செஞ் சோற்றுக்கடன் கழிக்க அவர் "எல்லாம் சங்கர மயம்" என்றிருக்கலாம். தலை நகர்க்குருவும் அவசரத்திற் குருப்பட்டம் பெற்றவராம். படிப்பறிவறியாக் குறையால் அவரும் அங்ஙனம் பிதற்றி இருக்கலாம். ஆனால், பாரம்பரியசிவாகம சீலர்களாய் இருந்த யாழ்ப்பாணச் சிவாசாரியாரிடம் சிவாசாரிய அபிஷேகம் பெற்ற யாழ் சிவாசாரியர்களும் அத்தகையர் ஆதல் துணிச்சலான அதிக்கிரமம் என்பதல்லாற் சொல்லவேறில்லை.

ஆஞ்சநேயர் ஆலய அங்குரார்ப்பணம் யாழ்ப்பாணத்திற் பிரபல சிவாசாரியர்கள் பங்குபற்றுவார்கள். *(22.04.99 உதயன்)* - என்னும் போது இவர்கள் பற்றி வேறென்ன சொல்வதற்குண்டு.

சைவத்தில் தளிர் நீட்டும் உயர்தலைகள் தமக்கு கையாட்களாவர் எனக்கொண்டு தான் இந்த அக்கிரமச் சண்டித்தனம் கால் கொண்டிருப்பதாகச் சொல்லிக் கொள்கிறது சமூகம்.

சிவம் எல்லாவற்றிலும் உளர் என்றால், சைவ ஞான ரீதியாக அதன் தாற்பரியத்தைக் கற்றுத் தெரிந்து கொள்ளவோ கேட்டு விளங்கிக் கொள்ளவோ ஊற்றமில்லாக் குறையால் அது கொண்டு "அம்மிக் குழவியும் சிவன்', "ஆஞ்சநேயரும் சிவன்", எனக் கருதிக் கொண்டுவிடும் இவர் நிலைக்கு இரங்குவார் யாரோ? இனி மறுபக்கம்,

இதை ஆட்சேபிப்பானேன், சண்மதத்தில் ஆறு மதமும் சமன். அவற்றுள் சைவமும் ஒன்று. எம்மதத்து எவ் வழக்கமும் பரஸ்பர மதிப்பு நோக்கில் மற்றெம்மதத்திற்கும் விலக்கில்லை. அவ் வகையில்



வைஷ்ணவ சம்பிரதாயத்தில் உள்ள ஆஞ்சநேயர் வழிபாடு சைவ மதத்திற்கும் சம்மதமானதே என்பது எதிர்பக்க வாதம்.

ஆறும்சமம் எனில் அவை வேறுவேறாய் இருப்பானேன்? இலக்கணத்திற் பேதம் இல்லாத வழி இலக்கியம் பல வாதல் செல்லாதே, என்று கேள்வி எழுப்பினால் விடை கிடையாது. நீங்கள் கூறும் சமத்துவம் உண்மையானால் சாக்த வைஷ்ணவ மூர்த்தங்களைச் சைவாலயங்களில் சொருக நிற்கும் நீங்கள் சாக்த சைவ மூர்த்தங்களை வைஷ்ணவ ஆலயங்களில் சொருக முயலாதிருப்பது ஏன்? நீங்கள் அந்தப் பக்கம் தலைகாட்டவும் முடியாதிருப்பது ஏன்? என்றால் மௌனம் தான் பதில். (உங்களை போல அவர்கள் இடம் கண்டவர்கள் அல்ல என்பதே மௌன வியாக்கியானம்)

இனி சண்மதமாறுள் ஒன்று சைவம் என்றதும் ஏமாற்றுவித்தை. அது உள்வாங்கி இருக்கும் சைவம் தன் இயல்பான சனாதன சைவம் அல்ல. சித்திரவதைக்குள்ளான ஒரு சிறைக் கைதிச் சைவம் அது. சுளை வாங்கப்பட்ட தோலின் நிலையே அதன் நிலை.

சிவனுக்குரிய தன்னிஷ்டமான முழுத்துவ முதன்மைக்கு அதில் தலை வெட்டு. மூலமில்லா முதல்வன் சிவன் எனற சிவ இலட்சணத்திற்குத் தலை முழுக்கு. உயிர் தனியான உள் பொருள் என்ற உண்மைக்கு உலை வைப்பு. முத்தி தரும் முதல்வன் சிவனே என்ற அனுபவ உண்மைக்குத் திருமுறைகள் தரும் பொருட் சிறப்பிற்கு விசா நீக்கம். பஞ்சாட்சரப் பொருள் விசேடத்துக்குப் பலத்த அடி. சிவாகமங்களிற்கு வதிவிட உரிமையும் இல்லை. பொது மக்களின் சுய வழிபாட்டில் இருந்த குடும்ப தெய்வங்கள் கிராம தேவதைகள் வடமொழிப் புராணப் புனைவு தேவதைகள் இதிகாச பாத்திரங்கள் எல்லாவற்றிற்கும் சிவனோடு சர்வ சமத்துவம். பிரமாண்ட புராணத்தில் லலித உபாக்கியானத்தில், லலிதா சகஸ்ரநாம பகுதியில் பெயர் உள்ளது என்பதற்காகச் சாக்த தியான மூர்த்தமான இராசேஸ்வரிக்கும் சைவக் கோயிலில் பிரதிஷ்டை. இத்தியாதி இத்தியாதி மெத்தப் பல.

இந்தத் தண்டாமிடுக்குகளுக்குக் கெல்லாம் பின்னணி என்ன? பிரமம் தவிர மற்றெதற்கும் பொருள் உண்மையே கொள்ளாத சங்கரரின் மாயாவாத மயக்கமே இதன் பின்னணி. அது பற்றிக் கொஞ்சம்:-

பிரமம் ஒன்றே உள்பொருள். அறியப்பட்ட தெய்வீக முர்த்தங்களாகவோ லௌகீக முர்த்தங்களாகவோ இங்கு தோன்றுவன எல்லாம் விவர்த்தம். அதாவது ஒரு பொருளின்அது அல்லாதது ஒன்று காட்சிப்படுதல். அக்கட்சி எதனால் என்று கேட்டால், பிரமம் மாயை-

யோடு கூடியதனால் என்ற பதில். மாயை என்பது என்ன என்றால் எது இல்லாததோ அது மாயை, என்ற விடை. இந்த லட்சனத்தில் உள்ள தத்துவ ஞானம் தான் மாயாவாதம். இது பற்றி விசாரிக்கையில்,

உள்ளது எனப்படும் பிரமம் இல்லாததுஎனப்படும் மாயையொடு கூடியது என்றால், கூடி விளர்த்தம் விளைகிறது என்றால் இது என்ன விபரீதம்? என்று கேட்டால், பிரமம் தானே எல்லாம் செய்கிறதாய் இருக்கையில் அதனோடு பேரம் பேச நாம் ஆர்? என ஒரே மழுப்பலுடன் முடிவு கட்டப்பட்டதாய்விடும்.

இவ்வளவுக்குக் குதனக் கேடாகிறது இது, என்று ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக-நாவலர் காசிவாசி செந்திநாதையர், சேர் இராமநாதன், புலோலி சைவப் பெரியார் சிவபாதசுந்தரம், ஏழாலை சைவப் பெரியார் ஞானப்-பிரகாசம் - அதிகம் ஏன்? சைவசித்தாந்த அரிவரிப்பாடம் தெரிந்தவர் கூடக்கண்டித்து ஒதுக்கி வந்த மாயா வாதத்திற்கு ஆளணி சேர்க்கும் சுமார்த்தத்தை வாரி அள்ளி அணைத்துக் கொண்டு சைவ மேல் வரம்பாக நிறுவப்பட்ட சிவாசாரியர் சிலர் முன்னிற்கின்றார்கள் என்றால் இங்கு சைவம் எங்கே?

சிவன் தந்த அறிவையும் ஆற்றலையும் சிவ சமயமான சனாதன சைவ முதன்மைக்கே அர்ப்பணிக்கும் ஓர்மம் இன்றித் தப்புத் தாளம் பண்ணித் தமது தற்போதைய இமேஜைப் பேணுவதே சைவத் தலைகளின் தந்திரம் என்றால் இங்கு சைவம் எங்கே?

தாமும் சைவம் என்றும் சிவபக்தர் என்றும் பசப்பிக் கொண்டு, உள்நோக்கம்பற்றி, இந்துப் போர்வை போர்த்துக் கொண்டு சுமார்த்த சார்பு வழி தேடி ஓடித்தம் புகழ் பெருக்கும் சமய அபிவிருத்தி விலாசப் பிரியர்களும் உளர் என்றால் இங்கு சைவம் எங்கே?

சைவ ஞான விசாரத்திற்கும் விளக்கத்திற்கும் எனக் கொஞ்சமும் வைத்துப்பாராத வெறும் கிரியாகலாபக் கேளிக்கைளே கோயில் நிகழ்வுகள், வெறும் பரிசளிப்பு, பட்டமளிப்பு, பதக்கமளிப்புக் கலகலப்-புகளே சைவ சங்க நடவடிக்கைகள் என்றால் இங்கு சைவம் எங்கே?

அப்பட்டமான சைவ அதிக்கிரமங்கள் நேரும் பொருளாயினும் எதிர்க்குரல் எடுக்கப்பயந்து பதுங்கும் கோழைமையே சைவ ஆளுமை பிற்போக்கு நிலை தொடருமானால் இங்கே சைவம் எங்கே? இனி எங்கே? எங்கே?

*பிரமாதி — வைகாசி*





பாடத்திற் பற்றின்றிப் பரீட்சைப் பேறாம்.
பலனிலக் கறையின்றி நலனில் கேலிக்
கூடத்த படங்கீறி உடன் பயில்வோர்
குறியிழக்க நெறிகாட்டுங் குயுத்திச் சேய்போல்.
நீடத்தம் மரபறியுஞ் சிவனுக்குப் போல்
நிலையில்சிறு தேவதைக்கும் கோயில் செய்துள்
ளீடத்த கோதாகச் சைவ மாண்புள்
உவராரோ? உவர்சமயத் தினுக்கென் பேரோ?

## ஆஞ்சநேயர் சைவர் வழிபாட்டுத் தெய்வமல்ல.

நல்லழகி ஒருத்தி மீதெழும் பொறாமையினால் சாமானிய தரத்தில் உள்ள ஒருத்தியைச் சர்வாங்க லக்கண சுந்தரியாகச் சோடித்து மெச்சுதல் பொதுரசனைக் குரியதாகலாம். சமூகக் கேளிக்கைகளில் ஒன்றாக அதுவும் ஒரு வேளை சமூக மட்டத்தில் அனுமதிக்கப்படலாம். ஆனால், அம்மாதிரியான ஒன்று சமய மட்டத்தில் இடம் பெறுமானால் நிச்சயம் அருவெருக்கப்படும். ஏசி இகழப்படும். ஏனெனில், சமய விஷயம் எந்நிலையிலும் வேடிக்கை விநோதக்கேளிக்கைக் குரியதாவதில்லை என்பதனால்.

இந் நாளில் பேசப்பட்டு வரும் ஆஞ்சநேயர் கோயிற் சார்பிலாம் பொல்லாங்கை உணர வேண்டிய விதம் இவ்விதம். சைவத்திலாவது சைவக்கிரியைகளின் பலன் பாடான ஆன்மிகப் பேற்றிலாவது பற்றோ விசுவாசமோ அற்ற ஐயர்மார் சிலர் வேடிக்கை விநோதங்களாற் பொதுமக்களை மயக்கும் மாசாலம் இது.

ஆரிய புராண இதிகாச பாத்திரங்களோ பிழைப்புக்காக ஒரு சிலர் வாலாயம் பண்ணும் மந்திரோபாசனைத் தேவதைகளோ சைவத்தில்

ஆசார் முறைப்படியான வழிபாட்டுத் தெய்வங்களல்ல. அவற்றுக்குக் கோயில் எடுத்தல் பிரதிட்டை, கும்பாபிஷேகம் பண்ணல், நித்திய நைமித்தியங்கள் செய்து வழிபடல், சைவத்தில் அறியாமை வகையாற் கூட நேற்றுவரை இல்லாதவை. அதாவது, ஸ்மார்த்தம் என்ற ஒன்று நயவஞ்சகமாகச் சைவத்திற் புகுத்து நடமாட அனுமதிக்கப் படுமளவும் இருந்ததில்லை.

ஸ்மார்த்தம் என்றால் என்ன? என்று கேட்கத் தோன்றுகிறதா? சுருக்கமாகத் தெரிந்து கொள்ளுங்கள்.

மெய்ஞ்ஞானப் பேற்றுக்கு உதவாதவை என்று சிவாகமங்களாலும் சைவச் சான்றோர்களாலும் பல்லாயிரம் ஆண்டு காலமாகப் பகிஷ்கரிக்கப்பட்ட அதாவது, புறந் தள்ளிவைக்கப்பட்ட அநுமார் போன்ற தேவதைகளையும் சிவனிற்குச் சமனாகக் கொண்டு சிவமகிமையை அவற்றில் ஏற்றி- சைவத் தெய்வங்களிற்குச் செய்வது போல் சீராட்டுக்கள் பாராட்டுக்கள் எல்லாஞ் செய்து அதன் மூலம் சர்வஜன ஐக்கியத்தை வளர்க்கிறோம். வழிபாட்டு வேறுபாட்டை ஒழிக்கிறோம். பரமுத்திப் பேற்றை பரவலாக்குகிறோம். தேசிய ஐக்கியத்தை உருவாக்குகிறோம். எனப் பசப்பிக் கொண்டு சிலர் சுயநலப் பாங்கான தமது சமய பொறாமைக்குத் தீனி போட்டுக் கொண்டிருக்கும் சமய வடிவம் ஒன்று இருக்கிறது. சுமார் ஓராயிர வருஷகாலமாக அது இருக்கிறது. ஆதிச்சனாதன சமயமான சைவத்தை விழுங்கி ஏப்பமிடும் நப்பாசையால் "ஆவட்டை சோவட்டை" போட்டுக் கொண்டிருக்கிறது. அகிலப் பிரசித்தி பெற்ற சைவ சித்தாந்தத்தை அந்த சந்தங் கெட்டதென ஆன்றோர் தீண்டாத மாயா வாதம் எனும் தனது கோட்பாட்டை விட்டுக் கலக்கியடிக்க இருக்கிறது. பிறரால் தீண்டப்படாத பிராமண சமயமாக இருக்கிறது. இது எதுவோ அதுவே ஸ்மார்த்தம் என அறிதல் தகும்.

இதெல்லாம் ஆர் சொன்னது? எங்கே சொன்னது? என்று கேட்க வாய் துடிக்கிறதா? அப்படியானால் தயவு செய்து உடனடியாகவே, காஞ்சி காம கோடி பீடம் ஜசத்குரு சந்திரசேகர சரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள் அருளுரை 101 என்ற நூலைப் படித்து விடுங்கள். பிறகு பேசுங்கள் (பெரிய அளவிலான இந்நூல் ஆனந்தவிகடன் பதிப்பெனப் பல பகுதிகளாக வெளிவந்துள்ளது ) இது பற்றிய ஒரு குறிப்பும் இங்கு அவசியம்.

இதன் ஆசிரியராகிய சுவாமிகள் ஆழ்ந்தகன்ற அறிவாராய்ச்சிப் பெருங்கடல், மாசுமறுவற்ற தூய தவ ஒழுக்கத்தால் அனைவர் நன்



மதிப்புக்கும் உரியவர். மடாதிபதி என்ற நிலையில் மடக் கொள்கைளைத் தெளிவாகச் சொல்லியிருக்கிறார்.

இனி நேரேவிஷயத்திற்கு வருவோம்.

நாமறிய நாடறிய இப்போ இங்கே என்ன நடக்கிறது? சைவ சமயாசாரியர் நால்வர் நெறியை ஏற்றிப் போற்றும் நம் நாட்டில் - அந்நியர் ஆதிக்கத்தால் நால்வர் நெறி தளர்வுற நேர்ந்த தருணத்தில், ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் பெருமான் ஐந்தாங் குரவர் எனுமாறு தோன்றி, நால்வர் நெறியை வச்சிர லேபஞ் செய்து வைத்துள்ள யாழ்ப்பாணத்தில் - நாவலர் பணியை நன்கணம் மதித்து அவர் நன்மதிப்பிற்கும் ஆளாயிருந்து, அவர் வழியிற் பணியாற்றி அகிலமறிய விளங்கிய சைவத் தமிழ்ப் பெரு வள்ளல் சேர். பொன். இராமநாதன் அளப்பரும் பெரும் பரப்பில் அன்று போல் என்றும் நின்று நிலவத் தகும் அத்திவார பலத்துடன் அமைத்திருக்கும் மாபெருஞ் சைவ - தாபனம் விளங்கும் மருதனார்மடத் தருகில் தமிழ் சைவகலாசாரத்தில் இணையிலி எனப் பெயர் பெற்றுள்ள இணுவிலில் ஸ்ரீராமஜெபம் கொடியேறி ஆஞ்சநேயர் கோயில் அடியிடப்பட்டுக் கிடுகிடுவெனக் கிளம்புகிறது. நால்வரையும், நாவலரையும் அவர் வழித் தொண்டர் இராமநாதனையும் ஓரங்கட்டித் தூர வீசிவிடும் துணிச்சலான சமய சண்டித்தனம் இது வென்பதிற் தவறேதும் உண்டோ?

இது எதனால் நடக்கிறது? ஆட்டுவாரில்லாமல் ஆடுவாரில்லை. மேற் குறித்த ஸ்மார்த்தத் தூண்டுதலில் தான் இது நடந்தாகிறது என்றால், நம்ப முடிய வில்லையா? அப்படியாயின் குறித்த நூலின் அருளுரை 1இல், அஞ்சனை செல்வன் அஜாட்டியம் ஊட்டட்டும், என்ற தலைப்பில் உள்ளதை மீண்டும் ஒரு கால் வாசித்து நம்பிக்கை உறுதி பண்ணிக் கொள்ளுங்கள்.

இனி, சைவரல்லதார் இல்லாத நம் சைவ சமூகத்தில் ஸ்மார்த்தத் தூண்டுதலுக்கு எடுபடுவார் யார் என்பீர்களா? இங்கு சைவ அந்தணச் சிறுவர்களைத் திடீர் சிவாசாரியர்களாக்கும் பீடமொன்று சிவாசாரிய பீடமன்றிக் காயத்திரி பீடமெனும் விலாசத்தில் இருப்பானேன்? சிவாசாரியர் ஒருவரால் சிவாசாரியரான இப்பீடத் தலைவர் ஸ்மார்த்த குருவான சங்கராசாரியருக்கு இங்கு ஒரு வழிபாடு நடத்துவானேன்? காஞ்சி ஸ்மார்த்த மடத்து இளங் குருவுக்குங் கூடப் பிரபல்யமாகப் பாஞ்சவர்ஷிக ஜெயந்தி கொண்டாடுவானேன்? காயத்திரி ஹோமத்துக்கும் பிரசித்தி வழங்குவானேன்? நாவலர் நல்லையிலுள்ள

நியந்திசீபீடம் சைவக் கோயிற் குருமார் மைந்தர்களைப் பகிரங்க விளம்பர மூலந்திரட்டி மரபுக்கு விரோதமாக ஸ்மார்த்த மடத்திற் குருமார் பயிற்சிக்கனுப்புவானேன்? காயத்திரி பீடம் அவர்க்கு ஆரம்ப பயிற்சி கொடுத்துதவுவானேன்?

எல்லாவற்றுக்கும் மேலாக, பிரசித்தமான நம்நாட்டுச் சிவாசார்யத்துவம் பெற்றுச் சைவாலயக் குருக்கள் மாராயிருப்போர் சிவாசார்ய நாமவழக்குக்கு முழுக்குப் போட்டு விட்டுத் தம் ஒன்றியத்துக்கு, இந்துக்குருமார் ஒன்றியம் என விரோத நாமஞ் சூட்டிப் பிரகடம் பண்ணுவானேன்.

இவை பற்றி உண்மையில் ஏதும் அறியீர்களாயின் நம்நாட்டுத் தினசரி காரியாலயத்திலுள்ள பழம்பத்திரிக்கைக் கோவையை ஒருக்காற் புரட்டிப் பார்த்து விடத் தவறாதீர்கள்.

இவை எல்லாவற்றாலும் அறியக்கிடப்பதென்ன? மரபு வழி ஸ்மார்த்தப் பேரிலல்லாமல் மங்களகரமான சிவாசார்யர் பேரில் நம்மிடையிலும் ஸ்மார்த்தர் இருக்கிறார்கள் என்பது தான். குறித்த ஆஞ்சநேயர் கோயிலியக்க மூலத்தைத் துளைத்துப் பார்க்கையில் அங்கும் இவ்வகையார் சிலருளர் என்பது வெளிப்படை. இன்றைய றம் பொடைச் செய்தியின் பின்னணியிலும் அவர்களே தான். ஸ்மார்த்த வளாகத்தில் தங்களை இனம் காட்டும் உபாயமாகத் தமக்குத்தீக்ஷைப் பேறாகக் கிடைத்த சிவாசார்யப் பெயரை மறைத்து ஸ்மார்ந்தப் பெயராகிய இந்துவை வரித்துத் கொண்டு அதையே பிரகடனப்படுத்தித் தம்மைக் தாம் மறைத் தொழுகும் இவர்கள் நேர்மை என்ன நேர்மையோ! அஃதிருக்க,

நான்கிலட்சத்துக்கும் மேலான சைவர்கள் வாழும் யாழ் நாட்டில் - நாலாயிரத்துக்கும் அதிகமான சைவாலயங்கள் நிலவும் இந் நாட்டில் - நானூறுக்கும் மேற் பட்ட சைவர் சங்கங்கள் உள்ள நம் நாட்டில் இவர்களால் நிகழும் இத்தகைய சமய வரம்பு மீறலை வெளிப்படுத்தி அதற்கு எதிர்க்குரல் கொடுக்க எத்தனை பேர் நாமுளோம்?

ஒரு வேளை பிறர் குற்றத்திற்குருடராயிருக்கும் கௌரவ கண்ணியமாயிருக்கலாமோ எனில், அதில் அர்த்தமில்லையாகும். தனிப்பட்ட ஒருவனின் அந்தரங்க விஷயங்களில் மட்டுந்தான் இதற்குச் செல்லுமதி அன்றிப் பொதுத்தர்மம் பாதிக்கப்படும் விஷயத்தில் அதற்கனுமதியில்லை. அல்லது, சைவத்துக்குச் சமணத்தாற் பாதிப்பு நிகழ கேட்டது கேளா முன்னமே திருஞானசம்பந்தர் மதுரைக்குப் புறப்பட்டிருக்க முடியாது. நாவலர் பிரபந்தத்திரட்டில் சமய சமூக விஷய



கண்டனங்கள் இடம் பெற்றிருக்க முடியாது. அவை இல்லையேல் இன்று நாவலர் பிம்பம் நம் நினைவரங்கிற் பதிந்திருக்கவும் முடியாது.

திருஞான சம்பந்தரிலும் நாவலரிலும் துடியாக இருந்த இப்பண்புதான் சைவ ஆளுமை என்பது, சைவர் என்றொருவரை இனங்காட்டும் இலச்சினையும் இதுவன்றி இல்லை.

சம்பந்தப்பட்டவரின் வெறுப்புக்காளாகி விடக் கூடாதென்று ஆளுமையை மறைக்கும் கோழைமைப் போர்வை பூண்டு கொண்டிருப்பது தெரிந்து செய்யுந் தீவினை ஆவதன்றி நல்வினை ஆகாது ஏனெனில், அதனால் தற்காலிகமாகப் பாதுகாக்கப்படுஞ் சிலர் மேலும் மேலும் அவ்வித தவறுகளில் நிர்பயமாகவும் நிச்சிந்தனையாகவும் பயின்று அதன் பின் விளைவான அறக் கொடும்பாவத்துக்கு ஆளாக வைக்கும் மறக்கொடுந் தீவினை அது வாகலின்.

பொதுத் தர்மங்களை ஊரொத்து நிறைவேற்றுங் கடப்பாட்டை யாரும் மறாார். அது வாஸ்தவம் ஆமெனில் பொதுத்தர்மங்களைச் சிதைக்கும் முயற்சிகளை ஊரொத்து நின்று தடுத்தல் தவறென்பார் யாவரோ? சமயத்தை விஞ்சிய பொதுத்தர்மம் வேறில்லையெனல் சொல்ல வேண்டா. இன்று நம்நாட்டுச் சைவராயினர் முன்னுள்ள அத்தியாவசியக் கடமை இது என வற்புறுத்தல் மிகையாகாது.

உலகத்துச் சமயங்களுள் வழிபடுதெய்வ இலட்சணங்களைச் சுருதி, யுக்தி, அநுபவங்களுக்கு விரோதமில்லாமல் முழுமையாக விளக்கும் சமயம் சைவம் ஒன்றே. இறைவன் எனப்படுபவன் எப்படி எப்படி இருக்க வேண்டுமென்றும் அப்படி இருக்குமவன் சிவன் ஒருவனே என்றும் சைவ ஞான நூலாகிய சிவஞானசித்தியார் செய்யுள் கூறுவதை இங்கு காண்போம்.

"இறைவன் ஆவான் ஞானம் எல்லாம் எல்லா
முதன்மை அநுக்கிரக மெல்லாம் இயல்புடையான்" - இறைவன் என்ற பெயர்க்குரியவன் எல்லா வகை ஞானமும் எல்லாவித மேன்மையும் எல்லாவித அநுக்கிரகமும் இயல்பாகவே உள்ளவன்.

சிவற்கே - சிவன் ஒருவருக்கே
இயம்பும் மறைகள் ஆகமங்களினால் எல்லா அறிவும் - போற்றும் அவர் கூற்றாகவுள்ள வேதங்களும் சிவாகமங்களும் தெரிவித்திருக்கும் எல்லா அறிவும்; தோற்றமாகும் மரபின் வழி வருவோர்க்கும் வாராதோர்க்கும் அவ் வேதாகம மரபின் வழி ஒழுகுவோருக்கும் அதில்

தவறுவோர்க்கும், முறைமையினால் இன்ப துன்பப் பலனும் கொடுத்த-லாலே - அரைவர் ஒழுக்க முறைக்கிணங்க இன்பப் பலனுந் துன்பப் பலனும் கொடுத்தல் பற்றி, எல்லா முதன்மை - நாம் அறிந்தும் எல்லாவற்றிலும் முதன்மை பெறுதலாகிய முடிவிலாற்றல் இருத்தலை நாம் அறியக் கூடியதாயிற்று. இரண்டு போகத்திறமதனால் வினை-யறுக்குஞ் செய்தியாலே - அங்ஙனம் இருவகை அநுபவத்தை ஊட்டுதல் வாயிலாக அவற்றுக்குக் காரணமாயிருந்த (உயிரின்) இருவினைத் தொடக்கை நீக்கும் ஏதுவினால்,

சேரும் எல்லா அநுக்கிரகமும் நாம் காணுதும் - நிறைந்த பேரருள் உடைமையும் நாம் காணக் கிடந்தது.

சிவஞான சித்தியார் எட்டாம் சூத்திரத்துப் பதினேழாஞ் செய்யுளும் உரையும் இருந்தவாறு இது. இதனால் சிவனுக்கு மட்டுமே இறைவனாந் தன்மையும் வழிபடப்படுந் தன்மையும் உண்மை பெறப்படும். இவ் உண்மையின் வழி நிற்பது சைவம். இதற்கு வேத சிவாகம ஆதாரமுண்டு. அநுமார் முதலியவற்றுக்கு மேற்குறித்த அரும் பண்புகளுமில்லை. இல்லாமையால் வேதாகம அத்தாட்சியுமில்லை. அநுமான் மகிமை பேசும் புராணம் இதிகாசங்கள் வேதமுமல்ல, ஆகமமுமல்ல. அவற்றைப் பிரமாணமாகக் காட்டுவது ஸ்மார்த்தச் சூழ்ச்சி. அதில் விழுவது சைவர் கடமையாகாது. அல்ல வெனில் இறைவன் இலட்சணம் தெரியாத முடச் சமயம் சைவம் என்ற வீண் பழிக்கும் சைவத்தை ஆளாக்குந் தோஷம் விளையும். இதற்கு ஆளாக நமக்கென்ன கெடுமதியோ?

மேலும்,

சிவனைப் போல் தெய்வம் தேடினும் இல்லை
அவனை அறியா அமரரும் இல்லை! - திருமந்திரம்

எம்பரிசாயினும் ஏத்துமின் எந்தையை
அப்பரி சீசன் அருள்புரி வானே. - திருமந்திரம்

சிவன்என யானுந் தேறினன் காண்க
அவன்எனை யாட்கொண் டளித்தனன் காண்க - திருவாசகம்

சிவன் எம்பிரான், என்னை ஆண்டு கொண்டான் என் சிறுமை கண்டும்
அவன் எம்பிரா னென்ன நான் அடியே னென்ன இப்பரிசே
புவன் எம்பிரான் தெரியும் பரிசாவ தியம்புகவே - திருவாசகம்



சிவனெனும் ஓசையல்ல தறையோ உலகில்
திருநின்ற செம்மை உளதே - அப்பர் சுவாமிகள்

ஏக பெருந்தகை ஆகிய பெம்மான் - திருஞானசம்பந்தர்

இவை போன்ற திருமுறை வாசக உணர்த்துதல்கள் ஏராளம்

மேலும்,

1. நீண்ட நெடுங்காலச் சைவ ஞான பாரம்பரியத்தில் அநாதியே உயிருட் புகுந்துள்ளான் சிவன் - ஆஞ்சநேயரல்ல.
2. என்றென்றும் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் உயிருடன் இருந்து வாழ்வளிப்பவன் சிவன் - ஆஞ்சநேயரல்ல.

   உயிரின் பாசந்தீர்த்துப் பரகதிப் பேறளிப்பவன் சிவன் ஆஞ்சநேயரல்ல.
3. பாசந்தீர்ந்து பெறும் மோட்ச நிலையில் தேனாய் இன்னமுத-முமாய் தித்திப்பவன் சிவன் - ஆஞ்சநேயரல்ல.
4. பிறப் பிறப்புத் தொந்த முள்ள மனிதர்
   பிறப்பிறப்புத் தவிர வேண்டித் தொழுதற் குரியவர்
   பிறப்பற்ற சிவன் அன்றி,
   பிறந்துழல்பவராகப் புராண இதிகாசங்கள் சொல்லும் ஆஞ்ச-நேயரல்ல.
5. சிவனை வழிபட்டுச் சைவராயிருந்து சிவோ ஹம் பாவனை பண்ணிச் சிவ மயமாதலே சைவந்தழுவும் வாழ்க்கைப் பேறு அன்றி, ஆஞ்ச நேயரை வழிபட்டுச் சைவரல்லாதாராயிருந்து ஆஞ்சநேயோ ஹம் பாவனை செய்து அவராவதல்ல.

   அதிகம் ஏன் ? சைவர்க்கு ஆஞ்சநேயர் வழிபடு தெய்வம் ஆகார்.

*பிரமாதி — ஆவணி — 15.08.1999*

## இலக்கிய கலாநிதி பண்டிதர் மு. கந்தையா B.A

கலாநிதி மு. கந்தையா அவர்கள் தமிழில் புலமை மிக்க பண்டிதர்; சமஸ்கிருதத்தில் கலைமாமணி பட்டம் பெற்றவர்; ஆங்கில அறிவும் கைவரப் பெற்றவர்; சைவ சமய தத்துவ ஆராய்ச்சியிலேயே தம் வாழ்க்கையை ஈடுபடுத்திவருபவர்; வயது முதிர்ந்த காலத்திலும் ஓய்வை நாடாது இத்துறையில் அயராது உழைப்பவர்; சைவசித்தாந்தத்தின் உயர் மாண்பை உலகம் நன்கு உணரல் வேண்டும் என்ற நோக்குடையவர். உயிரின் ஈடேற்றத்திற்கு உறு துணையாக நின்று உதவ வல்லது சைவ சித்தாந் தம் என்ற கருத்துடையவர். சைவ ஆராய்ச்சித்துறை நம் மத்தியில் சிறந்து விளங்க வேண்டும் என்பது இவ்வாசிரியரின் வேணவா.

——————— கலாநிதி கா. கைலாசநாதக் குருக்கள்

பண்டிதர் திரு. மு. கந்தையா. பி.ஏ அவர்கள் மும்மொழி வல்லவர். சித்தாந்த சாஸ்திரங்களிலும் திருமுறைகளிலும் முழுகித் திளைப்பவர்; அவர் பொழுது தவப்பொழுது; அவர் வாழ்க்கை சமய வாழ்க்கை; அவருடைய அறிவுச் செல்வம் 'பயன் மரம் உள்ளூர்ப் பழுத்தற்று'; பல்வேறு இடங்களில் சித்தாந்த வகுப்பும் புராண வகுப்பும் நடாத்தி வருபவர்; இவ்வாறாயதோர் 'ஊருணி' யைக் காண்டல் அரிது! அரிது!!

இலக்கிய கலாநிதி பண்டிதமணி

——————— சி. கணபதிப்பிள்ளை